# திருப்பேரூர்
# பச்சைநாயகி அம்மன்
# பிள்ளைத்தமிழ்



நூலாசிரியர்
சிரவையாதீனம்
தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

# திருப்பேரூர்
# பச்சைநாயகி அம்மன்
# பிள்ளைத்தமிழ்


நூலாசிரியர்

**சிரவையாதீனம்**

## தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

உரையும் பதிப்பும்

சிரவையாதீனக் கவிஞர்

**பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்**





வெளியீடு

சிரவைக் கௌமார சபை

கௌமார மடாலயம், சின்னவேடம்பட்டி

கோவை - 641 049

2014

பங்குனி உத்திரத் திருநாள் வெளியீடு

வெளியீட்டு எண் : *333*

நூற் பெயர் : **திருப்பேரூர் பச்சைநாயகியம்மன் பிள்ளைத்தமிழ்**

நூலாசிரியர் : சிரவையாதீனம்
**தவத்திரு கந்தசாமி சுவாமிகள்**

உரையும் பதிப்பும் : பெரும்புலவர்
**ப.வெ. நாகராஜன்**

வெளியீட்டு நாள் : *13.04.2014* (ஞாயிற்றுக்கிழமை)

படிகள் : 500

விலை : ரூ. 70.00

அச்சிட்டோர் : **சௌமி அச்சகம்**
*1E*, துடியலூர் சாலை,
சரவணம்பட்டி,
கோவை - *641 035.*
அலைபேசி : *98422 52779*

நூல் கிடைக்குமிடம் : தலைவர்
கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி,
கோவை - *641 049.*
தொலைபேசி : *0422-2666370*

# ஆசியுரை



*தவத்திரு குமரகுருபர சுவாமிகள்,*
**சிரவையாதீனம்**

நம் தமிழ் நாட்டின் கொங்கு மண்டலம் செய்த மாபெரும் தவப்பயனாய்த் தோன்றியவர் சிரவையாதீனத்தைத் தோற்றுவித்தருளிய சந்நிதானங்களாகிய தவத்திரு இராமானந்த சுவாமிகள். அவருடைய திருவருள் நோக்கத்தால் உருவானவர் கொங்குநாட்டுக் கச்சியப்ப முனிவர் எனப் போற்றப்படுகின்ற தவத்திரு கந்தசாமி சுவாமிகள். இவர்கள் சிரவையாதீனத்தின் இரண்டாம் பட்டத்தில் வீற்றிருந்து இப்பகுதியில் கொலைபுலை நீக்கம், ஆலய வழிபாடு, சமய அடிப்படை அறிவு பெறுதல் ஆகிய நோக்கங்களுக்காக அயராது உழைத்து அவற்றில் வெற்றி கண்டவர்.

தவத்திரு கந்தசாமி சுவாமிகள் அவர்களால் இயற்றப்பட்டுள்ள 103 திருமால் அடியார்களின் புனித வரலாறாகிய பக்தமான்மியப் பெருங்காப்பியம் (7373 விருத்தங்கள்), மூன்று தல புராணங்கள், ஆறு பிள்ளைத் தமிழ்கள், கோவை கலம்பகம், சிலேடை வெண்பா ஒவ்வொன்று, பல மாலை வகைகள், பல அந்தாதி வகைகள், பதிகங்கள் எனச் சற்றேறக்குறைய 15000 செய்யுள்கள் இப்பொழுது கிடைக்கின்றன. இவர் உரைநடை நூல், செய்யுளுக்கு உரை ஆகியவற்றையும் படைத்துள்ளார். இத்தனைப் பெரிய செந்தமிழ்க் கவிஞருக்கு இலக்கிய வரலாற்றாசிரியர்கள் உரிய இடத்தை வழங்கவில்லை.

கௌமார மடாலயத்தின் அடியார்கள்கூடத் தவத்திரு சுவாமிகளை ஓர் உயர்ந்த ஆன்மீகக் குருநாதராக மட்டும் அறிந்திருந்தார்களேயன்றி அவருடைய சிறந்த புலமையையும் படைப்பாற்றலையும் சற்றும் அறியாதவர்களாகவே இருந்தனர். இந்த நிலையை மாற்ற வேண்டும் என்னும் பேரவா

எம் குருநாதர் போற்றுதலுக்குரிய கஜபூசைச் சுவாமிகளின் திருவுள்ளத்தில் அழுத்தமாக இருந்தது. அத்தகைய குருநாதரின் திருவருளால் இப்போது அந்நிலையை மாற்றச் சிரவையாதீனம் தக்க பணிகளைச் செய்து வருகிறது.

தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் இலக்கியங்கள் ஒவ்வொரு தலத்திற்கு உரியனவாகத் தொகுத்து சுருக்கமான எளிய உரையுடன் பதிப்பிக்கப்பட்டு வருகின்றன. இவையேயன்றி தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பனுவல் திரட்டு என்னும் பெயரில் சில தொகுதிகளில் இவருடைய படைப்புக்கள் அனைத்தையும் வெளிக்கொணரத் தொடங்கி மொத்தம் 32 பிரபந்தங்கள் (2000 செய்யுள்கள்) அடங்கிய முதல் தொகுதி 2012ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. இரண்டாம் தொகுதி உருவாகிக் கொண்டுள்ளது. விரைவில் வெளிவரும். இந்த இலக்கியப் பணிகளில் தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் தமிழாய்வு மையச் செயலாளர் பெரும்புலவர் திரு. ப.வெ.நா. அவர்கள் ஈடுபட்டு வருகிறார்.

இப்பொழுது திருப்பேரூர்ப் பச்சைநாயகியம்மன் பிள்ளைத்தமிழ் குறிப்புரையுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளது. போற்றுதலுக்குரிய தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் அபிமானத் தலங்களுள் ஒன்று திருப்பேரூர். சுவாமிகள் இத்தலத்தொடர்பாக அகப்பொருட்கோவை உட்படப் பல சிற்றிலக்கிய வகைகளை (மொத்தம் 1322 பாடல்கள்) இயற்றியுள்ளார். அவற்றுள் பேரூர்ப்பட்டிநாயக மாலையும் பச்சைநாயகி மாலையும் முதல் தொகுதியில் இடம்பெற்றுள்ளன. பிள்ளைத்தமிழ் இப்போது தனியாக வெளிவருகிறது. பிள்ளைத்தமிழ்த் திரட்டாக அமையும் இரண்டாவது தொகுதியிலும் இது இடம்பெறும்.

தவத்திரு சுவாமிகளின் நடை சற்றுக் கடினமாக இருந்த போதிலும் இலக்கியச் சுவை நெய்யில் தோய்த்த பலாச்சுளை போன்றது. சுவாமிகளின் பிள்ளைத்தமிழ் நூல்கள் அனைத்துமே இலக்கண வரம்பு செப்பமாக அமைந்த செவ்விய நூல்கள் ஆகும். பச்சைநாயகியம்மன் பிள்ளைத்தமிழின் மூன்றாவது பதிப்பாக வரும் இதில் படிப்பவர்களின் நலம் கருதிச் செய்யுள்கள் பதம்பிரித்துக்



நூலாசிரியர்
தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

அணிநீடு கந்தச்சு வாமியே ! அதிஆர்வம் மிஞ்சச்சொல் பேசுவீர் !
திணியான சந்தத்தை ஓதுவீர் ! திறல்கூறும் இன்பத்த யாளரே !
தணியாத சிந்தைத்தி யானரே ! தவவாழ்வு மிஞ்சக்கொள் மேன்மையீர் !
மணிநீறு துன்றக்கொள் மேனியீர் ! வளர்மேன்மை என்றைக்கும் வாழியே !
– தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள்

இந்தப் பிள்ளைத்தமிழ் நூல், நாதேகவுண்டன்புதூர்
திரு. **ந.ப. செல்லப்பகவுண்டர்** அவர்களின்
பொருளுதவி கொண்டு வெளியிடப்படுகிறது.

கொடுக்கப்பட்டுள்ளன. போதுமான அளவு உரை காணப்பெற்றுள்ளது. பக்தி உணர்வோடு மட்டும் அல்லாமல் இலக்கியச் சுவைக்காகவும் இத்தகைய நல்ல தமிழ்ப் பனுவல்களை அன்பர்கள் போற்றிக் கற்க வேண்டும் என விழைகிறோம்.

இந்தப் பிள்ளைத்தமிழுக்கு உரை கண்டு நன்கு பதிப்பித்துள்ள சிரவையாதீனக்கவிஞர் பெரும்புலவர் திரு. ப.வெ.நா. அவர்களுக்கு எம் பாராட்டுக்கள். தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் இலக்கிய வெளியீட்டுப் பணிகளில் ஈடுபடும் அனைவரும் குருவருளாலும் இறைவன் திருவருளாலும் எல்லா நன்னலங்களும் பெற்று நீடினிது வாழ வாழ்த்துகின்றோம்.

**இச்சைஎல்லாம் ஈந்தே இனிப்பிறவாமல் காக்கும்**
**பச்சையம்மை பிள்ளைத் தமிழ்ப்பனுவல் - மெச்சிப்**
**படிப்பவர்கள் என்றும் பலவளமும் பேரும்**
**படித்தலத்தே பெற்றிடுவர் பார்**



# பதிப்புரை

பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்
கௌமார மடாலயம்

பிள்ளைத்தமிழ் என்பது தமிழ்ச் சிற்றிலக்கிய வகைகளுள் மிக அதிகமாகப் பாடப்பட்ட ஒரு பிரபந்தம் ஆகும். இதுவரை ஏறக்குறைய 500 பிள்ளைத்தமிழ்ப் பனுவல்கள் இயற்றப்பட்டுள்ளன. கடவுளர்கள், அருளாளர்கள், புலவர்கள், முடிமன்னர்கள், சிற்றரசர்கள், பெருநிலக்கிழார்கள், வள்ளல்கள், இந்நாள் அரசியல் தலைவர்கள் என எல்லாத் தரப்பினரையும் போற்றிப் பிள்ளைத்தமிழ் எழுந்துள்ளது. இந்த அமைப்பையே பின்பற்றி வசை இலக்கியமாக நொள்ளைத் தமிழ் எனவும் ஒன்று உருவாகி உள்ளது.

பொதுவாகப் பாட்டியல்கள் சிற்றிலக்கியங்களைப் பட்டியலிடும்போது முதலில் பிள்ளைத்தமிழைக் குறிப்பிடுகிறது. "பிள்ளைக்கவி முதல் புராணம் ஈறா" என்பது பிரபந்த மரபியல் தொடர் ((1). பிள்ளைத்தமிழின் அடிப்படை இலக்கணமும், பாட்டுடைத் தலைவரைக் கொண்டு அது ஆண்பால் பெண்பால் பிள்ளைத்தமிழ் என இருவகைப்படும் என்பதும் அனைவரும் அறிந்ததே. "குழவி மருங்கினும் கிழவதாகும்" என்னும் தொல்காப்பிய நூற்பா (1034) பொதுவாகக் குழந்தைகளையும் பாடுபொருளாகக் கொண்டு பாடலாம் எனக் கூறுகிறதேயன்றிப் பிள்ளைத் தமிழாகிய சிற்றிலக்கிய வகைக்கு அது இலக்கணம் ஆகாது. பெரியாழ்வார் பாடிய குழந்தைக் கண்ணன் பாடல்களே இவ்வகைப் பிரபந்தத்திற்கு வழிகாட்டி எனலாம். இப்போதுள்ள பத்துப்பருவம், நூறு செய்யுள் என்னும் வரையறை பெற்ற பிள்ளைத்தமிழ் வகையில் இப்பொழுது கிடைப்பனவற்றுள் மிகப்பழமையானது 12ஆம் நூற்றாண்டில் ஒட்டக்கூத்தர் இயற்றிய குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ் ஆகும்.

காப்புப் பருவத்தின் முதற்பாடலாகத் திருமாலைப் பாடவேண்டும் என்பது பழைய பாட்டியல் விதி. ஆனால்

மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் முதன் முதலில் இவ்விதியை மீறிவிட்டார். திருமாலைத்தான் முதலில் பாடவேண்டும் என்னும் பழைய பாட்டியல் கட்டுப்பாடு இப்பொழுது தளர்ந்துவிட்டது.

காப்புப் பருவத்தில் தெய்வங்களை வேண்டும்போது அவர்தம் மறச்செயல்கள் ஆகிய கொலைத்தொழிலை நீக்கி அருள் தன்மையை மட்டுமே குறிப்பிட வேண்டும் என்பது பழைய நெறி. இந்தக் கட்டுப்பாடும் இப்பொழுது நடைமுறையில் இல்லை. குமரகுருபரரே தம் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் சிவபிரானை,

**"சிகர வடவரை குனிய நிமிர்தரு**
**செருவில் ஒருபொரு வில்எனக் கோட்டினர்"**

என அறிமுகப்படுத்துகிறார். இந்தப் பச்சைநாயகி பிள்ளைத்தமிழிலும்

**"சேண்ஆர் கதிர்வலம்ஆ மேருவை எதிர்**
**சேரார் குலம்அற வில் எனக் கோட்டினர்"**

என அவ்வரலாறே முன்வைக்கப்படுகிறது.

பொதுவாகப் பிள்ளைத்தமிழ் என்பது பத்துப் பாட்டுகளை உடைய பத்து பருவங்களாகப் பாடப்பட வேண்டும் எனினும் சில விலக்குகளும் காணப்படுகின்றன. பருவத்துக்கு ஒரு பாடல். மூன்று பாடல்கள். ஐந்து பாடல்கள் என இயற்றப்பட்டுள்ள பிள்ளைத்தமிழ்களும் அருகிக் காணப்படுகின்றன. இந்தப் பச்சைநாயகி பிள்ளைத்தமிழை இயற்றியருளியுள்ள சிரவைக் கந்தசாமி சுவாமிகளைப் போற்றிக் கவியரசு கு. நடேச கவுண்டர் அவர்கள் இயற்றியுள்ள பிள்ளைத்தமிழ் பருவத்துக்கு ஐந்து செய்யுள்களை உடையது.

பிள்ளைத்தமிழ்ப் பாடல்கள மிகப்பெரும்பாலும் இரட்டை ஆசிரிய விருத்தம், (12, 14 சீர் ஆசிரிய விருத்தங்கள்), அதே அளவுள்ள சந்தவிருத்தங்கள், வண்ண விருத்தங்கள் ஆகியவற்றால் அமைக்கப்பெறுகின்றன. இங்கு

பதிக்கப்பெறும் திருப்பேரூர்ப் பச்சைநாயகி அம்மன் பிள்ளைத்தமிழ் இப்பொழுது நடைமுறையில் உள்ள இலக்கணங்கள் அனைத்தும் நிரம்பியுள்ள ஒரு செவ்விய இலக்கியம் ஆகும்.

தவத்திரு சிரவைக் கந்தசாமி சுவாமிகள் அவர்கள் மொத்தம் ஆறு பிள்ளைத்தமிழ்ப் பனுவல்களை இயற்றியுள்ளார். அவற்றுள் இது ஒன்று மட்டுமே பெண்பாற் பிள்ளைத்தமிழ். இதில் பாயிரமாக இரண்டு செய்யுள்களும், நூலாக நூறும், நூற்பயனாக ஒன்றும் ஆக மொத்தம் 103 பாடல்கள் உள்ளன. இதன் காப்புப் பருவத்தில் முதல்பாட்டைத் தவிர ஏனைய ஒன்பதும், அடுத்த ஒன்பது பருவங்களிலும் ஈற்றுச் செய்யுள்கள் மூன்றும் வண்ணக்கவிகளாகவே அமைந்திருப்பதைக் கொண்டு இச்சுவாமிகளுக்கு வண்ணயாப்பின் மீதுள்ள பேரார்வத்தையும் புனை திறனையும் அறிய இயலுகிறது.

இப்பிள்ளைத்தமிழ் 1940 ஆம் வருடம் திருப்பேரூர் அருள்மிகு பட்டிப்பெருமான் திருக்கோயில் பிரம்மோற்சவத்தில் அரங்கேற்றப்பட்டது. இதன் முதல் பதிப்பு அதே ஆண்டு பச்சைநாயகி அம்மை மாலையோடு சேர்த்துச் சிரவைக் கௌமார சபையாரால் வெளியிடப்பட்டது. சென்னைப் பல்கலைக்கழகம் புலவர் இடைநிலை வகுப்புக்குப் பாடநூலாக வைத்ததையொட்டி மாணவர்களின் பயன்பாட்டிற்காக அரும்பதக் குறிப்புக்களுடன் 1974 இல் இதன் இரண்டாம் பதிப்பு வெளியிடப்பட்டது. இதன் அரும்பதக் குறிப்புகள் சிரவை தவத்திரு தம்பி சுவாமிகள் என வழங்கப்பட்ட தவத்திரு மருதாசலசாமி அவர்களால் எழுதப்பட்டதாகத் தெரிகிறது.

இப்பொழுது சற்று விரிவான உரையுடன் மூன்றாவது பதிப்பு வெளிவருகிறது. இந்தப்பதிப்பில் அன்பர்கள் படித்து எளிதில் புரிந்துகொள்ள வாய்ப்பாகப் பாடல்கள் சந்தி பிரித்துத் தரப்பட்டுள்ளன. மிக விரிவான உரை எழுதப்படவில்லை; எனினும் இன்றியமையாத அரும்பத உரையும், விளக்கமும், இலக்கணக் குறிப்பும் இடம்பெற்றுள்ளன. இந்த நூலைச்

சுவைக்க இவை போதுமானவை என நம்புகிறேன். இதன் முதல் பதிப்பில் அமரர் கவியரசு கு. நடேச கவுண்டர் ஐயா அவர்கள் எழுதியுள்ள முகவுரை இதனை அடுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது.

அடுத்து வெளிவரவுள்ள தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பனுவல் திரட்டு பகுதி 2 பிள்ளைத்தமிழ்க் கொத்தாக அமைகிறது. அதிலும் இந்தப் பச்சைநாயகியம்மன் பிள்ளைத்தமிழ் குறிப்புரையுடன் இடம்பெறும். இந்த நற்றமிழ்ப் பணிகளில் இடையறாது என்னை ஈடுபடுத்தி வரும் சிரவையாதீன கர்த்தர் அவர்கள் திருமுன்புக்கு என் பணிவான நன்றிகளை உரிதாக்கிக் கொள்கிறேன்.

இந்தப் பிள்ளைத்தமிழ்ப் பனுவலை மிகுந்த ஆர்வத்துடன் அழகாக உருவாக்கி அளித்துள்ள சௌமி அச்சக உரிமையாளர்கள் திரு. தே. திருஞானசம்பந்தன், திருமதி. ந. லோகநாயகி இணையர் தனை நிகர் பேரூர் மரகதவல்லியின் கடைக்கண் அருளால் சகல செல்வ யோகம் மிக்க பெருவாழ்வு வாழ்ந்து, தொடர்ந்து தமிழ்ப்பணியாற்றி, புகழ்பெற்று நீடுவாழ வாழ்த்துகிறேன்.





பட்டிப் பெருமான் விமானம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

கோயமுத்தூர் ஊராண்மைக் கழக உயர்தரப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியரும், இந்நூலாசிரியரது மாணவருமான

**வித்துவான் கு. நடேசக் கவுண்டரவர்கள்** P.O.L

[மேனாள் முதல்வர், தவத்திரு சாந்தலிங்க அடிகளார், தமிழ்க்கல்லூரி, பேரூர்]

எழுதிய

## முதற்பதிப்பின்

## முகவுரை

**வேதாக மப்பவுரி, வீசுங் களாச நிலை**
**ஆதார வெற்பில் அபிடேகம்-போதத்(து)**
**இருளில்எழு பானு எனதொழிவில் இன்பக்**
**கருணைபொழி வான்எடுத்த கை**

(ஒழிவிலொடுக்கம்)

திருப்பேரூர்ப் '**பச்சைநாயகியம்மை பிள்ளைத்தமிழ்**' என்னும் இவ்வரும் பெறற் பனுவலுக்கு முகவுரை எழுதும் பேறு வாய்த்தமைக்குப் பெரிதும் மகிழ்கின்றேன். '**பச்சைநாயகி பிள்ளைத்தமிழ்**' என்பது செய்யுட்பிறிதின் கிழமையாகிய ஆறும் வேற்றுமைத் தொகை, "பாரியது பாட்டு" என்பது போல் பிள்ளைத்தமிழ் என்பது தமிழ்மொழிக் குரிய தொண்ணூற்றுறு வகைப்பிரபந்தங்களில் ஒன்று. இது வித்தாரகவியின் பாற்படும் என்பது, "வித்தார கவிக்கெலா முன்னுறவியன்ற பிள்ளைக்கவி" என்னும் மாதவச் சிவஞான முனிவரது கூற்றுல் விளங்கும்.

இப் பிள்ளைத்தமிழின் பாட்டுடைத் தலைவியாகிய பச்சைநாயகியம்மை மனவாக்குக் கெட்டாத சிற்சத்தியாயினும், மன்பதைகளுய்யவேண்டி மலையரையன் முதலியோர்பால் மகவாயுதித்து வளர்ந்த பெருங்கருணைச் செல்வியாதலால், அவளை மகவாகப் பாவித்துப் பாடும் பனுவல்களுக்கு, உளமுவந்து திருவருள் புரிவாள் என்பதிற்

சிறிதும் ஐயமில்லை. இவ்வம்மைக்குப் பிள்ளைத்தமிழ் ஒன்று, முன்பும் ஒரு புலவராற் பாடப் பெற்றுளதெனினும் (இது ஓராட்டைக் குப்பைச் செட்டிபாளையம் முத்து நயினாத்தை முதலியாரால் இயற்றப்பட்டது). பின்பு தோன்றிய இதனையும் உவந்தேற்றருள்வாள் என்பதற்கு, அவள் மலையரையன் மகளானதேயன்றி மலையத்துவசன் முதலோர்க்கும் மகளாய்த் தோன்றியதே சான்றாகும்.

## "இந்நூலாசிரியர்"

**வண்ணச் சரபம் திருப்புகழ்ச்சு வாமி தண்ட பாணியெனும்**
**அண்ணல் முருக தாசனரு ளமுத வாரி தனைமுகந்து**
**மண்ணி லிடித்து மின்னுமல் வழங்கு மிராமா னந்தமுகிற்**
**றண்ணந் துளியால் விளைந்தமுத்தந் தனைநேர் கந்தசாமியே**

இவரது வரலாறு இதுவரையில் வெளிவந்துள்ளவாய இவரது நூல் பலவற்றின் பாயிரங்களின் வாயிலாய் அன்பரனைவரும் நன்கறிவராதலின், ஈண்டு விரிக்காது விடுக்கின்றேன்.

பெரிதும் திரிசொற்களான் இயன்று ஓர்ந்துணரும் பொருளவாய் மிளிரும் இந்நூலுக்குக் குறிப்புரையேனும் எழுதி வெளியிட்டிருப்பின் சால நன்மைதரும். பங்குனி உத்தரத்திருநாளன்று அரங்கேற்ற வேண்டும் என்ற நோக்கத்தால் போதிய அவகாசமின்மையால் அவ்வாறு செய்தற்கியலவில்லை போலும். இச்சிறு முகவுரையில் இந்நூலின் அருமைப்பாடனைத்தும் எடுத்துக்காட்ட முயல்வது, குடத்துள் யானையைத் துறுத்த முயல்வதேயொக்கும். இந்நூலை ஒருமுறையாயினும் ஆற அமரப் படித்தின்புறவும் போதிய ஒழிவு வாய்க்கப்பெறாமையால், ஆங்காங்கே ஒன்றிரண்டாகப் படித்த வேகத்தில், தென்பட்ட இரண்டொரு நலங்களையேனும், தாலீ புலீக நியாயத்தாற் குறிக்கின்றேன்.

இதன் காப்புப் பருவம் முதற் செய்யுளொழிய ஏனைய ஒன்பதும் சந்தப்பாக்களாலாயது. ஏனைய பருவங்களிலும் சந்தப் பாட்டில்லாததில்லை. திரிபு, மடக்கு, முதலிய சொல்லணிகள், செய்யுள்தோறும் பொதிந்துள்ளன. எடுத்துக் காட்டாகப் பாயிரச் செய்யுள்களும், செங்கீரைப் பருவம்

முதலைந்து செய்யுள்களும், தாலப் பருவம் 7-ம் செய்யுளும், சப்பாணிப் பருவம் 1,3,4 -ம் செய்யுள்கள் முதலியவையாம்.

சிலேடை பாடுவதில் இந்நூலாசிரியருக்குள்ள திறமை, அம்புலிப் பருவம், நீராடற் பருவம் முதலிவற்றின் செய்யுள்களால் நன்கு புலனாகும். பிள்ளைத் தமிழ் பாடுவதில் ஏனைய புலவர்க்கெல்லாம் புலியாயுள்ள அம்புலி இவ்வாசிரியர்பாற் பதுங்கி அடங்கிப் பணி கேட்கிறது.

அம்பிகையின் அருட் பெருக்கை வித்தாரித்தோத எடுத்துக்கொண்ட இந்நூலில் அவளது திருவருள் செல்வம் பெற்ற பெரியோர்கள் பலரது சீர்த்திகள் ஆண்டாண்டு மிளிர்வன, ஏனையரையும் அவள்பாலன்பு செய்துய்ய ஊக்குவனவாயுள்ளன. எடுத்துக் காட்டாக, காப்புப் பருவம் 3-ம் செய்யுளிலும், சப்பாணிப் பருவம் 3 -ம் செய்யுளிலும், கவிராச பண்டிதர்; காப்புப் பருவம் செய்யுள் 6 -ல் அபிராமப் பட்டர்; செய்யுள் 8 -ல் முத்துத்தாண்டவர் முதலியோர் அருள்பெற்ற வரலாறுகள் திறம்படக் கூறியுள்ளமை காண்க, அருணகிரிநாதர், சம்பந்தப்பெருமான், சுந்தரமூர்த்தி நாயனார், முதலிய பேரருட்டிருவாளர் புகழ்களும் அங்கங்கே பரவப்படுகின்றன; பயின்று பயின் றின்புறத்தக்க பொருள்வளம் ஆங்காங்கு அமைந்து கிடக்கின்றன. எடுத்துக்காட்டாகப் பாயிரம் விநாயகர் துதியில் சிவனே கணபதியாயுள்ள தன்மை செவ்வனே அமைந்துள்ளது. காப்புச் செய்யுள் 8 -ல் மலரவன்செய் வெற்றுடம்பினும், கலைமகள்செய் புகழுடம்பு சிறப்புடைய தென்பது நன்கு கூறப்பட்டுள்ளது.

செங்கீரைப் பருவம் 5-ம் செய்யுளில் கோபுரத்தைத் தேவேந்திரனோடு ஒப்பிட்டுள்ளமையும், அதனை அபுத்தி பூர்வமாக வணங்குவாரும் பேறுறுவர் என்று கூறியுள்ளமையும் பேரின்பம் பயப்பன. 6 -ம் செய்யுளில், அவளன்றி யோரணுவும் அசையாமையைப் புலப்படுத்தியது, "சிவமெனும் பொருளும் ஆதி சத்தியோடு சேரினெத் தொழிலும் வல்லதாம் - இவள் பிரிந்திடினியங்குதற்கு மரிதரி தெனுமறை யிசைக்குமால்" என்னும் சௌந்தரியலகரிச் செய்யுளை நினைப்பிக்கிறது. 7 -ம் செய்யுளில் - "பதியுடனே கலந்தொன்றி

……………. உணர்ந்தேன்" என்பது சிலேடை நயமும் சித்தாந்தப் பொருள் நுணுக்கமும் பொருந்தியுள்ளது.

தாலப் பருவம் முதற் செய்யுளில் அம்மை குழவியாயழுவது, ஆருயிர்கள் மும்மலவாதனைப் படல் கண்டிரங்கி யழுவதாகக் கற்பித்துள்ளது அருமையும், பெருமையும் அமைந்ததாகும். அப்பருவம் 7 -ம் செய்யுளில், அம்பிகையைத் தாம் தாலாட்டுவதற்குத் துணிந்தமைக்குக் கூறியுள்ள காரணம், இந்நூலாசிரியர் மேற்கொண்டுள்ள ஆச்சிரமத்திற்கு ஏற்றதாகவும், ஏனையோருக்கும் பிறப்பறுக்க வழி காட்டுவதாகவும், கற்பனைத்திறம் கவின்றதாகவும் விளங்குகிறது.

அம்புலிப் பருவம் முழுவதும் அமைந்துள்ள சிலேடை நயம் பெரிதும் வியத்தற்பாலது, சதுர்வித உபாயங்கள் சதுர்படச் சமைந்துள்ளன. 3 -ம் செய்யுளில் 12 ராசிகளின் பெயரும் தொனிப்பது புலவர்களுக்குப் பெரிதும் மகிழ்ச்சி தருவதாகும். 6 -ம் செய்யுள் திருப்பேரூரை அடைந்து, சேமமடைந்தோர் பலரைக் குறிக்கின்றது.

இங்கனமே எண்ணிறந்த பொருள்வளம் நிரம்பியுள்ள இந்நூலின் சிறப்பை இச் சிற்றுரையில் எங்ஙனம் எடுத்துரைப்பது!

பவப்பிணிக்கு மருந்துளகப் பகைக்குவிளக் ககத்துறவோர்
தவத்துணைநற் றமிழ்க் கிலக்குச் சந்தவண்ணக் கருவூலம்
சிவத்தி லெமைப் பிணித் திருத்தும் சிரவைநகர்க் கந்தமுனி
தவப்பெரிய னருட் பெருக்கிற் றருமருமைத் தமிழ்க் கவியே.

என்று முன்னொருபொழுது அடியேன் சொன்னதையே சொல்லி இச்சிற்றுரையை நிறுத்துகிறேன்.

"குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்"

கோயமுத்தூர் இங்கனம்
11-3-1940 **வித்துவான், கு. நடேசன்**

# திருப்பேரூர்ப் பச்சைநாயகி பிள்ளைத்தமிழ்

## *பாயிரம்*

(இரட்டையாசிரிய விருத்தம்)

**விநாயகர் துதி**

யான் ஐமுகன் என்று, சடையில் பாசடை கூ -
 விளம் தூ இளம் திங்களோடு
 இதழி அரவத்து அம்பு மணி அணிப் பணி அணியோடு
 எண்ணும் முக்கண்ணும் எய்தி,
யானை முகம் ஒன்றி அவிர் கோனை, முதிர் சோனை நிகர்
 என்று அருள் மதம் பெய்வானை,
 இதய மலர் விரிய எழும் உதய பரிதியினை நமது
 இணை விழிமுன் அணைய நினைவாம் -
தேனை முகர் அலர் கொண்ட கானை முகர் என்று உதிர்த் -
 தலை மடுத்து, அலை மடுஇனம்
 தேங்கும் மடை உடைய, அளி கனி உகுத்து, இரதம்
 திருக் காஞ்சியில் பெருக்கி,
வானை எட்டிய தண்தலைத் தண்டலைத் திரள் கொள்
 வண்டு அலைத்திடு பேரை வாழ்
 மகிமை மரகதவல்லி அம்மை இசை நிறை செல்வ
 வண் தமிழ்க்கவி தழையவே.

**முகர்** - முகருவாயாக. **அலர்** - மலர், **கானை** - நறுமணத்தை, **என்று** - எனச் சொல்லி, **மடுத்து** - (குளங்கள்) தம்முட் கொண்டு, **மடு இனம்** - குளங்கள். **மடை** - மதகு, **அளிகனி** - (சோலைகள்) பழுத்த பழங்களை, **இரதம்** - சாற்றை, **திருக்காஞ்சியில் பெருக்கி** - நொய்யலாற்றில் பெருகச் செய்து, **தண் தலைத் தண்டலைத் திரள்** - குளிர்ந்த மேற்பகுதியை உடைய சோலைக் கூட்டங்கள், **இசை** - புகழ், **தழையவே** - சிறப்பாக வளர்ந்து நிறைவேறும் பொருட்டு. **யான் ஐமுகன் என்று**-நானே சிவபெருமானும் ஆவேன் என. பாசு **அடை கூவிளம** - பசுமையான இலை ஆகிய வில்வத்தையும், **தூ இளம் திங்களோடு** - தூய்மையான இளம் பிறையையும், **இதழி** - கொன்றை மலர்களையும், **அரவ ந்து அம்பு** - ஒலிக்கின்ற நீர் ஆகிய கங்கையையும். **மணி அணி பணி அணியோடு** - மாணிக்கத்தைப் பூண்டுள்ள பாம்புகள் ஆகிய அணிகலன்களையும், **எண்ணும்** - அடியவர்களால் மதிக்கப் பெறுகின்ற, **கோனை** - தலைவனும். **சோனை** - அடைமழை. **உதய பரிதியினை** - உதிக்கின்ற சூரியனும்

ஆகிய விநாயகப் பெருமானை. **நினைவாம்** - தியானிப்போமாக. (குறிப்புரை) தமிழ்க்கவி தழையவே விழிமுன் அணைய நினைவாம் என்பது முடிபு. இச் சுவாமிகள் தம் ஈச்சநாரி பதிற்றுப்பத்தந்தாதியில், "அரவம்மலி தரங்க நதி அம்புலி பாம்பு அறுகின் அணிவிரவி, அருள்த் தாதை என மிளிர்ந்து" (47) என்கிறார்.

### சற்குரு துதி

பொத்திய மலப் பிணியில் எய்த்து, இசையும் அறிவு இச்சை
　　போந்த செயல் அற்ற என்னைப்
　　புறம் ஆய மாயையின் அளித்து, அக மயக்கம்
　　பொருந்தாமலே திருந்தப்
பத்தி நிலை ஆர் உபாசனை மார்க்கமீது உறப்
　　பதிவித்து, ஒல் பதி வித்து இடும்
　　பரம தேசிக ராமானந்த நாதன் இரு
　　பாதம் முடிமீது முடிவாம் -
சுத்திபொலி காமதேனுக் கன்றின் அடி தலைச்
　　சுவடு தன் முடித்தலத்தில்
　　தோய் பட்டிலிங்கப் பிரான் உளம் உருக்கு அருள்(ச்)
　　சுந்தரக் கிளியாய் இகப்
பித்து இசையும் என் அனையர் சித்தி முத்திப் பெரும்
　　பேறு உறச் சேர்த்து கருணைப்
　　பிரவாகம் ஆர் விழிகொள் பேரை மரகதவல்லி
　　பிள்ளைத் தமிழ்க்கு அருளவே.

**சுத்திபொலி காமதேனுக் கன்றின் அடி தலைச் சுவடு** - தூய காமதேனுவின் கன்று ஆகிய நந்தினியின் காற்குளம்பு கொம்புகளால் ஏற்பட்ட தளும்புகளை, **தன் முடித்தலத்தில் தோய் பட்டிலிங்கப்பிரான்** - தம் சிவலிங்கத் திருமேனியின் உச்சியில் பதியப்பெற்றுள்ள பட்டீசரின், **அருள் சுந்தர** - திருவருள் மயமாகிய அழகிய, **இகபித்து இசையும் என் அனையர்** - உலகியல் ஆசை பொருந்தியுள்ள அடியேனைப் போன்றவர்களையும், **சித்தி முத்தி**- திருவருட்சித்தி வீடுபேறு என்னும், **கருணைப்பிரவாகம் ஆர்** - அருள்வெள்ளம் நிறைந்த, ஏ அசை. **பொத்திய மலப்பிணியில் எய்த்து** - உயிரை மூடிக் கொண்டுள்ள ஆணவமாகிய கட்டினால் வாடி, **அறிவு இச்சை போந்த செயல் அற்ற என்னை** - ஒன்றை அறிதல் விரும்புதல் போன்ற செயல்கள் இல்லாதிருந்த அடியேனை. **புறம் ஆய மாயையின் அளித்து** - உயிர், மலம் ஆகிய இரண்டிற்கும் வேறானது ஆகிய மாயையைக் கொடுத்துப் பாதுகாத்து,

**திருந்த** - நன்னெறியில் ஒழுகும்படி, **உபாசனை மார்க்கமீது உறப்பதிவித்து** - வழிபாட்டு நெறியிலும் ஈடுபட வைத்து, **ஒல்பதி வித்திடும்** - இறுதியில் சென்று சேர வேண்டிய இடமாகிய முத்தி வீட்டில் விதைக்கின்ற.

(குறிப்புரை) பிள்ளைத்தமிழ்க்கு அருளவே பாதம் முடிமீது முடிவாம் என இயையும். அறிவு இச்சை செயல் இல்லாமல் இருந்தது கேவலநிலை. தனு, கரண, புவன, போகங்கள் ஆகிய மாயையைக் கொடுத்து அதன்வழிப் பாதுகாத்து. அளித்தல் இரட்டுறமொழிதல். நிலை ஆர் என்பது இடைநிலை விளக்காகப் பத்தி உபாசனை ஆகிய இரண்டொடும் இணையும். புவன போகங்களைக் கொடுத்தாலும் அவற்றிலேயே மூழ்கிவிடாமல் நன்னெறியில் ஒழுகச் செய்தது குருவின் அருள் என்றவாறு. பட்டீசர் கன்றின் குளம்புகொம்புச் சுவடு ஏற்றது தலபுராணச்செய்தி.

**நூற்பிறப்புக் காரணம் முதலியன**

**பழுத்து, இசை அருள்(ப்) பெருக்கு ஆர் பேரை வாழ்வான**
**பட்டிலிங்கேசன் வாமப் -**
**பால் குலவும் இச்சை நாயகி பச்சைநாயகிப்**
**பரை, குழவியாய்ச் செய் ஆடல்**
**வழுத்து, இசைப் பிள்ளைத் தமிழ்ப் பனுவல் இதனை, இசை**
**வாணி என் கைப் பொறியினால்**
**மனைக் குடவிளக்கில் உறவைத்த விதி தன்னை அற**
**மாற்றி, அறம் ஆற்று இசை பொனால்**
**அழுத்து இசை எழுத்து உச்சிமிசை அமைத்து, உயர் வெற்பு**
**அணித்தலை மணிச் சுடர் எனா**
**அரங்கேற்றும் நன் மணம் கண்டு, தாயம்மையொடு**
**அரங்க நாயகி ஆம் பெயர்**
**முழுத்திசை கமழ்ந்திடப் பெறு செல்வி, எனது குரு**
**முதிர் இராமானந்த மெய்**
**மூர்த்தி தவ புத்திரி, உள் ஆர்த்தி இசை பயன் எலாம்**
**முற்றுறப் பெறுக மாதோ.**

**பழுத்து இசை** - பக்குவப்பட்டுப் பொருந்தியுள்ள. **ஆர்** - நிறைந்துள்ள. **வாமப்பால்** - இடது பாகத்தில். **இச்சை நாயகி** - அன்பான மனைவி ஆகிய. **பரை** - பராசக்தி. **வழுத்து** - புகழ்ந்து கூறுகின்ற. **இசை** - ஓசை இனிமையை உடைய, இசைப்பதற்கு உரிய. **இசை வாணி** - புகழ்மிக்க கலைமகள். **கைப்பொறி** - கையெழுத்து, கையைக் கருவியாகக் கொண்டு எனினும் ஆம். **மனைக்குட விளக்கில்** - ஒரு வீட்டுக்குள்

குடத்திற்குள் ஏற்றி வைத்த தீபத்தைப்போல. **உறவைத்த விதி தன்னை** - இருக்கச் செய்த ஊழை. அறம் ஆற்று இசை பொனால் - நல்ல நெறியில் ஈட்டப்பட்ட பொருளைக் கொண்டு, தீவினை விட்டு ஈட்டல் பொருள் என்பாள் ஔவை. **உச்சிமிசை இசை அழுத்து எழுத்து** - காகிதத்தின்மேல்(அச்சு இயந்திரத்தால்) பொருந்தும்படி பதியவைக்கின்ற எழுத்துக்களால், தாளில் அச்சேற்றி என்பது கருத்து. **உயர் வெற்பு அணித்தலை மணிச்சுடர் எனா** - உயர்ந்த மலையின் அழகிய முடியின்மேல் இட்ட அழகிய விளக்கைப்போல, குன்றின்மேல் இட்டவிளக்கு என்பது பழமொழி. நூல் பலரறிய அரங்கேற்றப்படுவதற்கு ஒரு பெண் பலர் அறியத் திருமணம் செய்து கொடுக்கப்படுவது உவமை. **தாயம்மை** - இராமானந்த சுவாமிகள்பால் உபதேசம் பெற்றுத் துறவு கொண்ட சீடர், இவர் இயற்பெயர் அரங்கநாயகி. திசை முழுதும் என மாறுக, எல்லாத் திக்குகளிலும் என்றபடி. **மூதிர்** - பக்தி வைராக்கியங்களில் பழுத்த. **தவ புத்திரி** - மாணவி. **உள்** - தம்முடைய மனத்தில். **ஆர்த்தி இசை** - விரும்பப்படுகின்ற. **மாதோ அசை.**

இச்செய்யுளில் இசை என்னும் சொல் பலமுறை வேறு வேறு பொருள்களில் பயின்று வந்தது - சொல் பின்வரு நிலையணி.



## நூல்

# காப்புப் பருவம்

### திருமால்

(இரட்டை ஆசிரிய விருத்தம்)

**பத்தித் தரங்கக் கரம் கொண்டு பேர் ஒலிப்**
**பாட்டு இசைத்துத் தவள வான்**
**பாற்கடல் அசைத்திடக் கை மருவு சக்கரம்**
**பணிலம் நழுவாது ஒளிகுலாம்**
**துத்திப் பணா மகுடம் ஓர் ஆயிரத்தின் மேல்**
**தூண்டா விளக்கில் இணைதீர்**
**சுடிகை மணி கால் சேட பாயலில் துயிலும் அச் -**
**சுதன் உபய பதம் நினைகுவாம் -**
**சித்தித் திறத்து அன்பர் புத்தித் தலத்து, அலகுஇல்**
**சிற்சுகாநுபவ இன்பம்**
**தேனிப்ப, என்றும் தெவிட்டாது நல்கும் மெய்த்**
**திருவருள்(க்) கடலை, நாதம்**
**சத்திக்கும் நூபுரத் தாள் மலர் கொள் அம்மையை,**
**தண் காஞ்சிவாய்ப் பேரையூர்**
**தங்கு இயல் பச்சை மரகதவல்லியைப் பெரிது**
**தளராது காத்து அமையவே.** 1

***சித்தி திறத்து அன்பர்*** - வீட்டுப்பேறு ஆகிய மேன்மையை விழையும் அடியார்களின். **புத்தித்தலத்து** - அறிவின்கண். **அலகு இல்** - கணக்கற்ற. **சிற்சுக அநுபவ இன்பம்** - ஞானத்தால் உண்டாகும் இன்பத்தை நுகர்வதாகிய சுகம். **தேனிப்ப** - இனிக்க. **நாதம்** - நாத தத்துவம். **நூபுரத்தாள்** - சிலம்பணிந்த திருவடிகள் ஆகிய. **தண்** - குளிர்ந்த. காஞ்சிவாய் - நொய்யலாற்றங்கரையில் அமைந்துள்ள. **தளராது** - மெலியாமல். **பத்தி தரங்க கரம் கொண்டு** - வரிசையான அலைகளாகிய கைகளால். **தவள** - வெண்மையான. **வான்** - பெருமைமிக்க. **பணிலம்** - சங்கு, பாஞ்ச சன்யம். **ஒளி குலாம்** - பிரகாசிக்கின்ற. **துத்தி** - பொறிகளை உடைய. **பணாமகுடம்** - பாம்புப் படங்கள். தூணடாவிளக்கில் என்புழி இல்உவம உருபு. **சுடிகை மணிகால்** - தலையில் உள்ள மாணிக்கங்கள் ஒளிர்கின்ற. **சேடபாயல்** - ஆதிசேஷனாகிய படுக்கை,

கெடுதல் விகாரம். **அச்சுதன்** - திருமாலின். **உபயபதம்** - இரண்டு திருவடிகள்.

(குறிப்பு) காத்து அமையவே உபயபதம் நினைகுவாம் என்பது பொருள் முடிபு. கைமருவு சக்கரம் பணிலம் நழுவாது ... துயிலும் அச்சுதன் என்பதில் இரண்டு நயங்கள் உள்ளன. முதலாவது அச்சுதன் என்னும் வடமொழித் திருநாமத்திற்கு அண்டினவர்களை நழுவவிடாதவன் என்பது பொருள். தன்னை அண்டிய சங்கு சக்கரங்களைத் தூக்கத்திலும் நழுவ விடாதவன் என அந்தப் பெயரின் பொருளை விளக்குகிறார். இரண்டாவது இன்னமும் நயமானது. ஒருவர் தூங்கும்போது அவர் கைகளில் உள்ளவை தாமாக விழுந்துவிடுவது தான் இயல்பு. திருமால் நழுவாது துயில்கிறார் என்பதனால் அவர் உறக்கம் உண்மையானது அன்று; அறிதுயில் எனக் குறிப்பாக உணர்த்தப்படுகிறது.

## சிவபெருமான்

(வண்ண விருத்தம்)

**தானா தனதன- தய்யனத் தாத்தன**

**சேண்ஆர் கதிர் வலம் ஆம்மேருவை எதிர்**
**சேரார் குலம் அற வில் எனக் கோட்டினர்**
**சேல் ஆகிய கொடி யோன் வாளிகளொடு**
**தீய்வான் நுதல் விழி விள்ளுறக் காட்டினர்**
**தேன்நேர் கவிபொழி ஆரூரனை மனை**
**சேர் ஆர்வம் மனதின் உள் உறக் கூட்டினர்**
**தீரா அகம் மிகை ஆர் காளி ஒல்க ஒர்**
**சீர் பாத மலரின் அள் அணித் தோட்டினர்.**
**மாண்ஆதரம் நிறைவு ஆர்வாதபுரியின்**
**வாழ்வான் அவன் நவில் செய்யுள் பற்று ஏட்டினர்**
**வான் மீதினும் உலவ ஏய் சானவி நதி**
**மாடு ஆர் திறல் குறை செய் சடைக்காட்டினர்**
**மாறா அருள் அமுது ஆர் பாலகன் மண**
**வாய், நீள் கரம் இசை துய்யமெய்ப் பாட்டினர்**
**மாயோன் அறிவரிது ஆ நீள் இரு பத**
**வாரீச மலர்கள் உள்ளம் வைத்து ஏத்துதும்**

வீணா இமையவர்பால் நீள் பகைகொடு,
மீளாது அமை சிறை அல்லலில்த் தோய்த்து, அவர்
வீறுஆர் உலகு அனலாலே அடலைசெய்
மேவார்கள் உடல்கள் புள் உணச் சாய்த்திடும்
வேலாயுத வடிவுஆ வேள் கரதல -
மீதே அவிர்தரு செல்வியை, தூத்திரை
வேலா வலய மன் ஆனான் மகள் என
மேனாள் வளர்தரு பிள்ளையை, தாள்த்துணை
பேண் ஆதரம் நிறைவு ஆர் மாதவர் உயர்
பீடு ஆர் இருதய கிள்ளையைப் போற்று எம் ஒர்
பேராசைகள் என நீள் ஆர்கலி பொலி
பேய் மான் உளமிசை கள்ளம் முற்று ஒச்சுபு
பேரா ஒளி அவிர் மா மேருவை நிகர்
பேறு ஏய் திருவருள் வெள்ளம் உள் கூட்டி ஒல்
பேசா மகிமை கொள் ஞானாகரம் அருள்
பேரூர் மரகத வல்லியைக் காக்கவே. 2

**வீணா** - காரணம் இல்லாமல். **இமையவர்பால்** - தேவர்களிடம். **வீறு ஆர்** - பெருமைமிக்க. **அடலை** - சாம்பல். **மேவார்கள்** - பகைவர்கள், இங்கு அசுரர்கள். **புள்** - பறவைகள், இங்குக் கழுகுகள். **வடிவு ஆ** - உருவத்துடன். வேள் - முருகப்பெருமான். **முருகப்பெருமானின் வேலாயுதம் சக்தி அதிலும் ஞான சத்தி என்பது வெளிப்படை. தூ திரை** - நீரைச்சிதறுகின்ற அலைகளை உடைய. **வேலாவலயமன் ஆனான்** - கடல் மன்னவன் ஆகிய பரதவன். பரதவன் மகள் ஆனது திருவிளையாடல் வலை வீசின படல வரலாறு. **ஆதரம்** - பக்தி. **இருதய கிள்ளை** - இதயமாகிய கூட்டில் வசிக்கும் கிளி. **ஆர்கலி** - கடல், இதற்கு மனிதர்களின் பேராசை உவமை. பேய் மான் உளம் **இசை கள்ளம் முற்று ஒச்சுபு** - பிசாசைப்போல் அலைகின்ற மனத்தில் உள்ள வஞ்சனைகளை முழுவதுமாகத் துரத்தி. **பேரா** - நீங்காத. ஒல்மகிமை பேசா மகிமை எனத் தனித்தனி இயையும். **ஞானாகரம் அருள்** - மெய்யறிவுக்கு இடமாகச் செய்கின்ற. கள்ளம் முற்று ஒச்சுபு, திருவருள் வெள்ளம் உள் கூட்டி, ஞானாகரம் அருள் என இயையும். **சேண் ஆர் கதிர்** - வானத்துச் சூரியன். **எதிர்** - போரில் எதிர்ப்பவர் ஆகிய. **சேரார்**

- பகைவர்கள், இங்கு முப்புர அசுரர். **கோட்டினர்** - வளைத்தவர், மேருவை வில்லாக வளைத்தவரும். **சேல் ஆகிய கொடியோன்** - மீன் கொடியை உடைய மன்மதன். **வாளிகள்** - மலர்க் கணைகள். **தீய்வான்** - எரிந்துபோவதற்காக. **விள்ளுற** - திறக்கும்படி. **ஆரூரன்** - சுந்தரமூர்த்தி நாயனார். **மனை சேர் ஆர்வம்** - இல்லற ஆசை. **கூட்டினர்** - ஏற்படுத்தியவர். **எம்பெருமான் அருள்வகையான் முன் தொடர்ந்து வரும் காதல் முறைமையினால் தொடக் குண்டு**(பெரிய. 335) என்னும் சேக்கிழார் வாக்கை நினைந்து கூறினார். தீரா அகம் - குறையாத செருக்கு. ஒல்க - நாண. சிவபெருமான் நடனமாடும்போது காதிலிருந்து கழன்று விழுந்த குழையை அப்படியே காலால் எடுத்து அணிந்துக் கொள்ளக் காளி நாணினாள் என்பது ஒரு கதை. இதனை வண்ணச்சரபர் **"தோடதைக் கழற்றி முன்போல் துலங்கிடத்தரித்தான்; கண்டு ஆடகக் கையாள் நாணித் தோல்வி ஏற்றவளா நின்றாள்"** (புலவர், புரா. 718) என்பார். **மாண்** - சிறப்புடைய. **வாதபுரி** - திருவாதவூர். **செய்யுள்** - திருவாசகம். அமுது **ஆர் பாலகன்** - திருஞானசம்பந்தர். **மணவாய்** - பால்மணம் மாறாத வாயும். **நீள்கரம்** - தாளம் போடும் கைகள். **வாரிச** - தாமரை.

## பட்டி விநாயகர்

தத்தன தானனந் தானனத் தாத்தன

அத்தியின்மேல் எழுந்து ஆர் திரைக் காட்சியின்
அற்புதம் நேர்தரும் பேர் அருள்(ச்) சீர்த்தியை,
அக்கம் உளார் தினம் தேறி, மிக்கு ஏத்திட,
அத்தியின் ஆனனம் தோய் சிறப்பு ஏற்று, இயல்
பத்தியின் நீள் பசும் தூர்வை நற் பூத்திரள்
பற்பல் நிவேதனம் தாம் அமைப்பார்க்கு உயர்
பக்குவர் கூடும் இன்பு ஆர் கதிச் சீர்ப்பு அருள்
பட்டிவிநாயகன் தாள்களைப் போற்றுவல் -
புத்திரி போல் அணைந்து, ஓர் கவிக்காத் திரை
பொற்பு உற வீசு கங்கா நகர்ப்பால் திகழ்
புத்தடி நோவ, இன்பு ஆர் கவிப் பார்த்திபர்
பொன் தொடி சூட, மின் தோய் கரத்து ஏற்றிடு

சத்தியை, நாள்தொறும் தாள் நினைத்து ஏத்திடு
சக்கு அகலாது அமைந்து ஓகைமிக்கு ஆட்டுஅயர்
தற்கு இணை மாண் உறும் பேரையில் சீர்த்துஇயல்
தற்பரை நீள் பசுந் தோகையைக் காக்கவே. 3

**புத்திரி போல் அணைந்து** - மகளைப் போல வந்து. கவி என்றது கவிராச பண்டிதரை. வரலாறு வெளிப்படை. **திரை** - அலை. பொற்பு - அழகு. **கங்கா நகர்ப்பால்** - காசியின்கண். **புத்தடி** - புதுமை மாறாத பாதங்கள். **கவிப்பார்த்திபர்** - கவிராஜ பண்டிதர். **பொன் தொடி சூட** - அழகிய வளையல்களை அணிவிக்க. **மின் தோய்** - ஒளி மிக்க. **சக்கு அகலாது** - பார்வை விலகாமல். அமைந்து ஓகை மிக்கு ஆட்டு அயர். **ஆட்டு** - அருளாடல். **தற்கு இணைமாண்** - தனக்குத் தானே நிகராகிய பெருமை. இது பேரூருக்கு அடை. **சீர்த்து இயல்** - பெருமையோடு விளங்குகின்ற. **அத்தியின் மேல்** - கடலின்மீது. **திரை** - அலைகள். **அக்கம் உளார்** - கண் படைத்தவர்கள். **தேறி** - (இறைவன் என) தெளிந்து. அத்தியின் **ஆனனம்** - யானை முகம். **தூர்வை** - அறுகம்புல். **பூத்திரள்** - மலர்வகைகள். **நிவேதனம்** - படைக்கும் உணவு வகைகள். **பக்குவம் கூடும்** - இறையருளைப் பெறுவதற்குரிய தகுதியைப் பெற்ற அடியார்கள் பொருந்துகின்ற. **இன்பு ஆர் கதிச் சீர்ப்பு** - பேரின்பமாகிய வீட்டுப்பேறாம் சிறப்பை.

(குறிப்புரை) தற்பரை நீள்பசுந்தோகையைக் காக்கவே பட்டி விநாயகன் தாள்களைப் போற்றுவல் என்பது செய்யுள் முடிபு.

## முருகக் கடவுள்

தனத்தானா தனதன – தய்யனத் தாத்தன.

தருப்பால் வாம் இமையவர்-
தமைக் கோது ஆர் சிறைபுரி
சயச் சூர்மாவினது அணி மெய் பிளப்பு ஆக்கும் ஓர்
தனிக் கூர்வேல் அமைதரு
புயக் கோமான், மலைமுடி -
தனில் பேராடல்கள் புரி செய்ய பொன்தாள்கொள் சேய்,

தவச்சீர் நாரதன் முயல்
மகத்தூடு ஆம் இகல் மலி
தகர்ப்பால் ஊர்தரும் விறல் மல்கும் மெய்க் கீர்த்தி தோய்
தனைத்தான் நேர் குருபரன்,
இருக்கு ஓதாய் என மிகு
தருக்கு ஆர் வேதனை முனம் எய்திடக் கூய்ப் பொன்ஆர்
பொருப்பு ஆர் பேர் இடி அதிர்வு
எனக் காண் நால் முடிமிசை
புடைத்தே காவலுள் அமை துய்யன், வில்ச் சீர்த்தகோ -
புரச் சோணாசலமிசை
அருள்க் கார்கோள் அலைநிகர்
புதுப்பா ஓவு அற நுவல் மெய்யனைக் காட்சிசால்
புனக் கோன் வான் இறைமகள்
உளத்து ஆனா உவகை செய்
புயத்து ஓவாது அமைய ஓர் கிள்ளையில் கூட்டி ஆள்
புயல் போல் நீடு அருள் பொழி
விழிச்சீர் ஈர் நவம் உறு
புகழ்த் தேவாதிபன் அடி உள்கி மிக்கு ஏத்துதும் -
மருப் பூ ஏய் பொழில் முகில்
உடுத் தோய்வான் அணை இம -
வரைக் கோன் மாதவ அருள் நள் உருக் காட்டி ஓர்
மறுக் கூடர் அடியவர்
உளத்தோடு ஆரணமுடி
வரச் சீர் ஆர் மணம் மலி பொய்கையில்(ப்) பூக்கணே
மகட் பேறு ஆய் இசை தவம்
இகத் தோடு ஆர் பரசுகம்
வளர்ப்பாள் ஏய்தரவளர் செல்வியை, தோற்று உறா
மதிப்பு ஆம் நூல் இடைஇடர்
பெருக்கு ஆமாறு எழும் இள
மணிப் பூண் ஆர் கனதன வல்லியைப் பார்த்து நேர்
அருப்பு ஆம் ஆசுகம் எறி -
தரச் சார் வேள் உடல் அடும்
அணிக் கோ மால் உறும் எழில் பல்கு அருள்க் கூர்ப்பின்நீள்
அணிக் காது ஆர் குழை அணை
விழிக் கூர் வேல் உமையை, என்
அகத்து ஓவா அருமறை மௌலி ஒப்பு ஏற்ற மாண்

அலர்த் தாள் ஏய் சிவையினை,
நினைப்போர் தீவினை முழுது
அறுத்து ஆள் மா கணபதி தள்ளையை, பார்க்கணே
அமைப்பு ஆர் ஊர்பலவினும்
மிகச் சீர் ஊர் பெருமை கொள்
அருள்ப்பேரூர் மரகத வல்லியைக் காக்கவே. 4

**மரு** - நறுமணம். **உடு தோய்** - நட்சத்திரங்கள் பொருந்தியுள்ள. **வான் அணை** - ஆகாயமளாவிய. **இமவரைக் கோன்** - இமவான். **ஆரணமுடி** - வேதமுடிவிலும். **வர** - உயர்ந்த. **இகத்தோடு** - இவ்வுலக இன்பங்களுடன். **வளர்ப்பாள் ஏய் தர** - (பார்வதியை) வளர்த்தவள் ஆகிய மேனை பெறும்படி. **நூல் இடை** - இழை போன்ற இடுப்பு. **வல்லியை** - கொடிபோன்றவளை. **அருப்பு ஆம் ஆசுகம்** - மலர்க்கணை. **வேர்** - மன்மதனின். **அணி கோ** - அழகிய தலைவன், சிவபெருமான். **மால் உறும்** - காதல் கொள்ளும். **கூர்ப்பு** - மிகுதி. **குழை அணை** - காதணிகளைத் தொடுகின்ற. **விழிக் கூர்வேல்** - கண்களாகிய கூர்மையுள்ள ஈட்டி. **என் அகத்து ஓவா** - அடியேனின் உள்ளத்திலிருந்து நீங்காத. **மௌலி** - முடி. **அலர்த்தாள்** - மலர்ப்பாதம். **தள்ளை** - தாய். **பார்க்கணே** - உலகில், ஏகாரம் அசை. **தருப்பால்** - வானுலகில். **கோது** - இழிவு. மா சயச் சூர் என மாறுக, பெருவெற்றியை உடைய சூரன். **அணிமெய்** - அழகிய உடல். **தனி** - ஒப்பற்ற. **சேய்** - முருகப்பெருமான். **தருக்கு ஆர்** - கருவம் கொண்ட. **வேதனை** - பிரமனை. கூய் அழைத்து. **என** - போல. **காவலுள் அமை** - சிறையிட்ட. **துய்யன்** - தூய்மையானவன். **வில்** - ஒளி. **சீர்த்த** - புகழ் பெற்ற. **சோணாசலம்** - திருவண்ணாமலை. கார் **கோள்** - கடல். மெய்யன் என்றது அருணகிரிநாதரை. **புனக்கோன்** - காட்டுத் தலைவன், நம்பிராஜன். **வான் இறை** - இந்திரன். **ஆனா** - குறையாத. **ஓவாது** - நீங்காமல். **கிள்ளையில்** - கிளி வடிவத்தில். சீர்வாழ் என மாறுக. **ஈர் நவம்** - ஈரொன்பது, பதினெட்டு, முருகப்பிரானுக்கு ஒவ்வொரு முகத்திலும் நெற்றிக்கண் உண்டு என்பர். **தேவாதிபன்** - அமரர்களுக்குத் தலைவன், முருகப்பெருமான். **உள்கி** - தியானித்து.

குறிப்புரை : பேரூர் மரகதவல்லியைக் காக்கவே தேவாதிபன் அடி உள்கி மிக்கு ஏத்துவாம் என்பது முடிபு.

## பிரமதேவர்

தானான தத்த தனதன - தய்யனத் தாத்தன

போராடு துட்டர் உடல் மிசை வல்லையில்ப் போய்க் குடர்
பூண்நேமி பற்று கரதலன் நள்ளு கொப்பூழ்ப் பொலி
பூமீது உதித்து விரி எழு பவ்வம் மெய்ப்பால் புனை
பூமாது என் ஒப்பு இல்வளம் மலி செல்வி பெற்றுஆற்றல் கொள்
நாராயணற்கு உதவும் உயர் கைகள் எட்டு ஏற்று அவிர்
ஞானாகரப் பல்மறை இனம் நல்கு அணிச் சீர்த்தியின்
நா மாதினைத் தன் நிறை பொலி இல் என் நல்பாக்கிய
நால் ஆனனப் பிரமனை உள் வைக வைத்து ஏத்துதும்
ஆர்ஆர் முடிப் பரமசிவன் உள் அருட் பாப் பொழி
ஆரூரன் உற்று அளவுஇல் பொருள் நல்கு எனக் கேட்டிடில்
ஆம் ஈது முத்தி அருள்பதி; இல் எனப் போக்குதல்
ஆகாது எனத் தன் உளமிசை உள்ளி நெல் கூழ்ச்செய் ஒல்
பேர் ஆடல் மிக்கு இயல் அவிர் பள்ளன் ஒப்பாய்த் தளி
பேர்காலை ஒப்பு இல் நலம் மலி பள்ளியில்த் தோற்றிடு
பீடு ஏர் மறைத்து இறைவனொடு ஒர் பள்ளியில் சேற்று அமை
பேரூர் கொள் பச்சை மரகத வல்லியைக் காக்கவே. 5

**ஆர் ஆர் முடி** - ஆத்திமாலையை அணிந்ததலையை உடைய. **உள்** - எண்ணி மகிழ்கின்ற. **அருட்பா** - ஏழாம் திருமுறைத் தேவாரம். **உற்று** - வந்தடைந்து. **இல் என** - (செல்வம் கொடுப்பதற்கு) இல்லை என்று. **உள்ளி** - நினைத்து. **நெல் கூழ் செய்** - நெய் ஆகிய பயிர் விளையும் வயலின்கண். **ஒல்** - இயன்ற. **தளி பேர் காலை** - கோவிலை விட்டுப் போகும்போது. **பள்ளியில் தோற்றிடு** - படுக்கையறையில் காட்சியளிக்கும். **பீடு ஏர்** - பெருமை மிக்க அழகு. **ஒர் பள்ளியில்** - பள்ளத்தி ஒருத்தியைப் போல. பட்டிநாதர் தேவியோடு பள்ளன் பள்ளி ஆனது தலபுராணச் செய்தி.

**வல்லையில் போய்** - விரைவாகச் சென்று. **பூண் நேமி** - அணிந்துள்ள சுதரிசனத்தால், வினைத்தொகை. **நள்ளு** - விரும்புகின்ற. **விரி எழு பவ்வம்** - விசாலமான ஏழு கடல்கள். **மெய்ப்பால்** - உடலில். **பூமாது** - நிலமகள். **செல்விபெற்று**

- மங்கையை மகளாகப் பெற்று. **உதவும்** - திருமணம் செய்து கொடுக்கும். **ஞானாகர** - மெய்யறிவிற்கு உறைவிடமாகிய. **மறை இனம்** - வேதங்கள். **நாமாதினை** - கலைமகளை. **நால் ஆனன** - நான்கு முகங்களை உடைய. **வைக** - நிலைத்திருக்கும்படி.

குறிப்புரை : பச்சை மரகத வல்லியைக் காக்கவே பிரமனை உள் வைக வைத்து ஏத்துதும் என்பது பொருள் முடிபு.

## தேவேந்திரன்

**தனதன தய்ய தய்யானனத் தாத்தன**

**தருநிறை சையம் எல்லாம் மணக் காட்சி செய்**
**சரண் முருகையன் வை வேல் உரத் தோய்ப்பு அமை -**
**தரு மகள் நல்கு மெய் மாதவச் சீர்த்திகொள்**
**தலைவனை, வெள்ளை ஐராவதப்பால்(க்) கடல்**
**பருகிடும் மையில் எய்து ஆர்வனை, சீர்ச்சசி**
**பதிதரு மையல் மை ஆர் விழித் தோள்க் கமழ்**
**பரிமள மெய்கொள் வல்லோனை, மிக்கு ஆர்த்து எதிர்**
**பகை அடு வைர ஒள் வேலனைப் போற்றுதும் -**
**நிருபன் ஒர் கையில் வெள் வாள் பிடித்து ஒச்சும்முன்**
**நிசி அதில் எல்கொள் அல்லோன் உதித்து ஏக்கம் உள்**
**நிறையும் என் உள்ளம் ஒவ்வா வியப்பு ஏற்றிட**
**நினை என, விள்ளும் மெய்யோன் உவப்பாய்த் தொழ,**
**வரும் உயர் செல்வியை, வார் செவித் தோட்டினை**
**மதி என எய்தல் செய் காரணத்தாள்க் கதிர்**
**வளம் மலி செய் அவிர் பேரையில் தோற்று எழில்**
**மரகத வல்லி கௌமாரியைக் காக்கவே.** 6

**நிருபன்** - மன்னன். **ஒச்சும்முன்** - வெட்ட எறிவதற்கு முன்பு. **நிசி அதில்** - இரவில். **எல்கொள்** - ஒளி மிக்க. **அல்லோன்** - சந்திரன். **விள்ளும்** - வேண்டுகின்ற.. மெய்யோன் என்றது அபிராமி பட்டரை. **வார்** - நீண்ட. **மதி என** - சந்திரன் ஆக. **காரணத்தாள்** - உலகம் தோன்றக் காரணம் ஆன சக்தி. **கதிர்** - தானியக்கதிர். **செய்** - வயல். **தோற்று** - காட்சியளிக்கும். **கௌமாரி** - இங்கு வாலிப

வயதினள் எனக் கொள்ளலாம். **தருநிறை சையம்** - மரங்கள் நிறைந்த மலைகள். **மணக்காட்சி செய் சரண்** - வாசனை வீசச் செய்கின்ற திருவடிகளை உடைய, இலக்கணை. **வை** - கூர்மையான. **உரம்** - மார்பு. மகள் என்றது தெய்வயானையை. **ஐராவதப்பால்** - ஐராவதம் என்னும் யானையின்மீதும். **மையில்** - மேகத்தின்மீதும். **சசி** - இந்திராணி. **பரிமள மெய்** - நறுமணம் மிக்க உடல். **வைர ஒள் வேலன்** - ஒளிமிக்க வச்சிராயுதத்தை உடைய இந்திரனை.

குறிப்புரை : மரகத வல்லி கௌமாரியைக் காக்கவே வைர ஒள் வேலனைப் போற்றுதும் என்பது பொருள் முடிபு.

## இலக்குமி

**தானான தனதன தனதத்த தத்தன**

**கார்கோள் என் ஒரு பெயர் கடலுக்கு அமைத்து, ஒளி**
**கால் மேகநிற அரி அகலத்தினில் கமழ்**
**கான் ஆர் துளவு மணி உடன் உற்று, உளத்திடை**
**காணாத சுகம் நிறை அருள் பொற்பு மிக்கு, அவிர்**
**சீர்நீடு பவள வில் வடிவு உற்ற பொன்கொடி,**
**சேல்ஆன கொடியினில் உலகத்தை வெற்றி கொள்**
**சேயோனை உதவிய அருள் மெத்து இலக்குமி**
**சீ பாதம் உளமிசை கருதிப் பழிச்சுவல் –**
**பார் மீதில் உள மலைதொறும் உற்று இசைத் துதி**
**பாடு ஆர்வம் மிகு புலவர் உளத்து இனித்து, இயல்**
**பாகு ஆன மொழிகள் கொடு அமை அச்சம் முற்று அடு**
**பாதாரம் மிக மலி பவளப் பொருப்பு அயில்**
**பீர் மேவு கன தன, அருவிப் பனிக்கிரி**
**பேண் ஆர்வ மகள்தனை, உறுபட்டி வித்தகர்**
**பேர் ஓங்கை பெற அருள் நிறை கண்(ச்) சிறப்பு அமை**
**பேரூரின் மரகத மயிலைப் புரக்கவே.** 7

**இயல்** - இயற்றமிழ் ஆகிய, மேலே இசை கூறப்பட்டது. **பாகு ஆன** - வெல்லப்பாகு போன்ற. **அமை** - (புலவரின் வாழ்வில்) ஏற்படுகின்ற. **அடு** - போக்குகின்ற. **பாதாரம்** - ஒளி. **மிக மலி** - மிகுதியாகப் பெருகுகின்ற. **பவளப்பொருப்பு** - பவளமலை போன்ற முருகப்பெருமான். **அயில்** - குடிக்கின்ற.

**பீர்** - முலைப்பால். **கனதன** - பெரிய நகில்களை உடைய. **பனிக்கிரிபேண்** - இமயமலையால் வளர்க்கப்பெற்ற. **பட்டி வித்தகர்** - திருப்பேரூர்ச் சிவபிரான். **ஓகைபெற** - மகிழும்படி. **புரக்கவே** - பாதுகாக்க வேண்டி. **ஒளி கால்** - பிரகாசிக்கின்ற. **அரி அகலத்தினில்** - திருமாலின் மார்பின்கண். **கான் ஆர்** - நறுமணம் மிக்க. **மணி** - கவுத்துபம் ஆகிய இரத்தினம். **பொன் கொடி** - திருமகளாகிய பெண், இருபெயரொட்டு. **சேல்** - மீன். **சேயோனை** - மகனாகிய மன்மதனை. **மெத்து** - மிகுகின்ற. **சீபாதம்** - திருவடி. **பழிச்சுவல்** - போற்றுவேன்.

குறிப்புரை : பேரூரின் மரகத மயிலைப் புரக்கவே இலக்குமி சீபாதம் உளமிசை கருதிப் பழிச்சுவல் என்பது செய்யுள் முடிபு.

## சரசுவதி

**தானா தனதன தய்யனத் தாத்தன.**

**கோடாது உயிர்வகை செய்வினைக்கு ஏற்றுழி**
**கூடு ஏய்தர உதவு ஐயனில், சீர்த்து இசை**
**கூர் ஆகம் உலகில் எல் எனச் சேர்த்தருள்**
**கூர் வேல் விழி அமை செல்வி! இப் பார்க்கிடை**
**வாடாவகை எனுள் வைகி மெய்ப் பாப்பகர்**
**மாண் ஆதரம் மிக நல்கும் நல் பாக்கிய**
**வாழ்வே! கவின் மண வெள் இதழ்ப் பூப் பொலி**
**வாணி! உனது அடி உள் அமைத்து ஏத்துவன் -**
**ஏடு ஆர் மலர்புனை மை அணிக் கார்க்குழல்**
**ஏர் வேசையர் மகிழ் நல் இயக் கீர்த்தியின்**
**ஏரான், நலிபிணி மெய் படைத்து, ஏக்கம் உள்**
**ஏயாது, அருள்பொலி தில்லையுள் போய், கரை**
**பீடு ஆர் சிவன் வரை செய்யுள் சொற்றாற்கு உறு**
**பேறு ஏய்தர அருள் கிள்ளையை, தாள்த்துணை**
**பேண் ஆர்வ நிறைவு எம் உள் உறக் கூட்டிடு**
**பேரூர் மரகத வல்லியைக் காக்கவே. 8**

**ஏடு ஆர்** - இதழ்கள் நிறைந்த. **மை அணி** - அஞ்சனத்தின் அழகைப் பெற்ற. **கார்க்குழல்** - மேகம் போன்ற கூந்தல், விரித்தல் விகாரம். **ஏர்** - அழகிய. **நல்இய கீர்த்தியின் ஏரான்** - நல்ல இசைக்கருவி ஆகிய மத்தளவாசிப்பால் பெற்ற பெரும்புகழாகிய சிறப்பை உடைய முத்துத்தாண்டவர். மெய்

நலி பிணி படைத்து என இயையும். **நலி** - வருத்துகின்ற. **கரை** - உள்ளத்தைக் கரையச் செய்கின்ற. கரை செய்யுள், சிவன் வரை செய்யுள் எனத் தனித்தனி இயையும். இது திருவாசகம். முத்துத்தாண்டவர் ஒரு திருவாதிரை நாளில், மாணிக்கவாசகர் பேறு எனக்குத் தரவல்லாயோ அறியேன் எனத் தொடங்கும் கீர்த்தனையைப்பாடி முத்தி பெற்றார் என்பர். அவர் தேவியின் கட்டளைப்படித் தில்லை சென்றவர். எனவே அவரின் பேறு சக்தி தந்ததாயிற்று. **உள் உற** - மனம் கொள்ளுமாறு. **கோடாது** - சற்றும் மாறாமல். ஏற்றஉழி எனற்பாலது ஏற்றுழி என நின்றது. **அழி கூடு** - கெடுவதற்குரிய உடல், வினைத்தொகை. **ஏய்தர** - அடையும்படி. **ஐயனின்** - பிரமனைப் போல. **மலரவன் செய் வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு மற்றிவர் செய்யும் உடம்பு** என்பது நீதி நெறி விளக்கம் (6). வாடா வகை - குறையாமல். **மெய்ப் பா** - குற்றமற்ற நல்ல செய்யுள், நிலையான இறைவனைப் பாடும் பா எனக் கோடலுமொன்று. **மாண் ஆதரம்** - சிறந்த ஆவல். **கவின்** - அழகும். மண - வாசனையும். **வெள் இதழ்** - வெண்மையான மடல்களையும் உடைய. **வாணி** - அண்மைவிளி இயல்பாயிற்று.

குறிப்புரை : பேரூர் மரகத வல்லியைக் காக்கவே, வாணி! உனது அடி உள் அமைத்து ஏத்துவன் என்பது பொருள் முடிபு.

### *சத்தமாதர்கள்*

**தனதன தனதன தானத்த தத்தன**

**எகினமிசை இசைகொள் வேதக்கை பெற்றவள்,**
**இடபம் இவர்தரு பிநாகக் கரத்தினள்,**
**இனிய சிகியில் அயில் வேல் கைப் பிடித்தவள்,**
**எழில் கொள் கருடன் இவர் ஆழிக் கரத்தினள்,**
**சிகிவிழி அரியினில் ஊர் கைக் கலப்பையள்,**
**திகழ் தவள கரியின் ஏர் வச்சிரத்தவள்,**
**திரி அலகையில் இசை சூலக் கை பெற்றவள்,**
**செறி இவர் எழுவர்கள் தாளைப் பழிச்சுதும் -**

முகில் உறழ் அணி அருள் ஞானத்துணர்த்திரு
முருகு கமழ் குழலை வாரி, சிறப்பு உற
முடி ஒரு பணிதனில் ஊழிக் கணக்கு ஒழி
முதல்வியை, அளவு அறு வேதத்திரள்(ப்) பகர்
மகிமைகள் அளவு அறு கோடிக் கணக்கு எனும்
வகையினும் அமைதல் இலாளை, தவத்தருள்
மதியினர் உளமிசை பேரைத் தலத்து அவிர்
மரகத மயிலினை மேவிப் புரக்கவே. 9

**முகில் உறழ் அணி** - மேகத்தைப் போன்ற அழகைப் பெற்றதும். **அருள் ஞானத் துணர்** - திருவருள் மயமாகிய மெய்ஞானம் என்னும் மலர்க்கொத்துக்களை அணிந்ததும். **முருகு கமழ்** - நறுமணம் பரப்புகின்ற. **முடி ஒரு பணிதனில்** - முடித்துக் கொள்கின்ற ஒரு செயல் நிறைவேறுவதற்குள். தேவி தன் கூந்தலை வாரி முடிப்பதற்குள் உலகியலில் பல யுகங்கள் கழிந்துவிடும். **மகிமைகள்** - பெருமைகள். **தவத்தருள்** - தவசிகளின் உள்ளத்திலும். மதியினர் **உளமிசை** - மெய்யறிஞர்களின் மனத்தின்கண்ணும். பேரைத்தலத்து என்புழி எண்ணும்மை விரிக்க. **எகினமிசை** - அன்னவாகனத்தில், இவள் பிராம்மி, அபிராமி எனவும் கூறப்படுபவள். **இடபம்** - காளை. **பிநாகம்** - சிவபெருமானின் வில், இவள் மாகேஸ்வரி . **சிகியில்** - மயிலின் மேல். **அயில்** - கூர்மையான. இவள் கௌமாரி. **ஆழி** - சுதர்சன சக்கரம், இவள் வைஷ்ணவி. **சிகி விழி அரி** - நெருப்பைக் கக்குகின்ற கண்களை உடைய சிங்கம். **ஊர்** - இயங்குகின்ற. **கைக் கலப்பையள்** - சினம் கொள்கின்ற (பற்களாகிய) உழுகருவியை உடையவள், இவள் வாராகி. **தவள கரியின் ஏர்** - வெள்ளை யானை ஆகிய ஐராவதத்தின் அழகினை உடைய. வச்சிரத்தவள் - வச்சிராயுதத்தினள், இவள் இந்திராணி. **திரி அலகையில் இசை** - தன்னைச் சுற்றித் திரிகின்ற பேய்களோடு கூடியுள்ள "**அவளை மருங்கு அகலாத அலகைகளை இனிப்பகர்வாம்**" என்பது இரணிய வதைப்பரணி(*115.*) இவள் காளி. **எழுவர்கள்** - சப்தமாதர்கள்.

குறிப்புரை : மரகத மயிலினை மேவிப் புரக்கவே செறி இவர் எழுவர்கள் தாளைப் பழிச்சுதும் எனப்பொருள் முடிபு காண்க.

## முப்பத்து முக்கோடி தேவர்

தனனதன தத்தன தனனதன தத்தன
தனதன தத்தத்த தத்தான தானன

அருள்குலவு உளத்திடை நிலவும் உயர் சத்துவம்
அமையும் உடற்குப் புறத்தூடு மேயது என்
அணிகுலவி ஒப்பு அறு திருமுடியும், மிக்க பொன்
அடிகளும், மிக்க உள் செருக்கோடு நாடி, முன்
அறிகுவம் என, தமது உருவினை அகற்றி, ஓர்
அனம் ஏறுழிப் பொய்ப்பு மெய்க் கூடி ஓடினர்
அகம் அழிதர,பரசிவனை முடியில் பெறும்
அனக கைலைக்கு ஒக்கும் மிக்கான சீர்பொலி
தெருள் நிலவிடக் கருதிய புகழ் இமக்கிரி
திகழ் தவளப் பற்ப உத்தூளிதாகர
திட நிலவு பத்தர்கள் முறையில் அசைவு அற்று, அயர்
செழிய தவப் பெட்பினில் காவலோன் எதிர்,
செறி பதுமை நல்தடமிசை கொள் பதுமப்புடை,
சிறு குழவிப் பொற்பு உருச்சார மேவுபு
தெரிசனம் அளித்து, இறைகர மலரில் உற்று, அவிர்
திருமனையில் புக்கு, மெய்ச்சீல மேனைகொள்
பொருள் நிலைய வெற்பு இயல் அருவியின் மிகப் பொழி
புனித முலைப் புத்து இயல்பால் உணாவளர்
புதல்வியை, மனத்தினுள் மறைமுடி எனத்திகழ்
புரண இணைச் சிற்பரத்தாள்கள் நாடுபு,
புதுமை மதுரத் தமிழ் வளமை நிறை அற்புத
புகழ் பொலி நல் துத்தியப் பாடல் ஓதிடு
புலவர், தினம் நத்து பல்பொருள்களும் அளித்து, அடி
புக அருள் மெய்க் கற்பகத்து ஆன சோதியை
இருள் நிலையிடைச் சுழல் எனை அனைய சிற்றறி -
வினர்களும் முத்திச் சுகத் தூய வாழ்வு உற
இணைஇல் கருணைத் திரு உளமிசை மதித்து, அணி
இலகு சிறப்புத் திருப் பேரை ஊரினில்,
இசை தளிகொள் பச்சை நல் மரகத இயல்(க்) குலவு
எமது ஓர் அனைக்கு இட்ட மெய்ப்பான காவலர்
இரவிகள் உருத்திரர் வசுவினர் மருத்துவர்
என மிளிர் முப்பத்து முக்கோடி தேவரே. 10

**சத்துவம்** - சத்துவ குணம். **புறத்தூடு** - வெளியில். **செருக்கோடு** - கருவத்துடன். **அனம்** - அன்னப்பறவை. **எறுழி** - பன்றி. **பொய்ப்பு மெய்** - தத்தமக்கு இயற்கை அல்லாத உடல். **ஓடினர்** - முறையே மேலும் கீழும் சென்றவர்கள் ஆகிய பிரமனும் திருமாலும். **அகம் அழிதர** - செருக்கு அழியும்படி. இருவரும் அறியாத சிவபெருமானைத் தன் முடியில் பெற்றது கயிலை. **அனக** -குற்றம் அற்ற. **இமக்கிரி** - இமயமலை. **தவள பற்ப உத்தூளித ஆகர** - வெண்ணீறு பூசிய வடிவத்தை உடைய. **முறையில்** - போல. **அயர்** - (கயிலாயம்) செய்த. **செழிய** - வளமான. **பெட்பினில்** - ஆசையால், இல்லுருபு மூன்றன் பொருளில் வந்தது. காவலோன் என்றது பருவதராசனை, பதுமை செறி என மாறுக, திருமகள் வீற்றிருக்கும். **தடமிசை** - குளத்தில். **பதுமப்புடை** - தாமரைக்குப் பக்கத்தில். **பொற்புஉரு** - அழகிய வடிவம். இறை என்றது இமவானை. **மேனை** - இமவானின் மனைவி. **உணா** - உண்டு, முடித்து. **புரண சிற்பரத்தாள்கள்** - முழுமையான அறிவு மயமான (பூரண ஞான) திருவடிகள். **இணைத்தாள்கள்** - இரண்டு பாதங்கள், தனித்தனி இயையும். **நாடுபு** - விரும்பி. **மதுர** - இனிய. **துத்திய** - தோத்திர. **நத்து** - விரும்புகின்ற. **அடிபுக அருள்** - தன் திருவடிகளை அடையுமாறு ஆட்கொள்கின்ற. **ஆன** - போன்ற. **இருள்நிலை** - ஆணவத்தோடு கூடி இருக்கின்ற அறிவற்ற நிலை. **மதித்து** - நினைத்து. **அணி** - அழகு. **தளிகொள்** - திருக்கோயில் கொண்டுள்ள. **ஓர் அனை** - ஒப்பற்றவளாகிய பச்சை நாயகி. **இரவிகள்** - பனிரெண்டு சூரியர்கள். **உருத்திரர்** - பதினொருவர். **வசுவினர்** - எட்டு வசுக்கள். **மருத்துவர்** - அசுவினி தேவர்கள் இருவர். **"மருத்துவர் வசுக்கதிர் உருத்திரர் எனப்பொலியும் முப்பத்து முக்கோடி தேவர்கள்"** (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் 11) என்பார் குமரகுருபரர்.

## உ. செங்கீரைப் பருவம்

(இரட்டையாசிரிய விருத்தம்)

அம்பு அங்கு அசைக்க அசையும் பங்கயத் தண்மலர்
ஆவியில் கண்டு, அவாவி,
ஆய்ந்த இம ஏந்தல் கரம் வாய்ந்தருள, ஏந்தும் அனை
ஆன உயர் மேனை சுவணக்
கும்பங்கள் நன்கு அணியும் வம்பு அங்கு அறுத்து மைக்
குன்றில் நின்று ஒன்று அருவியில்
கொட்டு பால் ஊட்டி, மிக ஒப்பு இல் பாராட்டினொடு
கொண்டாட, உண்டு ஆடிடாது
எம் பங்க வல்வினையில் வெம்பு அங்கு அவ் அல்லல் அற
எம் பங்கு அமைந்த அமுதே!
என்று விண் மாரி என ஒன்று கண் மாரி பொழி
இனியவனை கனியும் உளம் ஆம்
செம் பங்கயம், பேரையன் பங்கு உறும் தேவி!
செங்கீரை ஆடியருளே!
செச்சை ஆர் புயன் அம்மை! பச்சைநாயகி அம்மை!
செங்கீரை ஆடியருளே! 1

**அம்பு** - தண்ணீர். **பங்கயத்தண்மலர்** - தாமரையின் குளிர்ந்த பூ. **ஆவியில்** - குளத்தில். **கண்டு** - (இமவான் குழந்தையைப்) பார்த்து. **இமஏந்தல்** - இமவான். **சுவணக்கும்பங்கள்** - பொற்குடங்கள். **வம்பு** - மார்க்கச்சு. **மைக்குன்றில்** - மேகங்கள் தவழும் மலையில். **உண்டு ஆடிடாது** - இமவான் மாளிகையில் சாப்பிட்டுக் கொண்டு விளையாடிக் கொண்டிருக்காமல், எம்மீது அன்பு கொண்டு என்பது கருத்து. **எம்** - அடியார்களாகிய எம்முடைய. **பங்க வல்வினையில்** - வருத்துகின்ற வலிமைமிக்க பாவத்தால். **வெம்பு அங்கு** - வாடுகின்ற அக்காலத்தில். **அல்லல்** - துன்பம். **எம் பங்கு** - எம்மிடத்தில். **என்று** - எனச் சொல்லி. **இனியவனை** - (தேவிக்கு) இனியவனாகிய பக்தனுக்கு, இரண்டன் உருபு நான்கன் பொருளில் வந்தது. **கனியும் உளம் ஆம்** - இளகுகின்ற மனத்தை உடையவள் ஆகிய. பங்கயப்பேரை வழிஎதுகை நோக்கி மெலிந்தது. **உளம் ஆம் தேவி, பங்கு உறும் தேவி எனத் தனித்தனி இயையும்.**

**செங்கீரை ஆடுதல்** - ஆறுமாதக் குழந்தை தவழும்போது ஒரு முழங்காலை ஊன்றி, மற்றொன்றை மடித்துத் தூக்கி, தலை இரண்டு தோள்களிலும் படும்படி மாறிமாறி ஆடுதல். செச்சை ஆர்புயன் அம்மை - வெட்சிமாலை அணிந்த முருகனின் தாயே, அண்மை விளி.

**பொன்னம் பொருப்பை நிகர்என் அம் புயத்தின்**
**பொருப்பு இறை விருப்பு இறைவி, கட்**
**புலனுக்கும் மிக்க புற்கலனுக்கும் ஒப்பு இல் பரி**
**புர புரண சரணம் அமையா,**
**இன் அம் சொல் இன்னம் சொல்; என் அம்மை என் அம்மை**
**என்று என்று கெஞ்ச, அருள் சீர்**
**இன் குதலை மழலை, அவர், நன்கு தலைமுடி துளக் -**
**கிக் கனிவின் ஏற்று, உவந்து**
**கன்னம் பொருந்த முத்தி, கரைஇல் முத்தி அம்**
**கரை ஏற்ற விரை ஏற்ற பூங்**
**காமர் மெய்த்திருவடித் தாமரைத் துணை கண்முன்**
**காட்டி, அருள் கூட்டிடவரும்**
**சின் அஞ்சுகம்! பேரை மன் அன்பு உறும் தேவி!**
**செங்கீரை ஆடியருளே!**
**செச்சை ஆர் புயன் அம்மை! பச்சை நாயகி அம்மை!**
**செங்கீரை ஆடியருளே!** 2

**பொன்னம்பொருப்பை நிகர் என** - பொன் மலைகளுக்கு இணையானவை என்று விளங்குகின்ற. **அம் புயத்தின்** - அழகிய தோள்களை உடைய. **பொருப்பு இறை** - மலையரசனின். **விருப்பு இறைவி** - ஆசைக்குரிய அரசி, மேனை. **கட்புலன்** - கண் ஆகிய இந்திரியம். **புற்கலன்** - உடல். **பரிபுர** - சிலம்புகள் அணியப்பெற்ற. **புரண** - ஒளிர்கின்ற. **அமையா** - அமைந்து. **இன் அம் சொல்** - இனிய அழகிய மொழிகளை. **இன்னம் சொல்** - மீண்டும் கூறுவாயாக. **என் அம்மை என் அம்மை** - என்னுடைய தாயைப் போன்ற பார்வதியே. **குதலை மழலை** - ஒருபொருட் பன்மொழி. **துளக்கி** - அசைத்து. **கனிவின்** - அன்புடன். **முத்தி** - முத்தம் இட்டு. **கரை இல்** - எல்லையற்ற. **விரை ஏற்ற** - நறுமணம் கொண்ட. **காமர்** - அழகிய. **சின்** - ஞானமயமான. **அஞ்சுகம்** - கிளியே, அண்மைவிளி.

நறவு ஆர் புனல் திகழ் நின்நிற மேனிமிசை ஆட்டி,
நன்கு அழுந்திப் படிந்தே
ஞாலத்து அமைந்த நதிசாலத்தில் மூழ்கு பெரு
நலம் முழுதும் இலகி, இன்பத்
திறவு ஆர் பதத்துணைக்குப் பரிபுரம் தண்டை
செம் பாதசாலம் இட்டு,
சிறுகரத்தில் தொடியுடன் காப்பு அணிந்து, சிர -
சில் மணிச் சுட்டி சூட்டி,
பிற ஆம் பணித் திரள்கள் கண்டம் உரம் மீதில்
பிறங்கப் புனைந்து, எம் விழிஆர்
பேறே! உனக்கு எது கைமாறே எனத் துதிகள்
பேசி, அனை ஆசி மிகவே
சிறவா வளர்க்க வளர் பிறவாநெறித் தலைவி!
செங்கீரை ஆடியருளே!
செச்சை ஆர் புயன் அம்மை! பச்சை நாயகி அம்மை!
செங்கீரை ஆடியருளே! 3

**நறவு ஆர் புனல்** - நன்மை மிக்க தண்ணீரால். நிறம் திகழ் நின் மேனி என மாறுக; **நிறம்** - ஒளி. **ஆட்டி** - குளிக்க வைத்து. கூட்டங்களில், பல புனித நதிகளில் என்றபடி. பச்சை நாயகியை நல்ல நீரில் குளிப்பாட்டுபவர்களுக்கு உலகில் அத்தனைத் தீர்த்தங்களிலும் முழுகிய பலன் கிடைக்கிறது என்றவாறு. **இலகி** - மிகுந்து. **இன்பத் திறவு ஆர்** - பேரின்ப வீட்டிற்கு வழியாகப் பொருந்தியுள்ள, முத்தியருளுகின்ற என்பது கருத்து. **பதத்துணை** - இரண்டு திருவடிகள். பாத சாலம் - கால்களில் அணியும் அணிகலங்களின் பொதுப்பெயர், பரிபுரம் தண்டை முதலிய சிறந்த (செம்) பாதசாலம் என்க. **தொடி** - வளையல். **பணித்திரள்கள்** - ஆபரணக் கூட்டங்கள். **கண்டம் உரம்** - கழுத்திலும் மார்பிலும், ஈரிடங்களிலும் உம்மை விரிக்க. **பிறங்க** - நன்கு ஒளிரும்படி. **அனை** - தாய் ஆகிய மேனை. **சிறவா** - சிறக்கும்படி.

ஏர் ஊரும் இமையவர்கள் சார் ஊரும் உவமை இலது
என்ன, மாளிகை சூளிகை
ஏன்ற கோயில்க்கண் ஒளி கான்ற கால் பவளத்தில்
இட்டு, மேல் இட்டிடும் கோல்

கூர் ஊரும் வயிரத்து அமைத்து, நீலத்தினில்
கொள் பலகை ஆர் தொட்டிலில்
குலவ வைத்து ஆட்டி, இன் பால் ஊட்டி, எழில் மடிக்
கொண்டு ஆட்டி, உயர் கொற்றவன்
போர் ஊர் உரத்தும் கரத்தும் சிரத்தும்
பொருத்தி, திருத்தி மிகவே
பொங்க, அருள் மங்களம் தங்க, நகை பங்கயப்
புரணஇரு சரண மலர் தோய்
சீர் ஊர்களில் பெரிய பேரூருடைத் தலைவி!
செங்கீரை ஆடியருளே!
செச்சை ஆர் புயன் அம்மை! பச்சைநாயகி அம்மை!
செங்கீரை ஆடியருளே! 4

**ஏர் ஊரும்** - அழகு மிகுந்த. **சார் ஊரும்** - வாழும் நகரமாகிய அமராவதியும், உம்மை உயர்வு சிறப்பு. **சூளிகை** - நிலா முற்றம். **கோயில்** - அரண்மனை. **ஏன்ற** - பொருந்திய. **கூர் ஊரும்** - சிறப்பு மிக்க. **மடிக் கொண்டு** - மடித்த துடையின், மேற்பக்கத்தில் இருத்தி. **கொற்றவன்** - அரசன் இங்கு இமவான், மலயத்துவச பாண்டியன் எனினும் ஆம். **போர் ஊர் உரத்தும்** - போர்த்தினவு கொண்ட மார்பின்கண்ணும்,. பொதுவாகத் தினவெடுக்கும் தோள்கள் என்பர். இங்கு மார்பு கூறப்பட்டுள்ளது. **கரத்தும்** - கைகளிலும். **திருத்தி** - மன நிறைவு, திருப்தி. **மங்களம்** - நன்மை. **நகை பங்கய புரண** - நன்கு அலர்ந்த தாமரையைப் போன்றதும் முழுமை பெற்றதும் ஆகிய, நகை பங்கயம் இலக்கணை வழக்கு.

குறிப்புரை : கோயிற்கண் தொட்டிலில் குலவ வைத்து கரத்தும் சிரத்தும் பொருத்தி, திருத்தி பொங்க, இருசரண மலர் தோய் தலைவி, பேரூருடைத் தலைவி செங்கீரை ஆடி அருள் எனப் பொருள் முடிபு காண்க.

பெரு வளத்திரள் சால மருவு அளக்கர் என் ஈடுஇல்
பெயர்கொள் கணவன்(ப்) புணரவே விண்
பெரிதும் மால் கொண்டு, அணைந்து, அரிய சூல்கொண்டு,
பெயரும் மா கொண்டல் மிசை நீள்

குரு வளத்திரள் மணி எய்து உரு அளப்பரிய சீர்க்
கோபுரம் இலங்கல் கண்டு, உள்
குளிர் தமிழ்ப் புலவர் இறை ஒளிர் மேனியில்(க்) கண்டு,
கொண்டாடி ஏத்தல் என்ன,
தருவளக் கற்பகத்து இறை என்று விண் புலவர்
தாமும் ஏத்திடு திறத்தால்,
தக்க பிறவாநெறியை ஒக்க அவர்களும் உறத்
தந்து, இயற்பெயர் புரக்கும்
திருவளப் பேரை பொலிதரு புகழ்த் தேவி! அவிர்
செங்கீரை ஆடியருளே!
செச்சை ஆர் புயன் அம்மை! பச்சை நாயகி அம்மை!
செங்கீரை ஆடியருளே! 5

**வளத்திரள்** - செல்வக் கூட்டம். **சால மருவு** - மிகப் பெற்ற. **அளக்கர்** -கடல். **மால்** - ஆசை. **விண் பெயரும்** - ஆகாயத்திற்குச் செல்லும். **மா கொண்டல்மிசை** - பெரிய மேகங்களுக்கு இடையே. **இறை** - சிவபெருமானின். **ஒளிர் மேனியில்** - பிரகாசிக்கின்ற திரு உடலை நிகர்த்துள்ளது என்று. **ஏத்தல் என்ன** - புகழ்தலைப் போல. தரு வள என மாறுக, கற்பக மரமாகிய செல்வத்தைப் பெற்றுள்ள. **இறை என்று** - அரசனாகிய இந்திரனைப் போன்று இருக்கிறது என எண்ணி. **விண் புலவர் தாமும்** - வானுலகத் தேவர்களும், தாம் பகுதிப்பொருள் விகுதி. **திறத்தால்** - சிறப்பின் காரணத்தால். **இயற்பெயர் புரக்கும்** - மக்களால் வழங்கப்படும் பேரூர் என்னும் பெயரை நிலைநிறுத்திக்கொள்ளும். பிறவாநெறி, பேரை என்னும் இரண்டும் திருப்பேரூரின் வேறுபெயர்கள்.

குறிப்புரை : வெண் மேகம் கடலிற் படிந்து சூலுற்றுக் கரிய நிறம் பெற்று வானில் படர்ந்துள்ளது. அதற்கிடையே பல நிறங்களால் பொலிந்த கோபுரம் விளங்குகிறது. இதனைக் காணும் தமிழ்ப்புலவர்கள் அதனைக் கரிஉரிபோர்த்த சிவபெருமானைப் போலக் கற்பனை செய்து போற்றுகின்றனர். அப்படியே பல அணிகலன்களைப் பூண்டு மேகத்தில் உலாவருகின்ற இந்திரன் எனத் தேவலோக வாசிகளும் அக்கோபுரத்தைப் போற்றுகின்றனர். அதனால் பெரிய நகரம் எனப் பொருள்படும் பேரூர் என்றும் மக்களால் வழங்கப்படும் பெயர் பொருள் பொதிந்தது ஆகிறது.

(பன்னிரு சீர் விருத்தம்)

திரை ஆர் கங்கை நதி ஆட,
தீ நச்சு அரவப் பணி ஆட,
திங்கள் ஆட, கொன்றை மலர்
தேன் விண்டு ஆட, பைந்தளம் சால்
விரை ஆர் வில்வம் அறுகு ஆட,
விருக இனத் தோல்உடை ஆட,
விரவும் கழல் ஆர் பதம் ஆட,
வெற்றிப் படைக் கைத்தலம் ஆட,
தரையார் ஆட, விண்ணகத்தே
சாரும் பலரும் ஆடிட, பா -
தலம் ஆம் தலத்தோர் தாம் ஆட,
தலைவன்றனை ஆட்டு இயற்றவைப்பாய்!
அரை ஆர் வடம் ஆடிடச் சிறிதே
ஆடி அருளாய் செங்கீரை!
அணிப் பேரூர் வாழ் மரகதமே!
ஆடி அருளாய் செங்கீரை! 6

**திரை ஆர்** - அலைகள் நிறைந்த. **தீ** - கொடிய. **அரவப்பணி** - பாம்புகளாகிய அணிகலன்கள். **விண்டு** - சிந்திக்கொண்டு. **விரை ஆர்** -நறுமணம் மிக்கதும் ஆகிய. **விருக இன** - விலங்கு வகை ஆகிய யானை, புலி ஆகியவற்றின். **கழல்** - வீரர்கள் தங்கள் கால்களில் வீரத்திற்கு அடையாளமாக அணிந்துகொள்ளும் ஓர் அணிகலன். **பதம்** - திருவடிகள். **படை** - ஆயுதங்கள். **தரையார்** - மண்ணுலகத்தவர். **தலத்தோர்** - இடத்தில் வாழ்பவர்கள். **தலைவன்றனை** - சிவபெருமானை. **அரை ஆர் வடம்** - அரைஞாண்.

குறிப்புரை : சிவபெருமான் ஆடிய காரணத்தால் வேறு பலவும் ஆடின எனக் கூறியதால் இது புற்புத அணி என்னும் பொருளணி ஆகும். இறைவனின் ஆட்டமே உலக இயக்கத்திற்குக் காரணம் என்னும் சிந்தாந்தக் கருத்தும் கூறப்பட்டவாறு.

"பதியினுடனே கலந்து ஒன்றிப்
பதியும் சுகம், இன்பே மயம் ஆம்
பண்பால், அறியப்படாது எனும் மெய்ப்
பான்மை உணர்ந்தேன்; நீர் சிரம் தோய்.
விதியினுடனே கலந்து உள் அவி -
வேகம் பொருந்தி உடல் ஓம்பி
வீணே மடியாது இலங்கு புவி
விண் பாதலத்தில் அமைவீர்காள்!
கதியின் வழியை எளிது உமக்குக்
காட்டியருள்வேன்; வம்மின்" எனக்
கருணை மிகையால் கூவிடும் சீர்
கடுப்ப, கடைக்கண்கொடு நோக்கி,
அதிக மகிழ்வாய், எம் அன்னை!
ஆடி யருளாய் செங்கீரை!
அணிப் பேரூர்வாழ் மரகதமே
ஆடி யருளாய் செங்கீரை! 7

**பதியினுடனே** - பரம்பொருளாகிய சிவபெருமானுடன். **பதியும்** - இரண்டற ஒன்றிவிடுகின்ற. **பண்பால்** - இயல்பின் காரணத்தால். **நீர்** - (புவி விண் பாதலத்தில் அமைவீர்களாகிய) நீங்கள். **சிரம் தோய் விதியினுடனே கலந்து** - தலையில் எழுதப்பட்டுள்ள ஊழ்வினையின் சேர்க்கையால். **உள் அவிவேகம் பொருந்தி** - மனத்தின்கண் அறியாமை கொண்டு. உடல் ஓம்பி என்றது உயிரைப்பற்றிய உணர்ச்சியே இல்லாமல் புலன் இன்பங்களில் மட்டும் ஈடுபட்டு என்னும் கருத்தில். **கதியின் வழியை** - வீட்டுப்பேற்றை அடைவதற்குரிய நெறியை. பச்சைநாயகி தலையை மேலும் கீழும் ஆட்டி அசைத்துச் செங்கீரை ஆடுதல் மூவுலகத்தினரையும் அழைப்பது போல் உள்ளது. **கடுப்ப** - போல. மகிழ்வாய் - உவகையடைந்து.

(வண்ண விருத்தம்)

**தனனாதனதன தய்யதனத்தன தானன தந்தான**

**கவின் நீடிய கமுகு எய்து துவர்ப் புரை**
**காய் உக அம்பூடு**
**கதிபாய் கயல்மிசை எய்தி அடித்து அணை**
**காரில் இவர்ந்து ஏகி.**
**நவில் மீன் என விணில் வைகும் அவற்றொடு**
**நாம நலம் தோய்நீர்**
**நதி வாவியினிடை புல்லுதிர்; அல்(ப்) பகல்**
**நாடு ஒளி குன்றாது**
**குவிவுஆர் இருதய மெய் அடிமைத் தவர்**
**கோலம் இயைந்தே கொள்**
**குறை தீர்தர என விள்ளுறும் அற்புத**
**கோடி மிகும் சீலம்**
**அவிர் பேரையில் வளர் செல்வி! களிப்புடன்**
**ஆடுக செங்கீரை!**
**அணியார் மரகத வல்லி மணிக்குயில்!**
**ஆடுக செங்கீரை!** 8

**கவின்நீடிய** - அழகு மிக்க. **கமுகு எய்து**- பாக்குமரத்தில் உள்ள. **துவர்ப்புரை காய்** - பவளத்தைப் போன்ற காய்கள். **அம்பூடு உக** - நீருக்குள் உதிர. **கதிபாய்கயல்** - வேகமாகப்பாய்கின்ற மீன்கள். **காரில்** - மேகத்தில். **இவர்ந்து** - ஏறி. **மீன்** - 1. கயல், வாளை போன்ற நீர்வாழ் உயிர்; 2.விண்மீன், உடு. **விணில்** - விண்ணில், இடைக்குறை. நாம நலம் தோய் - பெயரின் பொருத்தத்தைப் பெற்றுள்ள. **நீர்** - மீன்களாகிய நீங்கள். **அல்** - இரவு. **குவிவு ஆர்** - ஒரு முகப்பட்ட. **விள்ளுறும்** - சொல்லுகின்ற. **அற்புதம்** - ஆயிரம் கோடியைச் குறிக்கும் பெயர். **அற்புதக் கோடி** - ஆயிரம் கோடி கோடி, மிகவும் அதிகமான என்பது கருத்து. **அணி ஆர்** - அழகிய.

தனனாதானா தனதனதய்யா தானன தந்தானா

"திரை ஆர் கார்கோள் அறல் அயில் மைநேர்
சீலம் மிகுந்து, ஈடுஇல்
சிவையே! காவாய்; உனது அடி வல்லே
சேர விழைந் தேம்; மெய்
உரை ஈது; ஆனாது, உலகிடை நையாது,
ஊழ்வினை வென்றோர் தம் -
முடனே வாழ்வான் அருள்; உனை அல்லால்
ஓர் துணை உண்டோ? சொல்;
பரையே! தாயே! திருவருள் மெய்யாய்!
பாசம் ஒழிந்தோர் கொள்
பதிநேர் தாளாய்!" என நுவல் வல்லோர்
பாடல் மிகும் பேரை
அரைசீ! பூ மாதர்கள் புகழ் செல்வீ!
ஆடுக செங்கீரை!
அருள் மா தேவீ! மரகதவல்லீ!
ஆடுக செங்கீரை! 9

**திரை ஆர்** - அலைகள் நிறைந்த. **கார்கோள் அறல்** - கடல் நீரை. **அயில்** - உண்கின்ற. **மை நேர்** - மேகத்தைப் போன்ற. சீலம் என்றது கைமாறு கருதாது உதவும் பண்பினை. **வல்லே** - விரைவில். **ஆனாது** - நிலையில் தாழாமல். **பரையே** - பரம்பொருளே. **திருவருள் மெய்யாய்** - திருவருளையே உடலாகக் கொண்டவளே. **பதி நேர் தாளாய்** - சிவபெருமானால் விரும்பப்படும் திருவடிகளை உடையவளே. **வல்லோர்** - திறமையோடு துதிப்பாக்களைப் புனையவல்ல புலவர்களால் பாடப்பட்ட. **அரைசி** - அரசி, அகரத்திற்கு ஐகாரம் போலி, எதுகை நோக்கியது. **பூ மாதர்கள்** - வெண்டாமரையிலும் செந்தாமரைலும் முறையே திகழும் கலைமகளும் திருமகளும்.

தனதனதானா தனதனதய்யா தந்தா தந்தானா

**கருணை அறாதே பொழிதரு மைஆர்**
**கண்தோய் பைந்தோகை!**
**கதிர்வடிவேல் சார் புயம் இசை செவ்வேள் -**
**கண் பேர் இன்பு ஆர்வம்**
**மருவிய தாய்! மா தவம் மிகும் வல்லோர்**
**வண் தேன் உண்டு ஆடும்**
**மணம் மலி தாள் வாரிச மலர் மெய்யாய்!**
**மங்காது, ஒன்று ஈடுஇல்**
**அருமை கொள், மேல் வீடு இசைதர உள்வார்,**
**அன்பு ஆர்வம் தோய**
**அணை, அருள் மாண் ஆர் புகல் எனும் ஒய்யா -**
**ரம் சேரும் சோதி**
**திரு நடம் ஆர் பேரையில் வளர் செல்வீ!**
**செங்கோ செங்கீரை!**
**திகழ் பெரு வாழ்வு ஆம் மரகதவல்லி!**
**செங்கோ செங்கீரை!** 10

**அறாதே** - இடையீடு இல்லாமல். **மை ஆர்** - அஞ்சனம் தீட்டப்பெற்ற. **செவ்வேள்கண்** - முருகனின்பால், செவ்வேட்கண் எனற்பாலது வண்ணம் நோக்கி இயல்பாயிற்று. வல்லோர் ஆகிய வண்டுகள் என்க, உருவகம். **வாரிசமலர்** - தாமரைப்பூப் போன்ற. ஒன்றும் ஈடு இல் என உம்மை விரிக்க, எந்த ஒன்றுமே நிகராகாத. **மேல்வீடு** - அனைத்திற்கும் மேற்பட்டதாகிய முத்தியின்கண். **இசைதர உள்வார்** - பொருந்தக் கருதும் ஞானிகள். **அணை** - வந்தடைகின்ற. **அருள் மாண்** - திருவருளின் மாட்சி. **புகல் எனும்** - புகலிடம் ஆகிய. **ஒய்யாரம்சேரும்** - ஆடம்பரமான. புகல் எனும் சோதி ஒய்யாரம் சேரும் திருநடம் ஆர் என இயையும். சோதி என்றது சிவபெருமானை.

## 3. தாலப் பருவம்

பன்னிருசீர் விருத்தம்

சேட்டித்து அலைக்கும் மூல மலச்
சிமிழ்ப்பின், மருள் ஆர் வினைத் தூல
தேகத்து அமையும் உயிர்கள் படும்
தியக்கம் நினைந்து நினைந்து, இயல் மை
தீட்டித் திகழும் பெருங் கருணைத்
திருக் கண்இணை நீர் பொழிந்து, இரங்கும்
திறம் கண்டு, ஆற்றாள் சிமய மன்னன்
தேவி எடுத்து, திருமுலைப்பால்
ஊட்டி, செவி ஆர் அருள் அமுத
ஊற்றாய் உவட்டாது அண்ணித்து, உள்
உருக்கும் மதலைக் குதலைமொழி
உண்டு, தேக்குந்தலில், பாடி,
ஆட்டித் துயிற்றும் திருப்பேரூர்
அரசீ! தாலோ தாலேலோ!
அவிர் சீர்ப் பச்சை நாயகி! எம்
அன்னே! தாலோ தாலேலோ! 1

**சேட்டித்து** - செயல்படுத்தி, அதாவது இறைவனால் அருளப் பெற்ற தனு, கரண, புவன, போகங்களோடு பொருந்தி வினைகளைப் புரியுமாறு கேவல நிலையிலுள்ள ஆன்மாவைத் தூண்டி. **அலைக்கும்** - உயிரைப் பலவாறு அலைக்கழிக்கும். **மூலமலச் சிமிழ்ப்பின்** - ஆணவத்தின் கட்டினால். **மருள் ஆர்** - மயக்கம் நிறைந்ததும். **வினைத் தூல தேகத்து** - இருவினைகளின் விளைவாகப் பெற்றுள்ள பருவுடலில். **தியக்கம்** - கலக்கத்தை. பச்சைநாயகி ஆகிய குழந்தை ஆணவத்தில் சிக்கிக் கலங்குகின்ற உயிர்களின் துன்பத்தை எண்ணி அழுகிறாள் என்பது சைவ சித்தாந்த நுட்பம் பொதிந்த கருத்து. அருளது சத்தி ஆகும் அரன்றனக்கு என்பதை நினைக. **கண்டு ஆற்றாள்** - பார்த்துப் பொறுக்காதவள் ஆகிய மேனை. **உவட்டாது அண்ணித்து** - திகட்டிவிடாமல் பருகச்செய்து. **உண்டு** - செவியாரக் கேட்டு, இலக்கணை வழக்கு. **தேக்குந்தலில்** - சிறு ஏப்பம் விடுவதால் (பாலூட்டுவதை நிறுத்தி விட்டு). **துயிற்றும்** - தூங்கவைக்கும், துயிற்றப்படும் எனப் பிறவினைப் பொருளில் ஆட்சி.

சுரும்பு உந்திய செங்கமலம், அயல்
தோய் வெண்கமலத்தினுக்கு, எம்மைத்
துணையும் பெருமை உண்டு எனில், முன்
தோன்றும் பிரமன் இலக்குமியும்
விரும்பும் தரம் உண்டாம்; அமையா
விதியால் தாழ்வு என்றிடலில் இதழ்
விளிம்பு வெளிநீட்டிட, கண்ட
வெண்தாமரை, சத்துவத் தென்மறை
தரும் புந்தி கொள் வள்ளுவர், வெண்மைத்
தகை தற்புகழும் செருக்கு என்று
சாற்றல் அகத்து ஓர்கிலைகொல்? என்னத்
தந்தத் தவளம் காட்டிடலில்
அரும்பும் திருத் தண்பணைப் பேரூர்
அரசீ! தாலோ தாலேலோ!
அவிர்சீர்ப் பச்சை நாயகி! எம்
அன்னே! தாலோ தாலேலோ! 2

**சுரும்பு உந்திய** - வண்டுகள் சூழ்கின்ற. **அயல்தோய்** - அருகில் உள்ள. **எம்மைத்துணையும்** - செந்தாமரை ஆகிய எங்களுக்கு இணையான. **முன் தோன்றும் பிரமன்** - எல்லோருக்கும் முதலில் உண்டாகியவராகிய பிரமதேவரும். **தரம்** - தகுதி. **அமையாவிதியால்** - (வெண்தாமரை ஆகிய உங்களுக்கு அந்தத் தகுதி), ஏற்படாத காரணத்தால். **என்றிடலில்** - எனக் கூறுவதைப்போல. **விளிம்பு** - ஓரப்பகுதி. செந்தாமரை மலர் வெண்டாமரையை இகழ்வதைப் போல இதழ் விரித்திட என்றவாறு. **சத்துவத் தென்மறை** - கொல்லாமையை வலியுறுத்துவதாகிய திருக்குறளை புந்திகொள் என்றது பேரறிவு உடைய என்னும் கருத்தில். **"வெண்மை எனப்படுவது யாது எனில் ஒண்மை உடையம் யாம் என்னும் செருக்கு"** (844). **சாற்றல்** - கூறுவதை. **அகத்து ஓர்கிலை கொல் - உள்ளத்தில்** உணர்ந்து கொள்ளவில்லையா. தவளத் தந்தம் என மாறுக, வெண்பல். செந்தாமரை ஒண் நிறம் உடையதாக இருப்பினும் கருவம் கொள்வது கூர்த்த அறிவற்ற வெண்மைத் தன்மை ஆகும் என வெண்டாமரை விளக்குகிறது. வெண்டாமரையைப் பழிக்க வேண்டும் என்னும் எண்ணம் உண்மையில் செந்தாமரைக்கு இல்லாதபோது இருப்பதாகக் கவிஞன் கற்பித்துத் தன்

## 3. தாலப் பருவம்

பன்னிருசீர் விருத்தம்

சேட்டித்து அலைக்கும் மூல மலச்
சிமிழ்ப்பின், மருள் ஆர் வினைத் தூல
தேகத்து அமையும் உயிர்கள் படும்
தியக்கம் நினைந்து நினைந்து, இயல் மை
தீட்டித் திகழும் பெருங் கருணைத்
திருக் கண்இணை நீர் பொழிந்து, இரங்கும்
திறம் கண்டு, ஆற்றாள் சிமய மன்னன்
தேவி எடுத்து, திருமுலைப்பால்
ஊட்டி, செவி ஆர் அருள் அமுத
ஊற்றாய் உவட்டாது அண்ணித்து, உள்
உருக்கும் மதலைக் குதலைமொழி
உண்டு, தேக்குந்தலில், பாடி,
ஆட்டித் துயிற்றும் திருப்பேரூர்
அரசி! தாலோ தாலேலோ!
அவிர் சீர்ப் பச்சை நாயகி! எம்
அன்னே! தாலோ தாலேலோ! 1

**சேட்டித்து** - செயல்படுத்தி, அதாவது இறைவனால் அருளப் பெற்ற தனு, கரண, புவன, போகங்களோடு பொருந்தி வினைகளைப் புரியுமாறு கேவல நிலையிலுள்ள ஆன்மாவைத் தூண்டி. **அலைக்கும்** - உயிரைப் பலவாறு அலைக்கழிக்கும். **மூலமலச் சிமிழ்ப்பின்** - ஆணவத்தின் கட்டினால். **மருள் ஆர்** - மயக்கம் நிறைந்ததும். **வினைத் தூல தேகத்து** - இருவினைகளின் விளைவாகப் பெற்றுள்ள பருவுடலில். **தியக்கம்** - கலக்கத்தை. பச்சைநாயகி ஆகிய குழந்தை ஆணவத்தில் சிக்கிக் கலங்குகின்ற உயிர்களின் துன்பத்தை எண்ணி அழுகிறாள் என்பது சைவ சித்தாந்த நுட்பம் பொதிந்த கருத்து. அருளது சத்தி ஆகும் அரன்றனக்கு என்பதை நினைக. **கண்டு ஆற்றாள்** - பார்த்துப் பொறுக்காதவள் ஆகிய மேனை. **உவட்டாது அண்ணித்து** - திகட்டிவிடாமல் பருகச்செய்து. **உண்டு** - செவியாரக் கேட்டு, இலக்கணை வழக்கு. **தேக்குந்தலில்** - சிறு ஏப்பம் விடுவதால் (பாலூட்டுவதை நிறுத்தி விட்டு). **துயிற்றும்** - தூங்கவைக்கும், துயிற்றப்படும் எனப் பிறவினைப் பொருளில் ஆட்சி.

சுரும்பு உந்திய செங்கமலம், அயல்
தோய் வெண்கமலத்தினுக்கு, எம்மைத்
துணையும் பெருமை உண்டு எனில், முன்
தோன்றும் பிரமன் இலக்குமியும்
விரும்பும் தரம் உண்டாம்; அமையா
விதியால் தாழ்வு என்றிடலில் இதழ்
விளிம்பு வெளிநீட்டிட, கண்ட
வெண்தாமரை, சத்துவத் தென்மறை
தரும் புந்தி கொள் வள்ளுவர், வெண்மைத்
தகை தற்புகழும் செருக்கு என்று
சாற்றல் அகத்து ஓர்கிலைகொல்? என்னத்
தந்தத் தவளம் காட்டிடலில்
அரும்பும் திருத் தண்பணைப் பேரூர்
அரசீ! தாலோ தாலேலோ!
அவிர்சீர்ப் பச்சை நாயகி! எம்
அன்னே! தாலோ தாலேலோ! 2

**சுரும்பு உந்திய** - வண்டுகள் சூழ்கின்ற. **அயல்தோய்** - அருகில் உள்ள. **எம்மைத்துணையும்** - செந்தாமரை ஆகிய எங்களுக்கு இணையான. **முன் தோன்றும் பிரமன்** - எல்லோருக்கும் முதலில் உண்டாகியவராகிய பிரமதேவரும். **தரம்** - தகுதி. **அமையாவிதியால்** - (வெண்தாமரை ஆகிய உங்களுக்கு அந்தத் தகுதி), ஏற்படாத காரணத்தால். **என்றிடலில்** - எனக் கூறுவதைப்போல. **விளிம்பு** - ஓரப்பகுதி. செந்தாமரை மலர் வெண்டாமரையை இகழ்வதைப் போல இதழ் விரித்திட என்றவாறு. **சத்துவத் தென்மறை** - கொல்லாமையை வலியுறுத்துவதாகிய திருக்குறளை புந்திகொள் என்றது பேரறிவு உடைய என்னும் கருத்தில். **"வெண்மை எனப்படுவது யாது எனில் ஒண்மை உடையம் யாம் என்னும் செருக்கு"** (844). **சாற்றல்** - கூறுவதை. **அகத்து ஓர்கிலை கொல் - உள்ளத்தில்** உணர்ந்து கொள்ளவில்லையா. தவளத் தந்தம் என மாறுக, வெண்பல். செந்தாமரை ஒண் நிறம் உடையதாக இருப்பினும் கருவம் கொள்வது கூர்த்த அறிவற்ற வெண்மைத் தன்மை ஆகும் என வெண்டாமரை விளக்குகிறது. வெண்டாமரையைப் பழிக்க வேண்டும் என்னும் எண்ணம் உண்மையில் செந்தாமரைக்கு இல்லாதபோது இருப்பதாகக் கவிஞன் கற்பித்துத் தன்

குறிப்பை ஏற்றிக் கூறுவதால் அணி நூலார் இதனை இல்புலஏதுத்தற்குறிப்பேற்ற அணி என்பர்.

**நீடிக் கவின்ற பளிக்கு நிலா**
**நிலை உப்பரிகைமீது திரு**
**நிகர்க்கும் மடவார், இன்பு அமையும்**
**நினைவுஉள்(ப்) பொருந்தி, மகிழ்நருடன்**
**ஊடிக் கடுத்தார் போன்று, ஒருசார்**
**ஒதுங்க, கவன்று, அங்கு உறுபுலவி**
**ஒழிப்பக் கருதி, அவர் உருப் போன்று**
**உற்ற விம்பம்தனை, ஆர்வத்து**
**ஓடிக் கனிவில் கெஞ்ச, அயல்**
**ஒருவாமையின், மாற்றார் பலர் ஈண்டு**
**உற்றாரோ என்று, ஒல்லை தவ –**
**னுடைய திருத்தாள்த் துணை போற்றி,**
**ஆடிக் களிக்கும் திருப்பேரூர்**
**அரசீ! தாலோ தாலேலோ!**
**அவிர்சீர்ப் பச்சைநாயகி! எம்**
**அன்னே! தாலோ தாலேலோ!** 3

**உப்பரிகை** - மேல்மாடம். திரு -இலக்குமி. **ஊடிக் கடுத்தார் போன்று** - காதற்பிணக்கில் சினங்கொண்டவளைப்போல, இது நடிப்பு. **கவன்று** - (கணவன்) வருந்தி. **புலவி ஒழிப்ப** - ஊடலை உணர்த்த. **உரு** - வடிவம். **விம்பம்** - பளிங்கில் தோன்றும் நிழலுருவம். **கனிவில்** - அன்போடு. **அயல் ஒருவாமையின்** - அவ்வுருவம் வேறு இடத்துக்கு அகலாததால். **மாற்றார்** - தலைவனுக்குத் தன்னைத் தவிர வேறு காதலியர். **ஈண்டு** - இவ்விடத்தில். **ஒல்லை** - விரைவில். **தவனுடைய** - கணவனின். **ஆடிக் களிக்கும்** - ஊடல் ஒழிந்து கூடி மகிழும். திருப்பேரூரின் வளம் கூறும் இப்பாடல்,

ஆடவரோடு ஊடிஎழும் அம்சொல்மட நல்லார்
நீடுஒளிய தூணின் முகம் கோட்டி எதிர் நிற்ப
வாடும் இடையார் என மருண்டு இறைவர் பாவைத்
தாள்தொழலும் மெய்த்துனிதகைப்ப நகை செய்வார் (46)

என்னும் நைடதத்தின் மறுபதிப்பு ஆகும்.

முன்னிப் பணைத்த கழைத்தனுவின்
முழங்கும் நாண், கைக்கொண்ட கொடி,
முரசு நிகர்க்கும் விழியில், மதன்
முடியில் அமையக் கவித்தமுடி
என்னப் பணைத்த கனதனத்தில்,
இதயம் கரைக்கும் கடைசியர்கள்
இதழ் ஆர் மதுவும், தென்னை பனை
ஈந்த மதுவும் துய்த்து, அலர்க் கள்
மன் அப்புஅணைத்தண் மடுக்கண் அறல்
மடுத்து, மள்ளார் மயங்க, முக
மதிகாட்டுபு, பள்ளிகள் முன்னை
மதி காட்டுபு தேற்றிடும் வியன்ஆர்
அன்னப் பணைத் தண் திருப் பேரூர்
அரசீ! தாலோ தாலேலோ!
அவிர்சீர்ப் பச்சை நாயகி! எம்
அன்னே! தாலோ தாலேலோ. 4

**முன்ன** - எண்ணி வியக்கும்படி. **பணைத்த** - பருத்து வளர்ந்துள்ள. **கழைத்தனு** - கரும்புவில். நாண் என்றது வண்டுகளை. கொடி என்றது மீனை. முரசு என்றது கடலை. இம்மூன்றும் விழிக்கு உவமைகள். **மதன்** - மன்மதனின். **முடியில்** - தலையில். **முடி என்ன** - கிரீடத்தைப் போல. **கன தனத்தில்** - பெரிய நகில்களால். **கடைசியர்** - உழத்தியர்கள். **இதழ் ஆர் மது** - உதட்டில் ஊறும் நீர். **ஈந்த** - கொடுத்த. **மலர்கள் மன் அப்பு அணை** - பூக்களின் தேன் கலந்துள்ள நீர் வந்து சேர்கின்ற. **தண் மடுக்கண்** - குளிர்ந்த குளத்தில். **அறல் மடுத்து** - தண்ணீர் குடித்து. **மள்ளர்** - உழவர். **முக மதி காட்டுபு** - தம்முடைய முகங்களாகிய சந்திரனைக் காட்டி. **முன்னை மதி காட்டு** - மயங்குவதற்கு முன் இருந்த பழைய அறிவுத் தெளிவை உண்டாக்கி. **வியன் ஆர்** - பெருமை பொருந்திய. **அன்னத் தண்பணை** - அன்னப் பறவைகள் திரிகின்ற குளிர்ந்த வயல்களை உடைய, உணவுப் பொருள்களை விளைவிக்கின்ற வயல்கள் எனினும் ஆம்.

"பிசையும் கொடு வெம் மல மாயைப்
பித்தம் ஒழித்து, சித்தமிசை
பிரியாது அள்ளூறிடும் புரண
பேர்இன்பு உற, முன் புரி தவச்சீர்
இசையும் பெரியீர்! வம்மின்கள்"
என்ன அழைத்தல் போன்றும், "இதில்
ஏற்றம் ஆம் பேர் ஊர் பிறிது ஒன்று
இன்று" என்று இசைத்தல் போன்றும், எறி
கசையும் போன்று, எம் இறை முடி நேர்
கதி கொள்ளேல் என்று, ஓர் ஆழிக்
கனலி தேரின்பரி புடைத்து,
கயிலை வாயில் நந்தி ஒத்தும்
அசையும் விடைக் கேதனப் பேரூர்
அரசீ! தாலோ தாலேலோ!
அவிர்சீர்ப் பச்சை நாயகி! எம்
அன்னே! தாலோ தாலேலோ 5

**பிசையும்** - கையால் அழுத்திப் பிசைவதைப் போலக் கலக்குகின்ற. **மாயைப்பித்தம்** - மாயையால் நேர்கின்ற மயக்கம். **சித்தமிசை** - அறிவின்கண். **அள்ளூறிடும்** - துய்ப்பதற்கு ஆசைப்படச்செய்யும். **புரண** - முழுமையான. **இதில்** - இந்தப் பேரூரை விட. **இசைத்தல்** - சொல்லுதல். **எறி கசை** - சொடுக்கப்படுகின்ற சாட்டை. உம்மை இசை நிறை. **இறை முடிநேர்** - சிவபெருமானின் தலைக்குமேல். **கதிகொள்ளேல்** - இயங்காதே. ஓர் ஆழித்தேர், கனலிதேர் எனத் தனித்தனி இயையும். **ஆழி** - சக்கரம். **கனலி** - சூரியன். **பரிபுடைத்து** - குதிரைகளை அடித்து. **ஒத்தும்** - போலக் காவற்பணி புரிந்தும். **விடைக்கேதனம்** - நந்திக் கொடி.

குறிப்புரை : மதிலின் மீது பறக்கும் கொடி வரவேண்டாம் எனத் தடுப்பதாகவும், வருக என அழைப்பதாகவும், ஒரே சமயத்தில் சிலரை வரவேற்று வேறு சிலரை வாரல் என்பதாகவும் பலவாறு தற்குறிப்பேற்ற அணி அமைய வருணிப்பதை இலக்கியங்களுள் பரவலாகக்காண முடிகிறது. **தாணுவாய் நின்ற பரத்துவனை உத்தமனை இறைஞ்சீர் என்று வேணுவார்கொடி விண்ணோர்தமை விளிப்ப**

**போல் ஓங்கும் மிழலையாமே** (தேவாரம் 1 - 132 - 5) என்னும் ஞானத் திருமொழியை நினைவூட்டுகின்றன இவ்வடிகள்.

(இரட்டையாசிரிய விருத்தம்)

"எண்இல் பல அண்டங்களுள் நிலவு பிண்டங்கள்
ஏற்றுஅமை சராசரங்கள்
எல்லாம் ஓர் நின் அசைவு அது அல்லால் இயங்கிடுதல்
இன்று" என்று நன்று ஒன்று சீர்ப்
பண் நிலவு வேதாகமங்கள் முதலாம் கலைகள்
பறை அறைந்திடு திறத்தால்,
பாசு விரிமெய் அருள் தேசுவிரிவடிவம் எம்
பாக்கியத்தால் படைத்தே,
ஒள் நிலவு தரிசனம் பரிசனம் புரிய, ஈண்டு
உற்ற நீ! சற்று இரங்கில்,
ஓ என்று எலாம் இரங்கிடநேரும்; யாம் சிவத்து
ஒன்றிட உறங்குதி எனத்
தண்நிலவு மேனை துதி விண்டு பாராட்டு சுதை!
தாலேல! தாலேலவே!
தார்கொள் சுரர் பரவு பேரூர்கொள் மரகத வல்லி!
தாலேல! தாலேலவே! 6

**எண் இல்** - கணக்கற்ற. **அண்டங்கள்** - உலகுகள். **பிண்டங்கள்** - உடல்கள். **சர அசரங்கள்** - இயங்குதிணை நிலைத்திணை உயிர்கள். **பறை அறைந்திடு திறத்தால்** - தம்பட்டம் கொட்டி அறிவிப்பதைப் போலத் தெளிவாகவும் பரவலாகவும அறிவித்திருப்பதால். பாசு விரி வடிவம், மெய் அருள் தேசு விரி வடிவம் எனத் தனித்தனி இயையும். பாசு - பசுமை நிறம். **ஒள் நிலவு பரிசனம் தரிசனம் புரிய** - மாசற்ற தொண்டர்கள் நேரில் கண்டு அருள் பெறுவதற்காக. **ஈண்டு உற்ற** - (இமயமலை ஆகிய) இவ்விடத்தில் திருவவதாரம் செய்துள்ள. **இரங்கில்** - அழுதாயெனில். **எலாம்** - அண்ட சராசர உயிர்கள் யாவும். **யாம்** - (உன் அடியார்களாகிய) நாங்கள். **சிவத்து ஒன்றிட** - வீடு பேறடைய, **என** - என்று வேண்டி. **தண் நிலவு மேனை** - குளிர்ந்த குணங்களை உடைய மேனை, குளிர்ந்த சந்திரனைப் போன்ற எனினுமாம்.

**துதிவிண்டு** - தோத்திரம் கூறி. **சுதை** - மகளே, அண்மை விளி இயல்பாயிற்று. **தார்கொள் சுரர்** - முருகவேளின் கருணையால் சூரன் முதலிய அசுரர்களை வென்ற தேவர்கள். சூரர்களால் துன்புற்ற தேவர்கள் இறைவனிடம் அடைக்கலமாகி முருகப்பெருமானால் வென்றது பேரூர்த் தலபுராண வரலாறுமாம்.

**"காத்திட்ட உயிர் உனைக் காக்கும், மாய்த்திட்ட உயிர்**
**கருணை அற மாய்க்கும், உண்ட**
**காயங்கள் நீ கொண்ட காயம் உண்டிடும்" எனக்**
**கண் அறிஞர் விள் நலத்தால்**
**வாய்த்திட்ட எனை, வயிறு வாய்த்து, இட்டமுடன் மிக**
**வளர்த்திட்ட அன்னைமாரை**
**மக்கள் என உட்கொண்டு, அனோர்கள் செய் கடன்புரிய**
**வரும்; முன்பு வந்தும் உளஆல்.**
**ஒய்த்திட்ட மனதில் ஒளி பூத்திட்ட உன்றனை**
**உறக்கு துதி ஓதில் அப் பேறு**
**உதவுதற்கு ஐயம் ஒன்று இன்று என்று நம்பி உளம்**
**உருகு என்மிசை பெருகு அருள்(க்) கண்**
**சாத்து இட்டம் உற்று உயிர் சிவத்திடை உறக்கு தாய்!**
**தாலேல! தாலேலவே!**
**தார் கொள் சுரர் பரவு பேரூர் கொள் மரகதவல்லி!**
**தாலேல! தாலேலவே!** 7

**காத்திட்ட** - நீ அருளால் காப்பாற்றிய. **உண்ட காயங்கள்** - புலாலாகச் சாப்பிட்ட உடல்கள். **கொண்ட காயம்** - பெற்றுள்ள உடம்பு. **கண் அறிஞர்** - ஆராய்கின்ற புலவர்கள், வினைத்தொகை. **விள்** - கூறுகின்ற. **வாய்த்திட்ட** - தன் குழந்தையாக ஏற்பட்டுவிட்ட. **மக்கள் என உட்கொண்டு** - வேறு பிறவியில் தன் குழந்தையாக ஏற்று. **அனோர்கள்** - அப்பெற்றோர். **செய்கடன்** - செய்த (பெற்று வளர்த்து உருவாக்குதல் முதலிய) கடமைகளை. **புரிய வரும்** - (வேறு பிறவியில்) திருப்பிச் செய்ய வேண்டிவரும். **முன்பு வந்தும் உள** - முற்காலத்தில் இவ்வாறு நடைபெற்றும் உளது, ஆல் அசை. **ஒய்த்திட்ட** - ஒடுக்கப்பட்ட, ஒய்தல் என்பதன் பிறவினை வ்டிவமாகிய இச்சொல் மிக அருகிய வழக்கு.

**உறக்குதுதி** - தூங்கவைக்கும் தோத்திரம், தாலாட்டு. **கண் சாத்துதல்** - பார்த்தல். **இட்டம் உற்று** - விருப்பம் கொண்டு. **தாய்** - அன்னையே, அண்மைவிளி.

(வண்ண விருத்தம்)

**தனதனதானா தனதன தய்யா தானா தானானா**

**வயம் மலி, கூர் ஆர், விதிர், இலை வைவேல்,**
**வாள், மான், மான், மீன், மா-**
**வடுநிகர் தோடு ஏய் அருள் விழி கொள்வாய்!**
**மாண்ஆர் பூண்ஆர் தாள்**
**நய வழிபாடு ஓவரும் நனி நல்லார்**
**நா மீதே பாமான்**
**நனி வதிவு ஆய் ஓதிட அருள் செய்தே,**
**நாள் நாள் நாநா ஆம்**
**இயல்பு உள பேர் ஆடல்கள் புரிமெய் வீறு**
**ஈயா, ஈறு ஆர் போழ்து,**
**இனி ஒரு தாய்பால் மகவு என எய்தா**
**ஏர் ஆர் வீடு ஈவாய்!**
**தயவு உரு ஆர் கோமளம் நிறை செல்வீ!**
**தாலோ தாலேலோ!**
**தனைநிகர் பேரூர் மரகத வல்லீ!**
**தாலோ தாலேலோ!** 8

**வயம் மலி** - வெற்றி மிகுந்தும். **கூர் ஆர்** - கூர்மை பொருந்தியதும். **விதிர்** - எதிரிகளை அச்சுறுத்துவதும். **இலை** - இலையின் வடிவத்தைப் பெற்றதும். **வை** - தன்னை உடையவரைப் பாதுகாப்பதும் ஆகிய, கூர்மை ஏற்கெனவே கூறப்பட்டுவிட்டமையின் இப்பொருள் கொள்ளப்பெற்றது. **மான்** - மானின் கண்களைப் போன்று மருட்சி உடையதும். **மால்** - கரிய நிறம் வாய்ந்ததும். **மீன்** - கயலைப் போன்றதும், **தோடு ஏய்** - காதணிகளை அளாவுகின்றதும் ஆகிய. **பூண்** - அணிகலன்கள். **ஓவரும்** - விட்டு விடாத. **நா மீதே** - நாக்கில். **பாமான்** - கலைமகள். **நனி வதிவு ஆய்** - நன்றாக அமர்ந்து கொண்டு. **நாள் நாள்** - தினந்தோறும். **நாநா ஆம்** - பற்பல விதங்களாக. **வீறு** - பெருமை. **ஈயா** - கொடுத்து. **ஈறு ஆர்**

**பொழுது** - முடிவில், இறக்கும் தறுவாயில். **தாய்பால்** - அன்னையிடம். **ஏர் ஆர்** - பெருமை பொருந்திய. **கோமளம்** - மென்மை.

தத்தனா தனதன்ன தத்தனா தனதன்ன தானா தானானா

விக்கினேசுரன் என்னும் ஒப்பு இல் பாலனை முன்னம்
மேலோர் ஊறு ஊறு ஆய்
மெய்த் தபோ பலம் இன்னம் உட்கொள் ஆவல்கள் எண்ணின்
மேல்மேலே ஈவான்
மெய்க் கிரீசன் ஓர் மும்மதக் கை மா என நண்ண,
வீறு ஆர் சீர் சால் ஓர்
விச்சை ஆர் பிடிவண்ணம் உற்று, உலாவு அருள் மின்ன
மேல்நாள் சேர்வாய்! நீள்
கைக் கிரீதரன் அன்ன சித்தி மாதவர் எண்ணு
கார்கோள் ஆர்மால்நேர்
கண்(ச்) சரோருக தண் அருள் குலாவிய எம் ம-
கா தேவீ! வானோர்
சக்கில் நாட அரும் உண்மை நல் சொரூபம் எய்து அன்னை!
தாலோ! தாலேலோ!
தக்க பேரையில் மன்னு பச்சை நாயகி அம்மை!
தாலோ! தாலேலோ! 9

**விக்கினேசுரன்** - விநாயகர். **முன் அம் மேலோர்** - தியானிக்கின்ற சிறப்பை உடைய பெரியவர்களின். **ஊறு ஊறு ஆய்** - துன்பங்கள் எல்லாம் துன்புற்று, நீங்கி என்றவாறு, இது துன்ப நீக்கம். **மெய்** - நிலைத்த. **இன்னம்** - தாம் அடைந்துள்ளவற்றிற்கும் மேலாக. **உள் கொள் ஆவல்கள்** - நினைக்கின்ற விருப்பங்களை. **எண்ணில்** - தன்னை நினைத்தால், வழிபட்டால் என்றபடி. இது இன்ப ஆக்கம்.

"என்னரே ஆயினும் யாவது ஒன்று எண்ணுதல்
முன்னரே உனது தாள் முடி உறப் பணிவரேல்
அன்னார்தம் சிந்தைபோல் ஆக்குதி; அலதுஉனை
உன்னலார் செய்கையை ஊறு செய்திடுக நீ"

(கந்தபுராணம் 6-14-152)

என்று சிவபெருமான் விநாயகரிடம் கூறியது இங்கு நினைக்கற்பாலது. **மெய் கிரீசன்** - என்றும் நிலைத்த சத்துப் பொருளாகிய கயிலாயபதி. **கை மா** - துதிக்கையை உடைய விலங்கு, யானை. **விச்சை ஆர்** - சித்து எனப்படும் ஞானமயமாகிய. **பிடி வண்ணம்** - பெண்யானையின் வடிவம். **கிரீதரன்** - கிரிதரன், கோவர்த்தன மலையைத் தாங்கிய கண்ணபெருமான், வண்ணம் நோக்கிய நீட்டல் விகாரம், **"மேன்மைச் சித்தியினில் தேவகிதன் மகனே மிக்கோன்"** (கௌமார முறைமை *3-91*) என்பார் வண்ணச்சரபர். **எண்ணு** - கருதுகின்ற. **கார்கோள் ஆர் மால் நேர்** - கடலில் பொருந்தியுள்ள கருமையைப் போன்ற, கரிய என்றவாறு. **சரோருகம்** - தாமரை. **வானோர்** - தேவர்களுக்கும், உயர்வு சிறப்பும்மை விரிக்க. **சக்கில் நாட அரும்** - ஊனக்கண்களால் காண முடியாத.**சொருபம்** - வடிவம்.

**தனனா தானா தனதன தனதன தய்யாதானானா.**

**கழை தோய் பூ வாளிகள் அவிர், வளை புனை**
**கையாய்! தாலேலோ!**
**கலை ஆர் ஆலோன் என வரு குழைபொலி**
**கர்ணீ! தாலேலோ!**
**தழைசால் கேதாரமிசை கொள் முருகன்ஓர்**
**தல்லீ! தாலேலோ!**
**தகுசீர் நீள் மேனை இறைவன் அணிகொள் பு-**
**தல்வீ! தாலேலோ!**
**பிழை நாடா துஆர் அருள் அடியவர்மிசை**
**பெய்வாய்! தாலேலோ!**
**பெற ஓர் தாய்பால் வருகிலது உருவுகொள்**
**பிள்ளாய்! தாலேலோ**
**மழை மால் போல் வாள் விழி உடல் பொலிவு உறும்**
**வல்லபீ! தாலேலோ!**
**வளம் நீள் பேரூர் மருவிய மரகத**
**வல்லீ! தாலேலோ!** 10

**கழை தோய்** - கரும்பு வில்லுடன் இணைந்த. **பூவாளிகள்** -மலர் அம்புகள். **"கைக்கே அணிவது கன்னலும் பூவும்"** (அபி.அந்.*37*) என்பார் அபிராமி பட்டர். **கலை ஆர் ஆலோன்**

- பதினாறு பகுதிகளை உடைய சந்திரன். **குழை** - காதணி. இறைவியின் காதணி அபிராமிபட்டருக்காகச் சந்திரனாக வந்த செய்தி. **கர்ணீ** - காதுகளை உடையவளே. **மேனை இறைவன்** - இமவான். **பிழை நாடாது** - அடியார்கள் செய்த குற்றங்களைப் பொருட்படுத்தாமல். **பெற** - தன்னை ஈன்றெடுக்குமாறு. **தாய்பால்** - அன்னையினிடம். **வருகிலது** - வராமல். **உருவுகொள்** - வடிவெடுத்த. உமாதேவி கருவிற்றோன்றவில்லை. **மழை மால்** - மழை நீரைச் சுமந்து கொண்டுள்ள கரிய முகில், அல்லது மாரியும் திருமாலும் என உம்மைத்தொகை ஆக்கினும் அமையும். மழைபோல் கைமாறு கருதாது அருள்பொழிவிழி, திருமால் போன்ற நீலமேனி என நிரனிறை. **வல்லாய்** - ஆற்றல் மிக்கவளே.

## ๔. சப்பாணிப் பருவம்

(இரட்டையாசிரிய விருத்தம்)

கும்பந்தனிடை அருள்மெய் பம்பு அந்த முதிர் வடிவு
கொண்ட தண் தமிழ் முனிவன் நீள்
குரைதிரைக் கடலைக் கைவரை வரையறைக்குள்
குறைத்து உணற்கு எதிர்மறையதாய்,
வெம் பந்தவினையின் உடல் வெம்பு அந்தகத்தகை கொள்
வெறி அமணர் புத்தர் தம்மை,
வெம் கழுவடித்தலை இடம் கழு அடித்து அலைய
விட்டு, இடி முடிக்கண் வீழ்த்தி,
அம்பு அந்த விழிமலர்க் கொம்பு அம்தண் மயிலையிடை
அடலை யதனில் புரிந்தே,
ஆனந்த வாழ்வுஆம் உய் வான் அந்த முத்தி அணை -
வார்க்கு அருள அமுது, சிறிதே
சம்பந்தனுக்கு உதவிடும் பந்துஅணைக் கை கொடு
சப்பாணி கொட்டியருளே!
தழையும் இரணிய வில்லிவிழையும் மரகத வல்லி!
சப்பாணி கொட்டியருளே! 1

மெய் அருள் பம்பு அந்தம் முதிர் வடிவு கும்பந்தனிடை கொண்ட தண் தமிழ் முனிவன் எனக் கொண்டு கூட்டிக் கொள்க. நிலையாகிய திருவருள் பொலிகின்றதும் அழகு

நிறைந்ததுமாகிய தன் உடலை ஒரு குடத்திலிருந்து பெற்ற தமிழ் முனிவர் எனப்படும் அகத்தியர் என்றவாறு. **குரை திரை** - ஒலிக்கின்ற அலைகளை உடைய. **கைவரை** - உள்ளங்கைக்குள் கொள்ளப்படும். வரையறைக்குள் - அளவிற்குள். வரைவரையறை வினைத்தொகை. குறைத்து - சுருக்கி. உணற்கு - (அகத்தியர் கடலை உள்ளங்கைக்குள் அடக்கிக்) குடித்த செயலுக்கு. வெம்பந்த வினையின் உடல் - கொடிய பாசமாகிய இருவினைகளால் கிடைத்துள்ள உடம்பை. **வெம்பந்தகத்தகை கொள்** - இது இரட்டுற மொழிதல். முதலாவது; **வெம்பு அந்தகத்தகை கொள்** - (உடலை) சினந்து மிக வாட்டுகின்ற அறியாமை மிக்க, ஊன் உண்ணாமையையும் உடன் கருதுக, இவர் சமணர். இரண்டாவது : **வெம்பந்தகத்தகை கொள்** - விரும்பி அதிகம் வருத்தாமல் ஒரு தொடர்பை அமைத்துக் கொள்ளும், ஊன் உண்டலையும் கருதுக. இவர் பௌத்தர். **வெறி** - போதை மிக்க. இப்பொருள்கோள் நிரனிறை. இந்தச் செய்யுட் பகுதி, **"விடக்கு ஒருவர் நன்று என விடக்கு ஒருவர் தீது என, உடற்கு உடை களைந்தவர் உடம்பினை மறைக்கும் படர்க்கள்"** (தேவாரம் 2-30-10) என்னும் திருமுறையைப் போன்றது. **வெம் கழு அடிதலை இடம்** - கொடிய கழுமரம் ஆகிய கொல்லுதற்குரிய முதன்மைவாய்ந்த இடத்தில், கழுமரத்தில் என்றபடி. கழு அடித்து அலையவிட்டு - பருந்துகள் கொத்தித்திரியும்படி செய்து, இது சமணரை, மதுரையில். **இடி முடிக்கண் வீழ்த்தி** - இது போதிமங்கையில் சம்பந்த சரணாலயர் புத்த நம்பி தலையில் இடிவிழச் செய்தது. **அம்பு அந்த** - கணையைப் போன்று அழகிய. மலர்க் கொம்பு என்றது பூம்பாவையை. **அடலை** - சாம்பல். **இரணியவில்லி** - பொன்மலையை வில்லாக உடைய சிவபிரான்.

குறிப்புரை : பெரிய கடலை உள்ளங்கையில் அடக்கி அகத்தியர் குடித்தார். சம்பந்தர் அதற்கு எதிர்மாறாக ஒரு கிண்ணி ஞானப்பால் உண்டு. கடலனைய அருளாடல்கள் புரிந்தார் என்பது கருத்து. இச்செய்யுளின் வழியெதுகை அமைப்பும் நிரனிரைப் பொருள் கோளும் சிறப்புடையன.

வண் தமிழ்ப் புலவர் பா அலர் கொட்ட, வாரி அறல்
வாரி மழை மழைகொட்டல் போல்
வான்இலகு புலவர் அலர் கொட்ட, அன்னவர்தம்
மடந்தையர்கள் கொம்மை கொட்ட,
குண்டு அமண் கையர் உள் துயர் கொட்ட, அவர் மகளிர்
கொங்கையிடை செங்கை கொட்ட,
கொட்டம் மலி துட்டர் மனை முட்ட நெய்தல் பறைகள்
கொட்ட, மட்டு அற்ற மெய்ச்சீர்த்
தொண்டர் இமை கொட்டல் அற்று இன்பநீர் கொட்ட, இசை
துன்றும் ஆலயம் மடங்கள்
தோறும் உயர்சேமக் கலம் கொட்ட, அர்ச்சனைத்
துணர் நின்முன் அடியர் கொட்ட,
தண் தயைநின் விழி கொட்ட, மெய்ப் பேரையூர் இறைவி!
சப்பாணி கொட்டியருளே!
தழையும் இரணிய வில்லி விழையும் மரகத வல்லி!
சப்பாணி கொட்டியருளே! 2

புலவர் மழைகொட்டல்போல் பா அலர் கொட்ட என இயையும். **பா அலர்** - கவிதைகளாகிய பூ. **வாரி அறல் வாரி** - கடலின் தண்ணீரை முகந்து. **மழை கொட்டல்** - மேகம் வருஷித்தல். **வான் இலகு புலவர்** - தேவர்கள். **அலர்** - பூமாரி. **கொம்மை** - கும்மி. **கையர்** - வஞ்சகர்களின். **உள்** - மனத்தின் கண். **கொங்கையிடை செங்கை கொட்ட** - மார்பில் அடித்துக் கொண்டு அழ. இது குமரகுருபரின், **"அமரர் சேயிழை மாதருக்குச் செங்கைகளும் கொங்கைகளும் சிவக்கும் போலும்"** *(சித.செய். கோவை 49)* என்பதை அடியொற்றியது. **கொட்டம்** - ஆர்ப்பாட்டம். **மனை முட்ட** - வீடுகள் முழுவதிலும். **நெய்தல் பறை கொட்ட** - சாப்பறை ஒலிக்க, **"ஓர் இல் நெய்தல் கறங்க ஓர் இல் ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப"** *(194)* என்பது புறம். **மட்டற்ற** - எல்லையில்லாத. **சேமக்கலம்** - வெண்கலத்தால் ஆன சேகண்டி என்னும் தாளக்கருவி. **துணர்** - மலர்க்கொத்துக்கள். **தண் தயை** - குளிர்ந்த கருணை.

ஆறு மதி புனை முடியர் கூறும் மதி வாசகம்
அபத்தப்படாமல், அன்பால்
ஆறுமதிகாறும், மதி வேறு மதியாது, சுதை
ஆம் கோலம் ஓங்கி, இன் பா
கூறும் அதிமதுர கவிராசபண்டிதனுடன்
குளிர் கங்கை நதி படிந்தே,
கோது அகலும் மா விசுவநாதர் இரு பாதமலர்
கும்பிட்டு, நம்பு இட்டமாய்,
வீறும் அதிசயம் வீதி தோறும் அதிகம் கண்டு,
வில் தொடி கொள் பற்றொடு இகலி
மிடி யிட்டு அவன் தனது மடி இட்டு, அணிந்து, அகல
வேண்டும் என்று ஆண்ட கையால்
சாறு மதி யாவினும் ஒல் பேறு மலி பேரையிடை
சப்பாணி கொட்டியருளே!
தழையும் இரணியவில்லி விழையும் மரகதவல்லி!
சப்பாணி கொட்டியருளே! 3

**ஆறு மதிபுனை முடியர்** - கங்கையையும் பிறையையும் அணிந்த சடாமுடியை உடைய சிவபிரான். **மதிவாசகம்** - அறிவுரை, **"ஆறுதிங்கள் உனாது செங்கையினால் நல்உண்டி செய்து ஈதலே வீறுஉறும் பரிசு ஆகும்"** (புல.புரா.1988) என்னும் சிவபெருமானின் ஆலோசனை. **அபத்தப்படாமல்** - வீணாகி விடாது. **ஆறுமதி காறும்** - ஆறு மாதங்கள் வரையில். **மதி** - உள்ளத்தில். **மதியாது** - நினைக்காமல். **சுதை ஆம் கோலம்** - மகளின் வடிவம். **வில் தொடி** - ஒளிர்கின்ற வளையல்கள். **இகலி** - பெண் வடிவிலிருந்த தேவி காசியில் தனக்கு வளையல் வேண்டும் எனச் சிணுங்கி அழுதாள் என்பது புலவர் புராணச் செய்தி. **இளையள் என்ற பண்பு தோன்றிடச் சிணுங்கலும் செய்தாள் (1999)** என்பார் வண்ணச்சரபர். **மிடியிட்டு** - குறை இரந்து. அவன் என்றது பண்டிதரை. **அணிந்து** - அணிவித்து. எனக்கு வளையல் வாங்கி அணிவித்துவிட்டுத்தான் போகவேண்டும் என அடம்பிடித்தாள் இறைவி. இதனையே ஆட்கொண்ட என்னும் பொருள்பட ஆண்ட என்கிறார். **கையால்** - அத்தகைய திருக்கரங்களைக் கொண்டு. **மதி யாவினும் சாறு ஒல்பேறு** - எல்லா மாதங்களிலும் திருவிழா நடைபெறுகின்ற சிறப்பு.

இஞ்சி தங்கிய பொறிஇனம் களம் கம்களில்
இலங்க, கஞ்சுகம் மஞ்சு கொண்டு,
இந்து வணிகன் கடையில் உந்தும் அணி உடுமணிகள்
ஏற்று, விண்மேல் திகழ்தல் போல்,
மிஞ்சு இதம் பெறு மனோரஞ்சிதம் பொலி வீதி-
மீதில் அவிர் ஆதி, சோதி
விரி காரணன், பொருஇல் பரிபூரணன், பெருமை
மிளிர் ஆரணத்தின் முடியில்
குஞ்சித நடம் செய் மேலஞ்சிதம்பரம் எனக்
கொஞ்சும் அஞ்சுக பேரையில்,
கும்பிடும் என்மீது மிகு வம்பு இடு பிரார்த்தமொடு
கும்பு இடும் காமியங்கள்
சஞ்சிதமும் அற, உளம் கிஞ்சிதம் இரங்கி, ஒரு
சப்பாணி கொட்டியருளே!
தழையும் இரணிய வில்லி விழையும் மரகதவல்லி!
சப்பாணி கொட்டியருளே! 4

**இஞ்சி தங்கிய** - மதிலின்மேல் பொருந்தியுள்ள. **பொறி இனம்** - மதிலின்மேல் உள்ள ஏவறைகளின் கூட்டம், ஞாயில், இதற்கு விண்மீன்களை உவமை கூறுதல், **விசும்பின் மீன் பூத்தன்ன உருவ ஞாயில் (புறம்.21) களம்கம்களில் - கழுத்திலும் தலையிலும், கஞ்சுகம் மஞ்சு கொண்டு** - மேற் சட்டையாக மேகங்களை ஏற்று. **இந்து** - சந்திரனாகிய. **உந்தும்** - நிறைந்துள்ள. மதில் வானளாவி உள்ளது. அதன் முகம் போல் சந்திரன் இருக்கிறான். அவன் ஒரு வணிகனாகிப் பொருள்களை விற்கச் சுமந்திருத்தலைப்போல மதிலின் ஞாயில்கள் விளங்குகின்றன என்றபடி. **மிஞ்சு இதம்** - மிகுந்த நன்மை. **மனோரஞ்சிதம்** - உள்ளத்திற்கு ஏற்படும் உவகை. **பொரு இல்** - நிகரற்ற. **ஆரணத்தின்** - வேதங்களின். **குஞ்சித நடம்** - ஒரு காலை வளைத்துச் செய்யும் நாட்டியம். திருப்பேரூர் மேலைச் சிதம்பரம் எனப்படும். மேலஞ் சிதம்பரம் என்புழி, மேல்+சிதம்பரம், அம் சாரியை. மேலஞ்சிதம்பரம் என அஞ்சுகம் கொஞ்சு பேரை என இயையும். **வம்பு இடு** - வருத்தும். **பிரார்த்தமொடு** - பிராரப்த வினையினோடு. **கும்பு இடும்** - கூட்டமாகச் சேரும். **காமியங்கள்** - ஆகாமிய வினைகளும். முதற்குறை. **சஞ்சிதமும்** - சஞ்சித வினைகளும். **கிஞ்சிதம்** - ஒரு சிறிது.

பொய்ப் பாச பவ அறக் குப்பு ஆய குப்பாய
போக மோகத்தில், வறிதே
பூ தலத்தொடு மீதலம் பாதலத்தினில்
புக்கு, மிக்கு இக்கு உகைக்கும்
மைப் பாசு உடல் கொள் மதனப் பாவி அப்பாலும்,
வன் கோட்டு மோட்டுக் கடா
மாட்டு இயைந்து உறு பாசம் நீட்டி ஒன்று உயிரை அற
மாட்டு இயமன் நாட்டில் நரகத்
துய்ப்பு ஆசு அதாலும், எண்கைப் போதன் விதிவழிய
தூலம் உறலாலும், அடியேன்
தோய் துயரம் முற்றும் நின் திருவுள்ளம் அறியும்; என்
சொல் அளவை அல்ல; அதனால்
தப்பாது பேரையிடை அப்பாலின் மேல் அமை ஒர்
சப்பாணி கொட்டியருளே!
தழையும் இரணிய வில்லி விழையும் மரகதவல்லி!
சப்பாணி கொட்டியருளே! 5

**பொய் பாச** - உண்மையை மறைத்துக் காட்டும் இயல்புடைய மாயையாகிய, இனி நிலையற்ற உலகியல் ஆசைகளால் விளையும் எனினும் ஆம். **பவ அற குப்பு ஆய** - தீவினை (பாவம்) நல்வினைகளின் கூட்டத்தினால் தோன்றிய, இருவினைகளால் வந்த என்றபடி. **குப்பாய போக மோகத்தில்** - உடலால் துய்க்கப்படும் இன்பங்களால் ஏற்படும் மயக்கத்தின் காரணமாக, **வறிதே** - வீணாக. **மீதலம்** - மேலுலகம், சுவர்க்கம். **இக்கு உகைக்கும்** - கரும்பு வில்லால் மலர்க்கணைகளை எய்கின்ற. **மை பாசு** - மேகம் போன்ற பசுமை நிறத்தை உடைய. **மைம் மலிந்திடு மெய்யுடைக் காமவேள்** (6-23-90) என்பது கந்தபுராணம். **அப்பாலும்** - எய்யும் கணைகளாலும். **வன் கோட்டு** - வலிய கொம்புகளை உடைய. **மோட்டு** - முரட்டுத்தனம் வாய்ந்த. கடாமாடு இங்கு எருமையைக் குறித்தது. **மாட்டு** - சிக்கவைக்கின்ற. **துய்ப்பு ஆசு** - அநுபவிப்பதாகிய குற்றம், அது பகுதிப்பொருள் விகுதி. **எண்கை போதன்** - எட்டுக்கரங்களை உடைய பிரமன். **விதி வழிய** - நியமித்த ஊழின்விளைவாக ஏற்பட்டுள்ள. **தூலம்** - உடல். **அளவை** - அடங்குவது. **தப்பாது** - தவறாமல். **அப்பாலின்மேல் அமை** - (எளியேனை) வீட்டுலகில் பொருத்தும்படி.

(பன்னிருசீர் விருத்தம்)

வெயில்த் துன்றிய நுண் மணல் புழுவில்,
வெதுப்பும் கொள்ளித்தலை எறும்பில்,
விண்ணோர் துடிக்க, சிறைபுரியும்
வீர தீர சூரன் உடல்
அயில் திண் படையால் பிளந்து, அவர்கட்கு
அமராவதியின் வாழ்வு அளித்து, எம்
அகத்தும், புறத்தும், அண்ட முகடு
அணையும் சோலை வளப் பொலிவு ஆர்
ஒயில் துன்றிய தண் குறிஞ்சி தொறும்,
ஓவாது என்றும் கமழ்திருத்தாள்
உபயம் பொலி சண்முகப் பெருமாள்
உவப்பக் கனிவில் தாலாட்டுக்
குயிற்றும் திருக் கைத் தாமரையால்
கொட்டி அருளாய் சப்பாணி!
குளிர் சீர்ப் பேரூர் மரகதமே!
கொட்டியருளாய் சப்பாணி! 6

**துன்றிய** - சிக்கிய. **வெதுப்பும்** - வாட்டுகின்ற. **அயில் திண்படை** - வேலாகிய வலிய ஆயுதம். **ஒயில் துன்றிய** - அழகு பொருந்திய. **தாலாட்டுகள் குயிற்றும்** - தாலாட்டும்படி ஆட்டுகின்ற

வாட்டும் கொடிய மும்மலத்தின்
வலியால், உண்மை மதி ஒழிந்து,
வந்தது எவண் நின்று? இனிப் புகும் நல்
மார்க்கம் எது என்று உணர விடாது,
ஆட்டும் புலக் கள்வரின் வழிப்பட்டு,
அவர்க்கு இன்பு அளிக்கும் போகம் விழைந்து,
அவமே அலைவேன் எனக்கு, என்னை
அறிவித்து, அன்பால் உணர்த்தும் உன்னைக்
காட்டும் படி பின் இருந்து அழைக்கும்
கடனே போன்றும், என் அறிவில்
கலந்து செலுத்தி, அபேதம் உறக்
கர்ணம் கரைத்து, சிவத்து ஒன்றக்

கூட்டும் தகை போன்றும் கனிவில்
கொட்டி அருளாய் சப்பாணி!
குளிர் சீர்ப் பேரூர் மரகதமே!
கொட்டி யருளாய் சப்பாணி! 7

**மும்மலம்** - ஆணவம், கன்மம், மாயை. **வலியால்** - வலிமையால். **மதி** - அறிவு. வந்தது எவண் நின்று? இனிப்புகும் நல்மார்க்கம் எது? : ஒப்பு **"எங்கு இருந்து வந்தனை? இங்ஙன் எவ்வித முயற்சி உற்றாய்? மேல் இங்கிருந்து எங்கு போக உத்தேசம் எய்தினை? எனில் விடை அறியேன்"** (காரைமடை சீரங்கநாதர் மாலை 66). **புல** - ஐம்புலன்காளாகிய. **அவர்க்கு** - அந்தப் புலக் கள்வர்களுக்கு. **போகம்** - இன்பத்துய்ப்பு. **அவமே** - வீணில். **என்னை அறிவித்து** - நான் எனப்படும் ஆன்மாவின் நிலையை உணர்வித்து. **உன்னைக் காட்டும்படி** - பதி ஆகிய தேவரீரைத் தரிசிக்க வைக்க, இறைவி இறைவனின் திருவருள் ஆதலால் பரம்பொருளே. **கடன்** - கடமை, பசுவை ஆட்கொள்ளல் பதியின் கடமை. **அபேதம் உற** - வேறுவேறானவர் என்னும் உணர்வு நீங்க, "நீவேறு எனாதிருக்க நான் வேறு எனாதிருக்க நேராக வாழ்வதற்கு உன் அருள் கூர" என்பார் (திருப்புகழ் 212) அருணகிரியார். **கரணம் கரைந்து** - உள்ளத்தை உருக்கி. **சிவத்து ஒன்ற** - பரம்பொருளோடு கலக்கும்படி. **தகை** - தன்மை. இரு கைகளையும் இணைத்துச் சப்பாணி கொட்டுவது சிவசீவர்களைச் சேர்த்துவைப்பது போல் இருக்கிறதாம்.

(வண்ண விருத்தம்)

தனதன தனதன தனதன தய்யா தத்தன தத்தான.
அலகு அறும் உலகுதொறு இலகும் எண் இல்லா
அற்புத நல்(ச்) சீவர்
அமைதரும் உடல்வகை வினைவழி நல்கு ஏர்
அத்தம் ஓர் எட்டு ஏயும்
மலர் அயன, அவைகளை அழிகுதல் எய்தா -
மல் திதி நல்சீர் செய்
மணம் மலி துளவு அணி முகில் நிகர் மெய்யோன்,
மட்டு அறும் அற்போடு

நலம் நிறை முனிவரில் நிலவுபு, மெய் ஆம்
நல்(த்) தவம் முன் காண
நவிலரும் இரசித சபையிடை உய்வான்
நட்டம் எய்து அப்பேரை
குலாவிய அணி பொலி தளிவளர் செல்வீ!
கொட்டுக சப்பாணி!
குமரனை அருளிய மரகதவல்லீ!
கொட்டுக சப்பாணி! 8

**அலகு அறும்** - கணக்கற்ற. **உடல்வகை** - பலவிதமான உடம்புகளை. **வினைவழி** - அவ்வுயிர்களின் இருவினை -களுக்கேற்ப. **ஏர் அத்தம்** - அழகிய கைகள். **ஏயும்** - பொருந்தியுள்ள. மலர் அயன் ஆகிய பிரமன் பட்டி முனியாகப் பேரையில் வழிபட்டார். **அவைகளை** - அந்த உடல்களை, விகுதிமேல் விகுதி. நல்சீர் திதி செய் என மாறுக, நன்கு முறையாகக் காப்பாற்றுகின்ற. **துளவு** - துளசி. திருமால் கோமுனியாக வழிபட்டார். **மட்டுஅறும்** - எல்லையற்ற. **அற்போடு** - அன்புடன். **முனிவரில்** - தவசிகளைப் போன்று. தவம் ஆகுபெயராகத் தவத்தின் பயனைச் சுட்டி நின்றது. **நவிலரும்** - சிறப்பை உரைத்து விளக்க முடியாத. **இரசித சபை** - வெள்ளி மன்று. காணவும் உய்யவும். **நட்டம்** - நடனம். **பேரை குலாவிய** - பேரூரில் இருக்கின்ற. **தளிவளர்** - திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள. **குமரனை** - முருகப்பெருமானை.

தனதன தன தய்ய தத்தா தத்தானா.

அளவரு மறை எல்லை அப்பால் உற்று ஆடும்
அரன், மகிழ்வுடன் உள் அமைத்து ஆர்வச் சீர்கொள்,
வளம் மலி அருள் வெள்ள மைப்போல் உற்று ஆடும்
மலர்விழி பொலி செல்வ வைப்பே! பொற்பு ஆன
தளவு உறழ் நகை வில்கொள் சத்தீ! விண்ப் பாலர்
தளர்வு அறு படை ஒவ்வு தக்காய்! மெய்ப் பேரை
கொள அமைதரு செல்வி ! கொட்டாய் சப்பாணி!
குளிர் மரகத வல்லி! கொட்டாய் சப்பாணி! 9

**அளவு அரு** - இவ்வளவுதான் எனக் குறிப்பிட்டுக் கூற முடியாத. **மறை** - நால் வேதங்கள், **"நசையானை நால்வேதத்து அப்பாலானை."** (தேவாரம் 6-63-9) என்பது வாகீச வேதம். **உள் அமைத்து** - மனத்தின்கண் நிலைக்கச்செய்து. சீர்ஆர்வம் கொள் என மாறுக, மிகுந்த ஆவல் கொண்டுள்ள, விரும்புகின்ற. **மை போல் உற்று** - இருளைப்போலக் கருமை நிறம் படைத்து. சீர் கொள்விழி, அருள் வெள்ள விழி, ஆடும்விழி, மலர்விழி எனத் தனித்தனி இயையும். **செல்வ வைப்பே** - பொருள் நிறைந்த பொக்கிஷமே. **பொற்பு ஆன** - அழகிய. **தளவு உறழ்** - முல்லை மலரைப் போன்ற. வில் நகை என மாறுக, ஒளிர்கின்ற புன்னகை. **விண்பாலர்** - வானவர். **தளர்வு அறுபடை** - துன்பத்தை ஒழித்த முருகனின் கைவேலின்கண். **ஒவ்வு** - பொருந்தியுள்ள.

தத்தான தத்ததன தத்தான தத்ததன தத்தான தத்ததனனா

பொய்த் தாமதக் குண இருட்டூடு கண்ப் புலன் ஒல்
  புள்ப் போல் எழுச்சிமிகவே.
  புக்கு, ஆசு உடைத் தொழில்களில்த் தோய்வினைத் திரள்கள்
  புற்கு ஆகி அற்று ஒழிய, நீள்
மெய்த் தாபதர்க்குள் இடை அற்று ஊறு பத்தி என்ஓர்
  வில் கால் உளத்தில் நிறைவாய்,
  வெற்பு ஆர் முழக்கு அருவி ஒப்பாய் உரத்து உற வி -
  ழிப்பால் அறல் பெருக, வா -
னத்தார் சுதைத் திரளை ஒப்பு ஆர் சுவைச் செறிவின்
  நற் பாடல் பற்பல் பகர் சீர்
  நட்பாடல் அளித்து, அளவு இல் சித்தாடி, மெய்த்த நின் ந -
  னைத் தாளிடைப் புகுதவே,
சத்து ஆரணச் சிரசு இயல் பேரை நல் தலைவி!
  சப்பாணி கொட்டியருளே!
  தக்கோர் வழுத்தும் எழில் மிக்கு ஆன பச்சை உமை
  சப்பாணி கொட்டியருளே. 10

**பொய் தாமதக் குண இருட்டூடு** - ஏமாற்றுகின்ற தாமதக் குணம் போன்ற இருளுக்குள்ளே. **கண் புலன் ஒல்புள்** - விழிகளாகிய அறிகருவி நன்கு பொருந்துகின்ற பறவையாகிய

ஆந்தை, இருளில் நன்கு பார்க்கும் கூகை என்றவாறு. **எழுச்சி மிகவே** - ஊக்கத்தோடு. **புக்கு** - ஈடுபட்டு. **ஆசுடை** - குற்றம் நிறைந்த. **தோய்** - தொடர்புபடுத்துகின்ற. **புற்குஆகி** - மெல்ல மெல்லக் குறைந்து. **தாபதர்க்குள்** - முனிவர்களின் உள்ளத்தில். **என்** - அடியேனின். உளத்தினில் விற்கால் நிறைவாய் என இயையும். இருண்ட என் மனத்தில் ஒளிவீசும் பூரணமாய் என்றபடி. **வெற்பு ஆர்** - மலையில் உள்ள. **முழக்கு** - ஒலிக்கின்ற. **விழிப்பால் அறல்** - கண்ணீர். **உரத்து உர** - மார்பில் பொருந்தும்படி. **சுதைத்திரள்** - அமுத உருண்டை. **நட்பாடல்** - சிநேகித உரிமை. **சித்தாடி** - அருள் சித்துகளைச் செய்து. **நனை** - தேன்நிறைந்த தாமரை போன்ற. **சத்து ஆரணச் சிரசு** - நிலையான வேதத்தின் உச்சி, வேதாந்தம்.

**குறிப்புரை :** எல்லாப்பொருள்களையும் மறைக்கும் இருளில் நன்றாகச் செயல்படுகின்ற ஆந்தை போல, வஞ்சக ஆணவ மலத்தால் குருடாக்கப்பட்டுள்ள உயிர் உலகியல் தொழில்களில் ஊக்கத்தொடு ஈடுபடுகிறது என்பது நயமான ஓர் உவமை.

## 5. முத்தப் பருவம்

(பன்னிருசீர் விருத்தம்)

**மின்னை நிகர் ஆம் காயம் இதை**
**மெய்யே என்றும், யான் என்றும்**
**விரும்பி உழலாது, என் உளத்தில்**
**விளக்கம் சிறிது ஈந்தனை; அதனால்,**
**என்னை அடியேன் நின் சுதன் என்று**
**எண்ணும் உணர்வு எய்தினன்; புறத்தில்**
**இசைத்தற்கு ஆம் மெய்ச் சிறப்பு அருளா**
**இயல்பால் நாணுவேன் எனினும்,**
**உன்னை எனக்கு ஆம் திருவருட் பேர்**
**உரிமைத் தாய் என்று ஏத்தும் உரம்**
**உடையேன் கண்டாய்; அடிச்சிறியேன்**
**உடையா வண்ணம், உவந்து, அருளால்,**

முன்னை வினைகள் அற, கனிவாய்
முத்தம் தருக முத்தமே!
முதிர் சீர்ப் பேரூர் மரகதம் ஆம்
முதல்வீ! முத்தம் தருகவே! 1

**மின்னை நிகர் ஆம் காயம்** - மின்னலைப்போல விரைவில் அழிந்துவிடும் இயல்புள்ள உடல். **மெய்** - நிலையானது. **யான்** - நான் என்று சுட்டப்படும் ஆன்மா. **சுதன்** - மைந்தன். **உணர்வு** - அறிவு. **புறத்தில் இசைத்தற்கு ஆம்** - இதனை வெளிப்படுத்திக் கொள்வதற்கான. நிலையாமையை ஓரளவு அறிந்திருந்தாலும் அதற்கேற்ற ஞானபக்தி வைராக்கியங்களை உடையவனாக ஒழுகத் திருவருள் கிட்டவில்லை என்றபடி. **உரம்** - மனத்துணிவு. **உடையாவண்ணம்** - தளர்ந்து விடாதபடி. **முன்னை வினைகள்** - பழமை வாய்ந்த கன்மங்களின் பயன்கள்.

இழிந்த கரண இந்திய போக
இன்பப் பொருட்டால், உலகில் வறிது
எய்க்கும் கொடியேன் எனைப் பொருளா
எண்ணி, பல ஆம் கனவினிடை
வழிந்த அருளால் நீ அளித்த
வண்ண முத்தம் முழுதும், தா -
மதத்தில் எழும் தத்துவப் பகைவர்
வாரி விழுங்கிக் கொண்டதனால்,
ஒழிந்த விதம் கண்டு, யான் துயரம்
உறல், ஓர் பொருள் என்று உன்னுகிலேன்;
உன் பேர் அருள் இத்தகை இளப்பம்
ஒன்றப் பார்த்தல் முறை அன்று; ஆல்.
மொழிந்தவகை மெய்பெற, கனிவாய்
முத்தம் தருக முத்தமே!
முதிர் [illegible] பேரூர் மரகதம்ஆம்
முதல்வீ! முத்தம் தருகவே! 2

**இழிந்த** - கீழ்மையான. **கரண இந்திய போக** - மனத்தாலும் ஐம்பொறிகளாலும் துய்த்துப் பெறப்படுகின்ற, கரண இந்திய உம்மைத் தொகை, மூன்றன் உருபு விரிக்க. **எய்க்கும்** - மெலிவடைகின்ற. **பொருளா எண்ணி** - ஒரு

பொருட்டாக மதித்து. **வழிந்த** - பொங்கிய. **தாமதத்தில்** - தமோ குணத்தில், இது காமம் வெகுளி மயக்கம் முதலிய தீய இயல்புகள் ஒருவனிடம் மிகுவதற்குக் காரணமாக இருக்கும் அடிப்படைக் குணம். **எழும்** - தோன்றுகின்ற. **தத்துவப் பகைவர்** - மாயாமலத்தின் செயலாக அமைந்து ஆன்மாவை அறிந்துகொள்ளத் தடையாக நிற்கும் உண்மைகள், இங்குப் பகைவர்களாக உருவகிக்கப்படுகின்றன. கிடைத்த அநுபவம் மறைந்து விட்டதை வாரி விழுங்கப்பட்டு விட்டதாகக் கூறுகிறார். **உன்னுகிலேன்** - நினைக்கவில்லை. **இளப்பம்** - இகழ்ச்சி. ஆல் அசை. **மொழிந்த வகை** - தேவரீர் கனவில் கூறியவை.

ஆக்கம் மலி மெய் அடியவர் தம் -
அகந்தைத் திமிரம் ஓர் போதும்
அணையா அகத்தில் குவியாமல்,
ஆசு ஆர் மாயைச் சேறு படாது,
ஊக்க வன்மக் கன்மம் எனும்
ஊதை அலைக்க ஆடாமல்
ஓங்கும் நின் பொன் திருத் தாள்கட்கு
ஒவ்வா வனசத்து இயல் முத்தம்,
தீக்கண் நுதலார் தமக்கு இன்பம்
தேக்கும் தாய்! நின் சந்நிதியில்
செப்பித் துதிக்கப் பெறல் ஆகும்
சிறப்பு உந்தியது அன்று; ஆகையினால்
மோக்கம் அளிக்கும் நின் கனிவாய்
முத்தம் தருக முத்தமே!
முதிர் சீர்ப் பேரூர் மரகதம் ஆம்
முதல்வீ! முத்தம் தருகவே! 3

அகந்தைத் திமிரம் ஓர்போதும் அணையா ஆக்கம் மலி மெய் அடியவர்தம் அகத்தில் குவியாமல், ... சேறுபடாது,... ஆடாமல் ஓங்கும் நின் திருத்தாள்கட்கு ஒவ்வா எனக் கொண்டு கூட்டிக் கொள்க. **அகந்தைத் திமிரம்** - ஆணவ இருள். **அணையா** - சென்று சேராதது ஆகிய. **ஆக்கம் மலி** - சிறப்பு மிக்க. ஓர் போதும் குவியாமல் என இங்கும் இயைத்துக் கொள்க. **ஆசு ஆர்** - குற்றம் பொருந்திய. **மாயைச்சேறு** : உருவகம். **ஊக்க** - உலகியலில் எழுச்சியோடு

ஈடுபடவைக்கின்ற. **வன்ம** - தான் பற்றியவரை எப்படியும் அலைக்கழித்தே தீரும் பிடிவாதத்தை உடைய. **கன்மம்** - இருவினைப் பயன்கள். **ஊதை** - பெருங்காற்று. மும்மலத்தொடர்பு இல்லாத தேவியின் திருவடிகள் தாமரை மலர் போன்று இருந்தாலும் அதற்கு இணை ஆகாது என்பது கருத்து. **உந்தியது** - மிகுந்தது. **மோக்கம் அளிக்கும்** - முக்தி தரும்.

***குறிப்புரை :*** தாமரை மலரை இருள் மறைக்கும்; சேறு அழுக்காக்கும்; காற்று அலைக்கும். அது முத்தியும் தராது. இறைவியின் திருவடிக் கமலத்திற்கு இக்குறைகள் இல்லாததோடு அது வீட்டுப்பேற்றை அருளும் என்கிறார். வேற்றுமையணி.

**நத்துக்களில் யானையின் மருப்பில்**
**நண்ணும் முத்தம் புவியிடை மெஞ்**
**ஞானம் பத்தி நலம் சிறிதும்**
**நயவா வீணர், தம் மனையில்**
**வைத்துக் களித்துச் செருக்குதற்கு ஆம்;**
**மாடை அளித்து, மானிடர் பால்**
**வாங்கிப் புரந்து, கரவினர் தம்**
**வன் கைச் சிலை தண்டு ஒச்சிடும் ஓர்**
**மொத்துக்கு அளிக்கும் பரிசு ஆகும்;**
**முறையால் அவற்றை உன் திருத்தாள்**
**முளரி கருதும் மனத்து எண்ணேன்;**
**முருகு ஆர் கடம்புத் தடம் புயம் தோய்**
**முத்துக் குமரற்கு அருள் கனிவாய்**
**முத்தம் தருக முத்தமே!**
**முதிர் சீர்ப் பேரூர் மரகதம் ஆம்**
**முதல்வீ! முத்தம் தருகவே!** 4

**நத்துக்களில்** - சிப்பிகளில். **மருப்பில்** - தந்தத்தில். **நண்ணும்** - பொருந்தியுள்ள. **புவியிடை** - உலகில். **செருக்குதற்கு** - கருவப்படுவதற்கு. **ஆம்** - காரணமாக அமையும். **மாடை** - பொன், இங்கு ரூபாய். **புரந்து** - பாதுகாத்து. **கரவினர் தம்** - திருடர்களின். **வன்** - வலிய. **சிலை** - வில். **தண்டு** - தடி. இவை எல்லாவகையான

படைக்கலங்களுக்கும் உபலட்சணம். **மொத்து** - அடி. **முளரி** - தாமரை. **முருகு ஆர்** - நறுமணம் மிக்க. இதுவும் வேற்றுமையணி.

அல்லை விரிக்கும் தண் கதிர் ஆய்,
அம்மை நின்பொன் திருமுகத்துக்கு
அமையும் உவமம் பெறவளர்ந்தும்,
ஆகாமையினால், குன்று சசி,
வல்லை விரிக்கும் முத்தம், இனன்
வாங்கும் கலையினுடன் அணைந்து,
மறுகி, வெதும்பி, மதிதோறும்
மதிப்பு அற்றிடலால், விரும்புகிலேன்;
வில்லை விரிக்கும் பரன் வலம் தோய்
விழியின் மலரும் முகத்து இருந்தும்,
விரியாது இடக்கண் பார்வை அமை
வேலை அரும்பும் ஆம்பல் பொலி
முல்லை விரிக்கும் நின் கனிவாய்
முத்தம் தருக முத்தமே!
முதிர்சீர்ப் பேரூர் மரகதம் ஆம்
முதல்வீ! முத்தம் தருகவே! 5

**அல்லை விரிக்கும்** - இது இரவு என விளக்கிக் காட்டுகின்ற. **தண் கதிர்** - சந்திரன். **பொன்** - அழகிய. **ஆகாமையினால்** - இணை ஆக முடியாததால். **குன்று சசி** - வருந்துகின்ற சந்திரன். இங்கு தேய்தலைக் குறித்தது. **வல்லை** - விரைவாக. **இனன்** - சூரியன். **கலை** - சந்திரனின் பகுதி. **மதிதோறும்** - ஒவ்வொரு மாதத்திலும். **வில்லை விரிக்கும்** - ஒளியைப் பரவச்செய்கின்ற, இது விழிக்கு அடை. வலம் தோய் விழி சூரியன். **இடக்கண்** - சந்திரன். அமைவேலை - பொருந்தும்போது. முல்லை விரிக்கும் - முல்லை அரும்புகளைப் போன்ற பற்களை விளக்கிக் காட்டும்.

(இரட்டையாசிரிய விருத்தம்)

இயங்கு திணையுடன் நிலைத் திணைகளின் வல்வினைவடிவில்
ஏய்ந்த முத்தங்கள் இனமாய்
இலங்கு உடற்குப் புறத்தாய், புறப் பார்வை பெறும்
இயல்பினர்க்கு அணியாய், அணி
நயம் குலவினர்க்கு ஓர் பயம் இன்றாய்ப் பெரும் பயமும்
நாட்டலில், புலன் ஈட்டம் ஆர்
நனவு இதனில் அன்று, உறும் கனவிலும் விரும்புகிலன்;
ஞான ஆனந்த மயம் ஆம்
சயம் குலவு சித்தி முத்திப் பேறு அடைந்தவர்கள்-
தாம் எலாம் வேட்டு அடைந்த
தரம் மருவி, அவிர் பேர் அருட் சோதியாம் தந்தை
தன்னை முன்காட்டி, ஒன்றா
முயங்கு துணையாத் திகழும், நின் திருக் கனிவாயின்
முத்தம் கொடுத்தருள்கவே!
முச்சை புரிதரு சொல்லி! பச்சை மரகத வல்லி!
முத்தம் கொடுத்தருள்கவே! 6

**இயங்கு திணை** - தானாக அசையும் பொருள். **நிலைத்திணை** - ஒரே இடத்தில் அசையாமல் இருக்கும் பொருள். **புறத்தால்** - வெளியே. **அணியாய்** - அழகாக. **ஓர்பயம் இன்றாய்** - அணிந்துகொண்டுள்ளவர்களுக்கு எந்தப் பயனும் இல்லாமல். பயம் என்றது களவு அச்சத்தை. **புலன் ஈட்டம் ஆர்** - ஐம்பொறிகளும் சேர்ந்து செயல்படுகின்ற. **நனவு இதனில்** - சாக்கிர நிலை ஆகிய இதில். **உறும்** - புலன்கள் செயல்படாத என்பதனை அருத்தாபத்தியால் பெற்றாம். **சயம் குலவு** - வெற்றி பெற்ற. **வேட்டு** - விரும்பி. **தரம்** - தகைமை. **ஒன்றி** - அவரோடு இணைந்திருந்து. **முச்சை** - படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூத்தொழில்களை. முத்தொழில்களையும் ஒருவார்த்தையால் செய்து முடிப்பவள் என்றவாறு.

கடம் கவிழ்த்திடு தண்ட நான்ற வள வான் தவள
  கவின் ஒருத்தலின் எருத்தக்
  கண், கொண்டலின் கண் இவர் மெய் பெறு சகத்திரக்
  கண் கொண்ட விண் கொண்ட கோ -
னிடம் கவின்றிட்ட சிந்தாமணியும், வடதிசை
  இயக்கர் கோன் வான்மணியும், நீள்
  இரும் கீர சீகரச் சேகரச் சாகரத் -
  தில் துத்தியின் பத்தி ஆர்
படம் கவின்றிடு சுடிகை மணி ஆயிரச் சேட
  பாயல் வளர் மாயன் அகலம்
  பரித்த அலரிக் கதிர் விரித்திடு கவுத்துவப்
  பரு மணியும், ஒரு மணி எனா
முடங்கு அகம் ஒழிக்க வண் பேரையில் கனிவாயின்
  முத்தம் கொடுத்தருள்வே!
  முச்சை புரிதரு சொல்லி! பச்சை மரகதவல்லி!
  முத்தம் கொடுத்தருள்கவே! 7

**கடம் கவிழ்த்திடு** - மதத்தைக் கொட்டுகின்றதும். நான்ற தண்ட என மாறுக, தொங்குகின்ற துதிக்கையை உடையதும். **வள** - வளப்பம் மிக்க. **வான்** - தேவலோகத்துக்கு உரிய. **கவின் தவள ஒருத்தலின் எருத்தக் கண்** - அழகிய வெள்ளையானை ஆகிய ஐராவதத்தின் பிடரியிலும். **கொண்டலின் கண்** - மேகத்தின் மேலும். இவர் - ஊர்கின்ற. மெய்பெறு சகத்திரக்கண் - உடலில் ஆயிரம் விழிகளை உடைய. **விண்கொண்ட கோனிடம்** - சுவர்க்கத்தின் அரசனாகிய இந்திரனிடம். **சிந்தாமணி** - வேண்டுவார் வேண்டுவதைத் தரும் இரத்தினம். **வடதிசை இயக்கர்கோன் வான்மணி** - வடக்குக்கு அதிபதியும் யட்சர்களின் தலைவனும் ஆகிய குபேரனிடம் உள்ள உயர்ந்த இரத்தினம். **கீர சாகரம்** - பாற்கடல். **சீகர சேகர சாகரம்** - அலைகளின் கூட்டத்தை உடைய கடல். **துத்தியின் பத்தி** - படப்பொறியின் வரிசை. **சுடிகை மணிகள்** - உச்சியில் உள்ள இரத்தினம். **சேடபாயல்** - ஆதிசேஷன் ஆகிய படுக்கை. **அகலம்** - மார்பு. **பரித்த** - தாங்கிக் கொண்டுள்ள. **அலரி** - சூரியன். **படு** - பெரிய. **ஒரு மணி எனா முடங்கு** - மேற்கூறியனவும் ஒரு இரத்தினம்

எனப் பெரிதாக மதித்து வைராக்கியத்திலிருந்து திரும்பிவிடுகின்ற. **அகம்** - உள்ளத்தை, இங்கு அதில் எழும் ஆசையை.

வண்ண விருத்தம்

தானன தானன தானன தானன தத்தன தத்தனனா

நாவலர் கோன் வயலூடு நிலாவுபு,
நக்கனது அற்புதம் ஆர்
நான்மறை மீது அமை தாள் குழையூடு உற
நல்(க்) கனிவில் த் தரும் ஊர்,
கா வளர் போகிதன் நீள் வினை சாடுபு
கட்டம் அறுத்து அருள் ஊர்,
காமர் குலாவிய தேனுவின் ஏர்மிகு
கற்று இசைபெற்று இசை ஊர்,
பாவலர் வாழி சொல் கோமுனி, காலவர்,
பட்டி முனிக்கும் விண் நீள்
பார் புகழ் நாடக வாழ்வு அருள் பேரைகொள்
பச்சை மணிக்குயிலே!
மூவல் இலா நலம் யாவையும் மேவ ஓர்
முத்தம் அளித்தருளே!
மோன விசால அபார சுபாகர
முத்தம் அளித்தருளே! 8

**நாவலர் கோன்** - சுந்தரமூர்த்தி நாயனார். **நக்கனது** - சிவபெருமானின். **குழையூடுற** - சேற்றில் அமையும்படி. தரும் ஊர் என்றது செய்த தலம் என்னும் பொருளில். **காவளர் போகிதன்** - கற்பக நாட்டு இந்திரனின். **கட்டம்** - வருத்தம். **காமர்** - அழகு. **தேனுவின்** - காமதேனுவினுடைய. **கற்று** - கன்று. **இசை பெற்று** - புகழடைந்து. **இசை** - பொருந்தியுள்ள. **கோமுனி** - பேரூரில் நடன தரிசனங்கண்ட திருமாலாகிய முனிவர். **காலவர்** - ஒரு முனிவர். பட்டிமுனி - பிரமனாகிய முனிவர். மேற்கூறப்பெற்றவையாவும் பேரூர்த் தல புராண வரலாறுகள். **மூவல் இலா** - குறையாத. **மோன** - ஞானத்தின் முடிபாகிய, **மோனம் என்பது ஞானவரம்பு.**

**விசால** - மிகப்பரந்த. **அபார** - மிகப்பெரிய. **சுப ஆகர** - நன்மைகளுக்கு எல்லாம் உறைவிடமாக விளங்குபவளே, வடமொழி தீர்க்க சந்தி.

தனதன தானன தனதன தானன தத்தன தத்ததனா.

அமல விலாசம் மல்கிய புகழ் மாதவர்
அக்கம் மனத்தில் அறாது
அமைதரு பூரணன் உளம் அகலாது அமை
அட்சய மெய்ச் சொருபீ!
கமலம் நிலவு இரு மகளிர்களாய் அவிர்
கண்(ப்) புலம் உற்று, அடியார்
கருதிய பேறுகள் முழுதும் விடாது அருள்
கற்பு இயல் பொற் கொடியே!
பமரம் உலாவிய பொழில், மலர் வாவிகள்,
பற்பல அற்புத நீர்
பரவிய பேரையில் அருள்வடிவாய் அவிர்
பச்சை உருக்கிளியே!
மும்லஇரா அறும்வகை கனிவாய்பொலி
முத்தம் அளித்தருளே!
முனிவர்கள் வானவர் புகழ் விரிவுஆர் அணி
முத்தம் அளித்தருளே! 9

**அமல** - குற்றமற்ற. **விலாசம் மல்கிய** - திருவருளாடல் நிறைந்த. **அக்கம்** - கண்களிலும். **மனத்தில்** - உள்ளத்தின் கண்ணும். **அக்கமனம்** : உம்மைத்தொகை. **அறாது** - நீங்காமல். **பூரணன்** - பரம்பொருளாகிய சிவபெருமான். **அட்சய** - குறைவற்ற. **மெய்ச்சொரூபீ** - சத்திய வடிவினளே. இருமகளிர் என்றது திருமகள் கலைமகள் ஆகியோரை. அவர்கள் இருவரும் தேவியின் கண்கள் ஆவர். **"திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை இடக்கண் ஞானப் பெருமகள் நுதற்கண் ஆகப் பெற்றுவான் செல்வம் கல்வி அருமைவீடு அளிப்பாள் அவள்"** என்பது திருவிளையாடல். (19-2) **பமரம்** - வண்டுகள். அற்புத நீர் என்றது பேரூரில் உள்ள புண்ணியத் தீர்த்தங்களை. **மூமல இரா** - ஆணவம் முதலிய மூன்று மலங்களாகிய இரவு, உருவகம்.

நித்தம் அகத்திடை உள் புறம் அற்று உளம்
நெக்கு உருகித் தொழுவார்
நிச்சய புத்தியினை, தளியில் கொடு
நிற்கும் உயிர்த் துணை தோய்
புத்தடி பெற்று அமை, சத்தி மிகப் பொலி
பொற்பு உருவக் கொடி! நீள்
புற்று அரவப் பணி அப்பர் உரத்து அமை
பொன் கலசத் திருவே!
பத்தர்கள் சித்தர்கள் முத்தர்கள் நத்திடு
பற்பல் தலத்து அணிசால்,
பச்சிமம் எய்த் திலையில் பொலி அற்புத
பச்சை அணிச் சிகியே!
முத்தமிழ் விற்பனர் இச்சை கொள் ஒப்பு அறு
முத்தம் அளித்து அருளே!
முத்தர் அகத்தில் இனிக்கும் இயற் பர
முத்தம் அளித்து அருளே! 10

**நித்தம்** - தினந்தோறும். **அகத்திடை** - உள்ளத்தின்கண். **உள் புறம் அற்று** - உள்ளே, வெளியே என்னும் உணர்வு இல்லாமல். **நிச்சய புத்தியினை** - ஐயம் திரிபு இல்லாத மெய்யறிவை. **தளியில் கொடு** - தான் நிலைத்திருக்கும் கோவிலாகக் கொண்டு. **புத்தடி** - புதுமை மாறாத திருவடிகள். **பொற்பு உருவ** - அழகிய வடிவத்தை உடைய. **கொடி** - கொடி போன்றவளே, அண்மை விளி. **அரவப் பணி** - பாம்பாகிய அணிகலன்களை உடைய. **அப்பர்** - சிவபிரான். **உரத்து அமை** - மார்போடு பொருந்துகின்ற. **பொற்கலச** - பொன்னால் செய்யப்பட்ட செம்புகளைப் போன்ற நகில்களை உடைய. **திருவே** - மேலானவளே. **நத்திடு** - விரும்பி அடைகின்ற. **பச்சிமம் எய் திலையில்** - மேற்கில் பொருந்தியுள்ள தில்லைத்தலத்தில், இத்தலம் மேலைச் சிதம்பரம் என வழங்கப்படும், **திலை** - இடைக் குறை. **சிகி** - மயில். **விற்பனர்** - அறிஞர்கள். **முத்தர்** - உலகியல் ஆசைகளிலிருந்து விடுபட்டவர்கள். **பர** - மேலானதாகிய.

## 6. வாரானைப் பருவம்

(பன்னிருசீர் விருத்தம்)

விண்ணம் பொலிவு ஆர் மணி நீல
வெற்பு ஆர் முடியில், பசும்கிரணம்
வீசும் புரண முழுமதி போல்
விளங்கு முகமும், வள்ளை அணித்
தண்ணம் பொலியும் செவியில் ஒளி
சால் பன்னிரு சூரியர் அயனம்
தக, பன் இரு தோடு ஆம் முறையில்
தழைக்க, குதம்பை அசைய, அன்பர்
எண்ணம் பொலி சீர்க் கருணை பொழி
இரு கண்க் கடையும், புன்முறுவல்
இதழும், கவின் ஆர் கரமலரும்,
இசை ஆர் மணிமேகலையும், உற
வண்ணம் பொலி பொன் அடிபெயர்த்து,
வளப் பேரூர்த்தாய் வருகவே!
மகிமைப் பச்சை மரகத மெய்
வல்லி! வருக வருகவே! 1

**விண்ணம் பொலிவு ஆர்** - ஆகாயத்தில் பொருந்தியுள்ள, வானளாவிய என்றபடி. **மணி** - அழகிய. **பசும் கிரணம்** - பச்சைக் கதிர்கள். **புரண முழுமதி** - கடலில் எழும் பூர்ண சந்திரன். **வள்ளை அணி** - வள்ளைக் கொடியின் அழகைப் பெற்ற. **தண்ணம்** - குளிர்ச்சி. **அயனம் தக** - உத்தராயனம். தட்சிணாயனம் என்னும் இரு பருவப்பிரிவுகளுக்கு ஏற்ப. உத்தராயனச் சூரியர்கள் ஒருவகைக் காதணியாகவும் (தோடு) தட்சிணாயனச் சூரியர்கள் வேறுவகைக் காதணியாகவும் (குதம்பை) விளங்குகின்றனர் என்பது கருத்து. **கண் கடை** - கடைக்கண் என மாறுக. **இசை ஆர்** - சலங்கைகள் ஒலிக்கின்ற. **வண்ணம்பொலி** - அழகிய நிறம் வாய்ந்த.

தழங்கும் தவள முறி தரங்கச்
சலதிப் புனல் உண்டு, இருண்டு, உயர்வான்
சார்ந்து, இந்திர சாபம் பிடித்து,
தடித்து, வண்ணத் தமிழ்க்கவியில்
முழங்கும் புயல் நாணுறும் குழல்மேல்,
முயங்கும் அணிச் செம்மணிப் பணிவில்
முதிரக் கவித்து, மதுகரங்கள்
முரலும் ஞான முருகு அமைந்த
குழங்கல் அணிந்த, பணிந்து உவந்து
கோகனக மாதர்கள் வழுத்தும்
கோலம் கண்டு, என் விழி அருவி
கொட்டிக் குளிரும் படி, ஒருகால்,
வழங்க அருள் ஆர் திருப் பேரூர்
வாழ்வே! வருக வருகவே!
மகிமைப் பச்சை மரகத மெய்
வல்லீ! வருக வருகவே! 2

**தழங்கும்** - ஒலிக்கின்றதும். **தவள** - வெண்ணிறம் வாய்ந்ததும். **முறி** -மறித்து மறித்து விழுவதும் ஆகிய, திரைதல். **தரங்க** - அலைகளை உடைய. **சலதிப்புனல்** - கடலின் நீரை. **இந்திர சாபம்** - வானவில். **தமிழ்க் கவியில்** - தமிழ்ச் செய்யுளைப் போல. **புயல்** - மேகம். **நாணுறும்** - (தேவியின் கூந்தலுக்கு நிகராகாமையால்) வெட்கப்படும். குழல்மேல் - கூந்தலில். மேகத்தைப் புகழ்ந்து உவமித்ததால் இது புகழுவமையணி ஆகும். **முயங்கும் அணி** - பொருந்துகின்ற கிரீடம் ஆக, இப்பொருள் கவித்து என்னும் சொல்லாற்றலால் பெறப்பட்டது. **செம்மணிப்பணி** - பதுமராகக் கற்கள் பதித்த ஆபரணம். **வில் முதிர** - ஒளி மிகுதியாகும்படி. **மதுகரங்கள்** - வண்டுகள். **முரலும்** - முசுகின்ற. **முருகு** - நறுமணம். **ஞான வாசம் வீசிப்ரகாசியா நிற்ப** (திருப்புகழ் 114) என்பார் அருணகிரிநாதர். **குழங்கல்** - மலர்மாலை. **கோகனக மாதர்கள்** - தாமரைவாழ் தேவிகள், திருமகளும், கலைமகளும். அணிந்த கோலம், வழுத்தும் கோலம் எனத் தனித்தனி இயையும்.

மைக் கும்பு அணை பூம் பொழில் இமய
மன்னவனும் தேவியும், இன்ப
வாரி படியும்படி, அமை நல்
மணக் காட்சியில், நின் பெருங் காமர்
மொய்க்கும் கமலத் தாளை, அரன்
முரண்கல் புணர்த்தித் திருஅருட்சீர்
முதிர் கற்பு உணர்த்தும் திறம்அது தான்,
மூல மலத்துள் கிடந்து அவமே
எய்க்கும் அடியேம் சிரத்தில், விதி
எழுத்து அற்று ஒழிய அமைத்தும், எமது
இருண்ட கருங்கல் மனமிசை நீ
இழுதில் இளகிக் கரைந்து உருக
வைக்கும்படிக்கும் காண் பேரூர்
வாழ்வே! வருக வருகவே!
மகிமைப் பச்சை மரகதமெய்
வல்லி! வருக வருகவே! 3

**மை கும்பு அணை** - மேகக் கூட்டங்கள் படிகின்ற. **இமயமன்னவன்** - இமவான். **தேவி** - மேனை. **இன்பவாரி** - மகிழ்ச்சிக் கடல். **காமர் மொய்க்கும்** - அழகு வந்து மூடும்படி அப்பிக் கொண்டுள்ள, இலக்கணை. **முரண்கல்** - மென்மை வாய்ந்த திருவடிகளோடு முரண்பட்ட கெட்டியான அம்மிக்கல். **மூலமலம்** - ஆணவம். **எய்க்கும்** - செய்வதறியாமல் தடுமாறுகின்ற. **விதி எழுத்து** - பிரமனால் எழுதப்பட்டுள்ள தலையெழுத்து. **இருண்ட** - அறியாமை நிறைந்த. இருண்ட மனம் கருங்கல்மனம் எனத் தனித்தனி இயையும். **இழுதில்** - நெய்யைப் போல. தாளைக் கல்புணர்த்தி திறம் உணர்த்தும் திறம் அது, சிரத்தில் ஒழிய அமைத்தும் மனமிசை உருகவைக்கும் படிக்கும் காண் எனப்பொருள் முடிபு காண்க.

பணியே பணியாப் புனைந்த அருள்
பட்டிப் பெருமான், அகம் புறத்தும்
பார்த்துப் பரமானந்தம் உறும்
பச்சைக் கிளியே! அணித் திரள்கட்கு
அணியே! மதுர அருள்வளப்பாட்டு
அமையும் பொருட்கு ஓர் மெய்ப் பொருளே!
அல்லல் பிறப்பில் எம்மை விடாது,
அழைக்கும் ஒளி ஆர் நாதக்கிண்
கிணியே! அடித் தாமரை பொலியும்
கிருபைக் கடலே! அமுத வெற்பே!
கிரிவேந்து இயற்றும் தவப் பேறாய்க்
கிடைத்த மணியே! எம் இரு கண் -
மணியே! ஒளியே! திருப் பேரூர்
வாழ்வே! வருக வருகவே!
மகிமைப் பச்சை மரகத மெய்
வல்லீ! வருக வருகவே! 4

**பணியே** - பாம்புகளை. **பணியா** - ஆபரணங்களாக. **பட்டிப்பெருமான்** - பட்டீசர், திருப்பேரூர் இறைவன் திருநாமம். **அகம் புறத்தும்** - உள்ளத்திற்கு உள்ளும், வெளியேயும். **பரமானந்தம்** - பேரின்பம். **அணித்திரள்கட்கு அணி** - அணிகலன் கூட்டங்களுக்கு ஊட்டப்பட்ட அழகு. **மதுர** - இனிமையான. பாட்டு அமையும் பொருட்கு ஓர் மெய்ப்பொருளே: சொற்களால் ஆனது செய்யுள். அச்சொற்களால் உணர்த்தப்படுவது அருத்தம், அதாவது பத அர்த்தம். இந்தப்பொருளால் உணரவேண்டிய கருத்தாக இருப்பது பயன். இது பிரயோசனம் எனப்படும். "**பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனும்**" (சகல. 7) என்பார்குமரகுருபரர். பக்திப்பாடல்களின்முடிந்தபொருளாக விளங்குபவள் என்றபடி. **கிருபை** - கருணை. **அமுதவெற்[illegible]** அமிர்தத்தாலாகிய மலையே. **கிரிவேந்து** - மலையரசன்.

கதியே வருக! விதி ஒழிக்கும்
கதிரே வருக! உள்ப்புறம் தோய்
கருவி கரணம் கலந்து இனிக்கும்
கரும்பே வருக! அருள் சேம
நிதியே வருக! மலமாயை,
நிரப்பு நிரப்பை அழிக்கும் இன்ப
நிறைவே வருக! கன்னி என
நின்றே அனைத்தும் ஈன்றருள் அம் -
புதியே வருக! அவிர் பொன்னம்
பொருப்புச் சிலையார் விருப்பு உறும் அற் -
புதமே வருக! எமக்கு அமைமெய்ப்
புகலே வருக! சிவஞான
மதியே வருக! திருப்பேரூர்
வாழ்வே வருக! வருகவே!
மகிமைப் பச்சை மரகத மெய்
வல்லீ! வருக வருகவே! 5

**கதியே** - முத்திப் பேறாகவே இருப்பவளே. **கதிர்** - சூரியன். **கருவி** - ஐம்புலன்கள். **கரணம்** - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு அந்தக்கரணங்கள். **சேம நிதி** - சேமிப்பு வைப்பு. **மலமாயை** - மலமாகிய மாயை, மாயாமலம், இருபெயரொட்டு. **நிரப்பு நிரப்பை** - நிறைவிக்கின்ற வறுமையை, வினைத்தொகை. வறுமை என்பது ஆசைப்பட்ட ஒன்று - அது தேவையாகக் கூட இருக்கலாம் - கிடைக்காததோ பிறரிடம் இருந்து நம்மிடம் இல்லாத ஒன்றை நினைத்து வருந்துவதோ ஆகும். **"நல்குரவு என்னும் நசை"** *(1043)* என்பது தமிழ்மறை. இது குமரகுருபரரால், **"அல்கா நல்குரவு அவா எனப்படுமே"** *(சித.மும்.கோவை 26)* என விரித்துரைக்கப்படுகிறது. **அம்புதி** - கடல். **"அகிலாண்ட கோடி ஈன்ற அன்னையே! பின்னையும் கன்னி என மறைபேசும் ஆனந்த ரூப மயிலே"** *(37-5)* என்பார் தாயுமானவர். பொன்னம் பொருப்புச் சிலையார் - பொன் மலையை வில்லாக உடைய சிவபெருமான். அம் சாரியை. புகல் - அடைக்கலம் தருபவள். சிவஞானம் ஆகிய சந்திரன், மெய்யறிவு என இருவகையாகவும் கொள்ளலாம்.

(வேறு)

ஏடகம் பொலி உபய தோடகம் திகழ் திருஓர்
இருவரும் ஒவ்வொருவர் என்ன,
எண்ண உயர்விண் அமைமின் வண்ணம் உறும்
நுண்ணிடை கொள்
ஏந்திழையர் வரும் நவமணி
ஆடகப் பாடகத் தாள் தகக் கூடு அகத்து
அடியவரில் ஒருவன் என்றே,
அண்டர்களும் மண்டலத் தொண்டர்களும் விண்டருள் மெய்
அற்புதப் பொற்பு உதவவே,
நாடு அகத்து உவகை நிறை நாடகத் துணை அடிகொள்
நாதன் வளர் நாத முடிநேர்,
ஞான ஆனந்த சுக மோன ஆனந்த சபை
நனி சிறந்து, ஓங்கும் மகதி
மாடகத் தவன் ஓது பீடு அகப் பேரையின் முன்
வந்தருள்க! வந்தருள்கவே!
வரம் மிகத் தருதல்லி! மரகதத் திருவல்லி
வந்தருள்க! வந்தருள்கவே! 6

**ஏடகம் பொலி** - இதழ்கள் கவின் செய்கின்ற. **உபய தோடகம்** - வெண்தாமரை செந்தாமரை ஆகிய இருவகை மலர்களில். **திகழ்** - விளங்குகின்ற. **திரு ஓர் இருவரும்** - (கல்வி பொருள் ஆகிய) செல்வங்களுக்கு உரியவர்களாகிய ஒப்பற்ற கலைமகள், திருமகள் என்னும் இருவரும் ஒவ்வொருவர் என்ன (மேலே சொல்லப் போகும் மணிகளுள் தோன்றிய மகளிருள்) ஒவ்வொருவர் ஆவர் என்று. **எண்ண** - நினைக்கும்படி. **விண் அமை** - வானில் உள்ள. **மின் வண்ணம்** - மின்னலின் தன்மை. **ஏத்திழையர்** - மகளிர். இவர்கள் உமாதேவியாரின் காற்சிலம்பின் ஒன்பது மணிகளில் தோன்றிய நவசக்திகள் ஆவர். **ஆடக** - பொன்னாலான. **பாடக** - சிலம்பு அணிந்த. **தக** - தக்க முறையில், மனம் ஒன்றிய நிலையில். **அண்டர்** - தேவர். **மண்தல** - நிலஉலக. **விண்டு** -புகழ்ந்து. **பொற்பு** - பெருமை. **நாடக** - திருக்கூத்தாடுகின்ற. **துணை அடி** - இரண்டு திருவடிகள். நாதன் - சிவபெருமான். **சபை** - கனகசபை. மகதி மாடகத்தவன் - மகதி என்னும் வீணையை உடைய முனிவராகிய நாரதர்,

மாடகம் ஆகுபெயர் நாரதர் திருப்பேரூரின் சிறப்பைக் கூறியது தலபுராணச் செய்தி.

காழியம்பதியில் வரும் ஏழிசைத் திருமறைக்
கவுணியப் பிள்ளைக்கும் நீள்
காக்கையர்முதல் சொல் அவிர் ஆக்கை அழியாச் சித்தர் -
கட்கும், பல் பத்தர்கட்கும்,
ஆழி என நின்கை புனை பாழி அரவத்தின் முடி
அமை சுமைத் தண் தரங்க
ஆழியற்கு, அணிகுலவு பூழியற்கு, இணை இல் பனி
அசல மன்னற்கும், அன்பர்
சூழிய முடிச் சிறிய வீழி இதழ் ஆர் சுதைத்
தோற்றம் உற்றும், கருணை செய்
சூல்க் கொண்ட கொண்டல் புரை கண்களொடு, என்விழிமுனம்
தோன்றி, நீ அஞ்சல்; இனிதே
வாழி! என்று ஓதி, அவிர் ஊழி பொலி பேரூரில்
வந்தருள்க! வந்தருள்கவே!
வரம் மிகத் தரு தல்லி! மரகதத் திருவல்லி!
வந்தருள்க! வந்தருள்கவே! 7

**காழியம்பதி** - சீகாழி. **கவுணியப் பிள்ளை** - கவுண்டனிய கோத்திரத்தில் அவதரித்த ஞானசம்பந்தர். **காக்கையர்** - காகபுசுண்டர் என வழங்கப்படும் சித்தர். **ஆக்கை அழியா** - உடல் அழிந்து படாத. **ஆழி என** - மோதிரமாக. **பாழி அரவம்** - பெரிய பாம்பு. ஆதிசேடன், **"அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்"** என்பார் ஔவையார் (தனிப்பாடல்). **சுமை** - பாரமாக உள்ள (தலைச்சுமை). **தரங்க** - அலைகளை உடைய. **ஆழியற்கு** - கடலின் மன்னனுக்கு. இது வலைவீசின திருவிளையாடற்செய்தி. **பூழியன்** - பாண்டியன், இங்கு மலயத்துவசன். **பனி அசல மன்னன்** - இமவான். **சூழிய முடி** - உச்சிக்கொண்டை, **முடிச்சூழிய மாட** (மீனாட்சி. பிள்ளைத். செங்கீரை 6) **வீழி இதழ்** - விழுதிக்கனியைப் போன்ற உதடு. **சுதைத் தோற்றம்** - மகளாகப் பிறப்பு. **கொண்டல் புரை** - மேகம் போன்ற. **அஞ்சல்** - பயப்படாதே. **ஊழிபொலி** - பலயுகங்களாக நிலைத்துள்ள.

(வண்ண விருத்தம்)

தனனத் தானா தனதன தய்யா தந்தன தந்தனனா

துகினக் கோடு ஆள்புரவலன் இல்லாள்
தொன்று செயும் தவம் ஆர்
சொருபப் பாவாய்! இரணிய வில்லார்
சுந்தர நெஞ்சு அகலாய்!
சிகியில்த் தோய் தேசு அமை கதிர்வைவேல்
செங்கை அமைந்து இயல் சேய்,
செகம் விண்ப் பாலார் துயர் அறவல்லே
சிந்துர ஐங்கரனார்,
மகிழ் நல் தாயே! வழிபடு நல்லோர்
மஞ்சுள பஞ்சரம் நேர்
மனதில் தோய், கோபுர மிசை வில் ஏய்
மஞ்சு படிந்து அணி ஆர்
மகிமைப் பேரூர் மருவிய செல்வீ!
வந்தருள்! வந்தருளே!
வளமைச் சீர் ஊர் மரகத வல்லீ!
வந்தருள்! வந்தருளே! 8

**துகினக் கோடு** - இமயமலை. **புரவலன்** - மன்னன், இங்கு இமவான். **இல்லாள்** - அவன் மனைவி, மேனை. **தொன்று** - முற்காலம். **சொருப** - வடிவமாகத் தோன்றிய. **பாவாய்** - சிலைபோன்றவளே. **இரணிய வில்லார்** - பொன்மலையைத் தன் வில்லாக உடைய சிவபெருமான். **சுந்தர** - அழகிய, இங்கு அன்பைக் குறித்தது. **சிகியில் தோய்** - மயில் வாகனத்தை உடைய. **தேசு** - புகழ். **சேய்** - இரட்டுற மொழிதல். 1. மகன். 2. முருகப்பெருமான். **செகம்** - மண்ணுலகம். **வல்லே** - விரைவாக. **சிந்துர** - இரட்டுற மொழிதல். 1. அழிக்கின்ற வல்லமை உடைய, 2.யானை முகத்தை உடைய. சேய், ஐங்கரனார் என்னும் ஈரிடத்தும் எண்ணும்மை விரிக்க. மஞ்சுள பஞ்சரம் - மென்மையான (பறவைக்) கூண்டு. **நேர்** - போன்ற. **வில்ஏய்** - வானவில் அமைந்த. **மஞ்சு** - மேகம். **மகிமை** - திருவருட்பெருமை மிக்க.

தனன தனன தனன தனன தனன தனன தனதனா

அருவம் உருவம் உபய நிலை கொடு
அடியர் இதய கமலமேல்
அனலின் இழுதில் உருக விரவும்
அமுத கிரண சொருபியே!
கருவ உததி அமிழும் மடையர்
கனவினிலும் எய்த அரிய மா -
கடவுள், புலவி ஒழிய முடிகொள்
கவின் நன் மவுலி அனைய தாள்
மருவு புரண கவுரி! மதுர
வசனி, உரகர் புவி உளோர்
மகிமை முனிவர் சுரர்கள் பரவும்
வளமை அரச வனம் உளாய்!
வருமம் அடியன் மிசை எய்தலை; முன்
வருக! வருக! வருகவே!
மணி மரகத மயில்! என் விழிமுன்
வருக! வருக! வருகவே! 9

**அருவம்** - பரம்பொருளின் வடிவம் இல்லாத நிலை. **உபயநிலை** - அருவுருவம், வடிவம் இருப்பதும் இல்லாததுமாகிய நிலை. **அனலின் இழுதில்** - தீயிலிட்ட நெய்யைப் போன்று. **கிரண** - கதிர்களை உடைய. **சொருபியே** - அழகிய உருவத்தை உடையவளே. **கருவ உததி** - செருக்காகிய கடல். **கடவுள்** - சிவபெருமான். **புலவி** - ஊடல். **முடிகொள்** - தன் தலையில் தாங்குகின்ற. **கவின்** - அழகிய. **மவுலி** - கிரீடம். "**தைவந்து நின் அடித்தாமரை சூடிய சங்கரர்**" (98) என்பார் அபிராமி பட்டர். **மதுரவசனி** - இனிய சொற்களைப் பேசுபவள். **உரகர் புவி** - நாகலோகம், பாதாளம். **சுரர்கள்** - தேவர்கள். **அரசவனம்** - திருப்பேரூர். **வருமம்** - சினம்.

தத்தனா தன தன்ன... தனதனா

கற்பகாடவி விண்ணிடத்தில் வாழ்வுற எண் ம -
கத்தர் காணரும் அன்னை! வருகவே!
கற்பு நீடிய மெய்ம் மகத்துவ ஆகரர் கண் அ -
கத்துள் ஒவுஅரு திண்மை! வருகவே!
வெற்பதாய் அவிர் வண்ணவில் கொள் ஈசுரன் உன்னும்
வெற்றி வேல் நிகர் கண்ணி! வருகவே!
மிக்க ஆர் அமுது அன்ன ஒப்பு இல் பாடல்கள் பன்னும்
மெய்த் தபோதனர் உண்மை! வருகவே!
துற்பசாசு உறழ் பொய்ம் மனத்து அவாவழி நண்ணு
துட்டர் ஓர்வுஅரு கன்னி! வருகவே!
தொக்க ஆரணம் எண்இல் பற்பல் கோடிகள் சென்னி
துற்ற தாள் மலர் அன்னம்! வருகவே!
பற்பம் மாண் அமை கண்மணிக்கண் ஆர்வம் உள் மன்னு
பத்தர் வாழ்வு எனும் நன்மை! வருகவே!
பட்டிநாயகர் தம்மொடு ஒப்புஇல் பேரையில் மின்னு
பச்சை நாயகி அம்மை! வருகவே.10

**கற்பகாடவி விண்ணிடத்தில் வாழ்வுற எண் மகத்தர்** - கற்பகச் சோலைகள் நிறைந்த வானுலகத்தில் வாழ விரும்பி வேள்விகளைச் செய்பவர்கள். வேள்வியால் முத்தி கிடைக்காது, வானுலக இன்பமே கிடைக்கும், அது நிலையற்றது என்பன அடிப்படைக் கோட்பாடு. "**கூட்டம் பெருக்கி உயிர்கொன்று அனலில் வெந்து அருந்தி வேட்டவர் தாம், தம்மளவில் மெய்யாய வாள்த்தடம் கண் மின்னாரை அன்ன வியன் உலகில் தோய்ந்து முன்பு தின் ஆகம் கொள்வார் திறம்" (விற்பனம் 11-3).** மகத்துவ **ஆகரர்** - பெருமைக்கு இடமானவர். **கண் ஆகம்** - விழியினும் உள்ளத்தும், உம்மைத் தொகை. **ஒவு அரு** - நீங்காத. **திண்மை** - உறுதி உடையவளே. **வெற்பதாய் அவிர் வண்ணவில்** - மலை ஆகிய அழகிய வில். **பன்னும்** - சொல்லுகின்ற. **தபோதனர் உண்மை** - தவசிகளால் உணரப்படும் உள்பொருள். **துர்** - தீய. **அவாவழி** - ஆசையின் போக்கில். **ஓர்வு அரு** - அறிய முடியாத. **தொக்க ஆரணம்** - தொகுக்கப் பெற்ற வேதங்கள். **சென்னி துற்ற** - தம் தலையில் சூடியுள்ள, வேதங்களின் முடிந்த பொருளான என்றபடி. **பற்பம்** - திருநீறு. **கண்மணி** - உருத்திராக்கம். **உள் மன்னு** - மனத்தில் பதிந்துள்ள.

## 7. அம்புலிப் பருவம்

சாமம்

(இரட்டையாசிரிய விருத்தம்)

தீங்குவளை மாலை அகலத்தினம்பிரமரத் -
தினமா விருந்திடுகையால்,
சேவாக னத்துவசர் எண்ணிடத் தின்முடி
திருக்காட்சி ஆம்திறத்தால்,
ஓங்கு இமயவரை மன்னவன் பாக்கியச் சுதை
உருக் கொண்டலில் பொலிதலால்,
உந்து மீனக் கொடியன் அங்க மீதிற் கவிகை
ஒத்து ஓம்படைப்பணியினால்,
தாங்குமதி மாதுரிய வெண்ணிலா வானந் -
த மெய்ப்பாலளித்திடுதலால்,
தானவப் பேரேற்ற அத்திமுகமாங் காதல்
ஆரவாரம் பெறுதலால்,
ஆங்குணவளப் பச்சை நாயகியை நிகர்வையால்
அம்புலீ! ஆடவாவே!
ஆரூரர் பன் இசை கொள் பேரூரர் பன்னியுடன்
அம்புலீ! ஆடவாவே! 1

(தலைவி பகுதி)

தீங்கு வளை மாலை அகல தின் அம் பிரம ரத் -
தினமா இருந்திடுகையால்,
சேவா கனத்து வசர் எண் இடத்தின் முடி
திருக்காட்சி ஆம் திறத்தால்,
ஓங்கு இமயவரை மன்னவன் பாக்கியச் சுதை
உருக் கொண்டு அலில் பொலிதலால்,
உந்தும் ஈனக் கொடியன் அங்கம் மீது இல் கவிகை-
ஒத்து ஓம்படைப்பு அணியினால்,
தாங்குமதி மா துரிய எண்ணிலா ஆனந் -
த மெய்ப்பால் அளித்திடுதலால்,
தான அப்பு ஏர் ஏற்ற அத்திமுகமாம் காதல்
ஆர வாரம் பெறுதலால்.........

**தீங்கு** - தீமைகளை எல்லாம், **வளை** - சுற்றச் செய்யும். **மாலை** - மாயா மயக்கங்களை. **அகல** - நீங்கும்படியாக. **தின்** - விழுங்குகிற. **அம்** - அழகிய. **பிரம ரத்தினமா** - பரப்பிரமத்தைக் கூட்டும் மாணிக்கப் பிரகாசமாக. **இருந்திடுகையால்** - நிலைபெறுதலாலும். சேவா - தரிசனம் செய்யும். கனத்து - தவமகிமைமிக்க. **வசர்** - சாத்தியசித்தர்கள். **எண் இடத்து** - நினைத்த இடங்களில். **திருக்காட்சி** - மனத்தைக் கவரும் சகுண வடிவத்தைக் காட்டுகை. **ஆம் திறத்தால்** - ஆகும் தகுதியாலும். **ஓங்கு** - உன்னதமானது. **இமயவரை மன்னவன்** - பருவத ராஜனது. **பாக்கியம்** - பெருவாழ்வாகிய. **சுதை** - மகளாகி. உரு வடிவமானது. **கொண்டலில்** - நீலமேகம் போன்று. **பொலிதலால்** - சிறத்தலாலும். **உந்தும்** - செலுத்தும். **ஈனக்கொடியன்** - இழிவுள்ளதுற் குணமுடையோன். **அங்கம்** - சரீரம். **மீது** - எதிர்காலத்தில். **இல்** - இல்லையாகும்படி. **கவி** - விரும்பக்கூடிய. **கையொத்து** - ஒழுக்கம் இசைந்து. **ஓம்** - பிரணவமாகிய. **படைப்பு** - சிருட்டியைச் செய்யும். **அணியினால்** - அலங்காரத்தாலும். **தாங்கும்** - காக்கும்படி. **மதி** - எண்ணுகின்ற. **மா** - பெரிய. **துரியக்கண்** - துரிய நிலைமீதுள்ள. **எண்ணிலா** - அளவுபடாத. **ஆனந்த மெய்ப்பால்** - பரமானந்த மயமாகிய உண்மையினிடத்து. **அளித்திடுகையால்** - கொடுத்தலாலும். **தான** - மதமாகிய. **அப்பு** - நீரையுடைய. **ஏர்** - சிறப்பை. **ஏற்ற** - தன்பாற்கொண்ட. **அத்திமுகமாம்** - யானை முகத்தையுடைய. **காதல்** - பிள்ளையார்பால். **ஆர** - நிறைவாகிய. **வாரம்** - அன்பின் உரிமையை. **பெறுதலால்** - அடைதலாலும்.

**(சந்திரன் பகுதி)**

**தீம் குவளை மாலை அகலத்தின் அம் பிரமரத்து**
**இனம் மா விருந்து இடுகையால்,**
**சே வாகன துவசர் எண் இடத்தில் முடி**
**திருக்கு ஆட்சி ஆம் திறத்தால்,**
**ஓங்கு இமையவரை மன்ன அன்பு ஆக்கிய சுதை**
**உருக் கொண்டு அலில் பொலிதலால்,**
**உந்தும் மீனக் கொடியன் அம் கம் மீதில் கவிகை**
**ஒத்து ஓம்படைப் பணியினால்,**

தாங்கும் அதி மாதுரியம் வெண் நிலா வான் அந் -
தம் மெய்ப்பால் அளித்திடுகையால்,
தானவப் பேர் ஏற்று அவ் அத்திமுகம் ஆங்கு ஆதல்
ஆரவாரம் பெறுதலால்........

**தீம்** -தித்திப்பாகிய தேனை உமிழும். **குவளைமாலை** - நெய்தல் மாலையை அணிந்த. **அகலத்தின்** - மார்பினிடத்து. **அம்** - நலம்பொருந்த. **பிரமரத்து இனம்** - வண்டுக் கூட்டங்கள் உண்ணும்படி. **விருந்திடுகையால்** - புதுமையாகிய உணவு தருவதாலும். **சே** - இடபமாகிய. **வாகன துவசர்** - வாகனமும் கொடியுமுடைய சிவபெருமானது. **எண் இடத்தில்** - இடது பாகத்திலும். **முடி** - திருமுடியின் மேலும். **திருக்கு ஆட்சி ஆம் திறத்தால்** - கண்ணுக ஆளப்படும் திறத்தாலும், (கண்களைக் கவரும் தோற்றத்தோடு கூடியிருத்தலாலும்). **ஓங்கு** - மிகுதிப் படும்படி. **இமையவரை** - தேவர்களை. **மன்ன** - நிலை பெற்ற. **அன்பாக்கிய** - சினேகர்களாக்க. **சுதை உருக்கொண்டு** - அமுத கலைவடிவம் தாங்கி. **அலிற் பொலிதலால்** - இராக்காலத்தில் பிரகாசித்தலாலும். **உந்தும்** - எழுச்சி நிறைந்த. **மீனக்கொடியன்** - மீன் கொடியை உடைய மன்மதனது. **அம்** - அழகிய. **கம்** - தலையின். **மீதில்** - மேலிடத்தில். **கவிகையொத்து** - குடையாகப் பொருந்தி. **ஓம்படை** - காக்கின்ற. **பணியினால்** - தொழிலாலும். **அதிமாதுரியம்** - மிக்க சுவை அமைந்த. **வெள்** - வெண்மையான. **நிலா** - சந்திரிகையை. **வான்** - ஆகாயம். **அந்தம்** - அழகு அமையுமாறு. **தாங்கு** - தரித்துள்ள. **மெய்ப்பால்** - சரீரத்தினின்றும். **அளித்திடுகையால்** - கொடுத்தலாலும். **தானவப்பேர் ஏற்று** - தானவன் என்னும் பெயர் அடைந்து. **அ** - அந்த. **அத்திமுகம்** - கடலிடமாகிய. **ஆங்கு** - பிரதேசங்களில். **ஆரவாரம்** - பேரோசையை. **பெறுதலால்** - அடைவித்தலாலும். சந்திரனுக்கும் ஒத்தென்க. **ஆரூரர் பன்னிசை** - சுந்திரமூர்த்தி நாயனர் சொல்லும் தேவாரம் . **பன்னி** - மனைவி.

***சேவா தரிசனம்*** *- பணிவிடையாகக் கண்டு வணங்குதல்.* ***சாத்திய சித்தர்கள்*** *- சித்திவல்லமை பெற்றவர்கள்.* ***சகுண*** *- உருவ.* ***துரியக்கண்*** *- உயிரின் தூய நிலை.*

பைங்கதிரின் அங்கமஞ் சார்மணி திரட்டு தன
பாரம் மல்கு தார் அ அணியால்,
பதுமத் தளங் கணீரானனைந் திரவான
பாணி கூப்பிப் பணிதலால்,
பொங்க மாசித் திங்கண் நண்ணு மேலவருமன்
புண்ணிய மமைந்து மெய்யாம்,
போக்கியங் காவும்பர் வாய்விண்ட தேசுஇயல்
பொருள் ஆர வாக்கை யுறலாற்
தங்கவம் பரமாவி ரத்தி நம னந்தவஞ்
சக்கரற் கிடமாதலாற்
சானவிக் கண்மைத் திருக்குந் தளக் கொன்றை
யலர் தலைவி யாம விசையால்
அங்கமர கதவல்லி எங்கள் அனை அனையையால்,
அம்புலீ! ஆடவாவே!
ஆரூரர் பன் இசைகொள் பேரூரர் பன்னியுடன்
அம்புலீ! ஆடவாவே! 2

(தலைவீ பகுதி)

பைங்கதிரின் அங்கம் மஞ்சு ஆர் மணி திரட்டு தன
பாரம் மல்கு தார் அவ் அணியால்,
பதுமத்தள் அம் கண் நீரால் நனைந்து இரவான
பாணி கூப்பிப் பணிதலால்,
பொங்க மா சித்து இங் கண் நண்ணும் மேலவரும் அன்பு,
உள் நியம மைந்து, மெய் ஆம்
போக்கு இயங்கா உம்பர்வாய் விண்ட தேசு இயல்(ப்)
பொருள் ஆர ஆக்கை உறலால்,
தங்க, அம்பர மா விரத்தி, நமன் நந்த அஞ்சு
அக்கரற்கு, இடம் ஆதலால்
சால் நவிக்கண், மைத் திருக்குந்தளம் கொன்தை -
யலர் தலைவி ஆம் அவ் இசையால்

**பைங்கதிரின்** - நீலமணி போன்ற பிரகாசத்தையுடைய. **அங்கம்** - திருமேனியின்கண். **மஞ்சு ஆர்** - அழகு நிறைய. **திரட்டு தனபாரம்** - திரண்டுள்ள ஞானமயமாகிய கொங்கைகளாகிய மலைகளில். **மல்கு** - நிறைவுபெற்றுள்ள. **மணி** - இரத்தினமயமாகிய. **தார்** - மாலைகள் பிரகாசிக்கும். **அ**

- அந்த. **அணியால்** - புனைவினாலும். **பதுமத்தள்** - இலக்குமி. **நனைந்து** - முழுகி. **இரவான பாணி** - கெஞ்சுதலுடன் விரித்த கைகளை. **கூப்பி** - சிரசின் மீது குவித்து. **பணிதலால்** - வணங்குதலாலும். **பொங்கம்** - மிகுதியாகிய. **மா** - பெரிய. **சித்து** - சித்தி வல்லபங்கள். **இங்கண்** - இவ்வுலகத்து. **நண்ணும்** -பொருந்தியுள்ள. **மேலவரும்** - பெரியோர்களையும். **அன்பு** - பத்திப் பொலிவுறக் கூட்டி. **உள் நியம மைந்து** - இதயத்தில் விவேக வலிமைகள். **மெய்யாம்** - சத்தியமாக்கும். **போக்கு** - கதியில். **இயங்கா** - நடப்பித்து. **உம்பர்வாய்** - பரமாகாயத்தில். **விண்ட** - விரிந்த. **தேசு** - சோதிமயமான. **இயற்பொருள்** - உண்மைப் பொருளானது. ஆர - உண்ணும் வண்ணம். **ஆக்கையுறலால்** - அவர்களின் சரீரத்தைக் கொடுத்தலாலும். தங்க - (உள்ளத்தில்) நிலை பெறுமாறு. **அம்பரம்** - பரமாகாசத்தை இசைக்கவல்ல. **மாவிரத்தி** - மேலான துறவு நெறியைக் கூட்டி. **நமன்** - இயமனை. **நந்த** - கெடும்படி செய்யும். **அஞ்சு அக்கரற்கு** - ஐந்தெழுத்துத் திருமேனியமைந்த சிவபிரானுக்கு. **இடமாதலால்** - இடப்பாகம் பொருந்தியுள்ளதாலும். **சால்** - பொருந்திய. **நவி** - மான் போன்ற. **கண்** - விழிகளும். **மை** - மேகம் போன்ற. **திரு** - அழகமைந்த. **குந்தளம்** - அளகபாரத்தையும். **கொன்** - கற்பின் பெருமையுமுடைய. **தையலர்** - மங்கையர்களுக்கெல்லாம். **தலைவியாம்** - இறைவியாய் விளங்கும். **அ** - அந்த. **இசையால்** - கீர்த்தியாலும்.

**(சந்திரன் பகுதி)**

பைங்கதிரின் அம் கமம் சார் மணி திரட்டுதல் அ -
பாரம் மல்கு உதார அணியால்,
பதுமத்துளம் கள் நீரால் நனைந்து, இரவு ஆன
பாணி கூப்பி, பணிதலால்,
பொம்கம் ஆசித்து இங்கண் அண்ணுமேல், அவரும் மன்
புண்ணியம் அமைந்து, மெய்யாம்
போக்கியம், கா உம்பர் வாய் விண்ட தேசு இயல்
பொருள் ஆர் அவா கை உறலால்,

தங்க அம்பரம் மா, இரத்தினம், மன் நந்த அம்
சக்கரற்கு இடம் ஆதலால்,
சானவிக்கு அண்மைத்து இருக்கும் தளக் கொன்றை
அலர் தலை வியாம இசையால்.

**பைங்கதிரின்** - (நெல் முதலிய தானிய வகைகளின்) இளங்கதிர்களின்பால். **அம்** - அழகமைந்து. **கமம்சார்** - நிறைவு பெற்றுள்ள. **மணி** - தானிய மணிகளை. **திரட்டுதன்** - மினுக்கம் இசையச்செய்தலாகிய. **அபாரமல்கு** - எல்லையற்ற வளப்பமிகுந்த. **உதாரம்** - வள்ளல் தன்மை அமைந்த. **அணியால்** - (சுதாகரன் ஆகிய) அலங்காரத்தாலும். பதுமத்தளம் - தாமரை மலரிதழ்கள். கள் நீரால் நனைந்து - தேனுகிய சலத்தில் முழுகி. **இரவானபாணி** - இராக்கால வேளையில். **கூப்பி** - குவிந்து. **பணிதலால்** - கவிழ்தலாலும். **பொங்கம்** - பொலிவை. **ஆசித்து** - விரும்பி. **இங்கண்** - தன் மண்டலத்தில். **அண்ணுமேல்** - பொருந்தியகாலம். **அவரும்** - பாவிகளும். **மன்** - நிலைபெறும். **புண்ணியமமைந்து** - பரிசுத்தத் தன்மை இசைந்து. **மெய்யாம் போக்கியம்** - சரீர அனுபவமாகிய போகானுபவம் நிறைந்த. **கா** - கற்பகத் தருவின்கீழ். **உம்பர்** - தேவர்களுடன். **வாய்விண்ட** - சொல்லிய வண்ணமான. **தேசுஇயல்** - கீர்த்திபொருந்திய. **பொருள் ஆர்** - பொருட்களின்பால் நிறைந்த. **அவா** - ஆசைப்படி. **கையுறலால்** - தரிசன விசேடத்தாற் பெறக்கூட்டுதலாலும். **தங்க அம்பரம்** - பொற்பீதாம்பரமும். **மா** - இலக்குமியும். **இரத்தினம்** - கவுத்துபமணியும். **மன்** - நிலைபெற்ற. **நந்த** - சங்கமும். **அம்** - அழகிய. **சக்கரற்கு** - சக்கராயுதமும் பொருந்தியுள்ள திருமாலுக்கு. **இடமாதலால்** உறைவிடமாயதாலும். **சானவிக்கு** - கங்கா நதிக்கு. **அண்மைத்து** - நெருங்கிச் சிவபிரான் சடையினிடத்து. **இருக்கும்** - பொருந்தியுள்ள. **தளக்கொன்றை அலர்** - இதழ்விரிந்த கொன்றைமலரின். **தலை** - இடத்தில். **வியாம** - ஒளியமைந்துள்ள. **இசையால்** - ஒற்றுமையாலும் சந்திரனுக்கும் ஒத்ததென்க.

**நவி** - நவ்வி என்பதன் இடைக்குறை. **போகானுபவம்** - (இன்பத்) துய்ப்பு.

மையகங் கோவினி லிரட்டையங் கங் கூர்ந்து
வண் கடகம் ஏறுகையினால்,
வன் மடங் கல்லி வரலால், எண்ணணிக் கன்னி
வாசத்தில் அத்த மார்ந்த
செய்ய தூக்கேற்றாலவால மறைய விருச்
சிகத்திசை வினாவல் பெறலால்,
சே யென்ன வாண்டளப் பற்கு முன்னோது முப -
தேச விற் பாலனிடலால்,
கைய மகரத்தங்க மாற்றலி னொல் கும்பங்
கவின்றாரு மேற்கை கொளலால்,
காணுமச் சத்திருப் பார் வைபவ ராசியங்
கட்டங் கெடுப்பமைகையால்,
ஐயம் இலை; நீ அருள் துய்ய மரகதம் நிகர்வை;
அம்புலீ! ஆடவாவே!
ஆருரர் பன் இசைகொள் பேரூரர் பன்னியுடன்
அம்புலீ! ஆடவாவே! 3

(தலைவீ பகுதி)

மைய கம் கோவின் இல் இரட்டை அங்கம் கூர்ந்து,
வண் கடகம் ஏறு கையினால்,
வன் மடம் கல்லி வரலால் எண் அணிக் கல் நி -
வாசத்தில், அத்தம் ஆர்ந்த
செய்ய தூக்கு ஏற்று ஆலவால மறை அவிர் உச் -
சி கத்து இசை வினாவல் பெறலால்,
சேய் என்ன ஆண்டு அள் அப்பற்கு முன் ஓதும் உப -
தேச வில்ப் பாலன் இடலால்,
கை யமகரத்து அங்கம் மாற்றலின், ஒல்கும் பங் -
கம் இன்தாரு மேல் கை கொளலால்,
காணும் அச்சம் திருப் பார்வை பவராசி அங்கு
அட்டம் கெடுப்பு அமைகையால்.....

**மைய** - நடுவிலுள்ள. **கம்** - ஆகாயமயமான. **கோவின்** - தலைவனாகிய சிவபெருமானது. **இல்** - மனைவியாய். **இரட்டையங்கம்** - இருவிதத் திருமேனிகள். **கூர்ந்து** - நுணுக்கமாய் நெருங்கி. **வண்** - வளப்பமாகிய. **கடகம் ஏறு**

**கையினால்** - இடப்பாகத்தில் கங்கணங்கட்டியுள்ள கையாலும். **வன்** - வலிதாய. **மடம்** - அஞ்ஞானத்தை. **கல்லிவரலால்** - அகழ்ந்தெடுத்தலாலும். **எண்** - மதிக்கத்தகுந்த. **அணி** - அழகு பொருந்திய. **கல்** - வரையிடத்தில். **நிவாசத்தால்** - வசித்தலாலும். **அந்தம்** - பொருட்சிறப்பு. **ஆர்ந்த** - நிறைந்த. **செய்ய** - மேலாகிய. **தூக்கு** - பத்தர்களது தோத்திரப்பாக்களை. **ஏற்று** - ஏற்றுக் கொண்டருளியும். **ஆலவால** - பாத்தி போன்று பலபொருள் நிறைந்த. **மறை** - வேதங்களின். **அவிர்** - ஒளியமைந்த. **உச்சி** - முடியானது. **கத்து** - சத்திக்கின்ற. **இசை** - ஒலி இன்பத்தை. **விஞவல் பெறலால்** - கேட்டு மகிழ்தலாலும். **சேய் என்ன** - குமாரனென்ன. **ஆண்டு** - ஆட்சி செய்து. **அள்** - கைகளில் எடுக்கும். **அப்பற்கு** - (கங்கையைத்தரித்த) பிதாவிற்கு. **முன்** - முற்காலத்தில். **ஓதும் உபதேச** - பிரணவப்பொருளைப் போதித்த. **வில்** - ஒளிமயமான. **பாலன்** - பாலகனாகிய முருகனை. **இடலால்** - ஈந்ததாலும். **கை** - வெறுக்கத்தகுந்த. **யமகரத்து அங்கம்** - நமன் கையில் சேரும் கன்ம சரீரத்தை. **மாற்றலின்** - நீக்குதலாலும். **ஒல்கும்** - நாணத்துடன் கூடிய. **பங்கம்** - சிறுமையை. **இன்** - இனிதாகிய. **தாரு** - கற்பக விருட்சமும் ஏற்கும்படி. **மேற்கை கொளலால்** - மேலான திருக்கரங்களைக் கொண்டுள்ளதாலும். **காணும்** - நோக்குகின்ற. **அச்சம்** - பயத்தை விளைவிக்கின்ற. **திருப்பார்வை** - திருநோக்கமானது. **பவராசி** - பிறவிகளாகிய. **அங்கு** - அவ்விடத்திற்செலுத்தும். **அட்டம்** - புரியட்டகாயத்தை. **கெடுப்பு** - கெடும்படி செய்து. **அமைகையால்** - நிலைபெறுதலாலும்

**(சந்திரன் பகுதி)**

மையகம் கோவினில் இரட்டை அங்கு அங்கு ஊர்ந்து
வண் கடகம் ஏறுகையினால்,
வன் மடக்கல் இவரலால், எண் அணிக் கன்னி
வாசத்தில் அத்தம் ஆர்ந்த
செய்ய தூக்கு ஏற்று, ஆல வால மறை அவ் விருச் -
சிகத்து இசைவின் ஆவல் பெறலால்,
சேய் என்ன ஆண்டளப்பற்கு முன் ஓதும் உப -
தேச வில் பாலன் இடலால்,

கைய மகரத்து அங்கம் ஆற்றலின், ஒல் கும்பம்
கவின்று ஆரும் ஏற்கை கொளலால்,
காணும் மச்சத்து இருப்பு ஆர் வைபவ ராசி அம்
கண்(த்) தங்கு எடுப்பு அமைகையால்.....

**மையகம்** - மேடத்தினும். **கோவினில்** - இடபத்திலும். **இரட்டை** - மிதுனத்திலுமாக. **அங்கங்கு ஊர்ந்து** - அவ்வவ்விடங்களிலும் இவர்ந்து நீங்கி. **வண்கடகம் ஏறுகையினுல்** - ஆட்சி வளம் இசைந்த கடகத்தில் ஏறுவதாலும். **வன்** - கொடுமையுள்ள. **மடங்கல்** - சிங்கத்தின் மேல். **இவரலால்** - மேற்கொள்ளலாலும். **எண்** - இலக்கமாகிய. **அணி** - வரிசையமைந்த. **கன்னி வாசத்தில்** - கன்னிராசிவசிப்பாலும். **அத்தமார்ந்த** - கையிலமைந்த. **செய்ய** -மேலான. **தூக்கு** - துலாராசியை. **ஏற்று** - விரும்பி. **ஆல** - விடத்தை. **வால** - வாலினிடத்து. **மறை** - ஒளித்துள்ள. **அ** - அந்த. **விருச்சிகத்திசைவின்** - (தன்னுடலிலுள்ள அமுத நிறைவால்) விருச்சிகராசியில். **ஆவல்பெறலால்** - வெற்றிக்கொண்டமைய விரும்புவதாலும். **சேய் என்ன** - **குமாரனென்று ஆண்டளப்பற்கு** - வியாழபகவானுக்கு. **முன்ஓதும்** - முன்னையநாளெனச் சொல்லும். **விற்பாலன்** - புலமைச் சிறப்பிசைந்த புதனை. **இடலால்** - ஈந்ததாலும். **கைய** - ஒழுக்கமைந்த. **மகரத்து அங்கம் ஆற்றலின்** - மகரராசியில் மெய் இளைப்பாறுதலாலும். **ஒல்** - பொருந்திய. **கும்பம் கவின்று** - கும்பராசியில் விளங்கி, **ஆரும் ஏற்கைகொளலால்** - பகையின்றி யாவர்களாலும் ஏற்றுக்கொள்வதாலும். **காணும்** - இமையற்ற கண்ணமைந்த. **மச்சத்து** - மீனராசியினிடத்து. **இருப்பு ஆர்** - தங்குதல் பொருந்திய. **வைபவ ராசி** - மகத்துவக் கூட்டங்களுன். **அம்** - அழகிய. **கண்** - இடந்தோறும். **தங்கு** - மாறுதநிலையுடன் இருக்கும். **எடுப்பு** - மேன்மை. **அமைகையால்** - இசைதலாலும்.

***இரட்டை அங்கம்*** *- மாதொருபாக வடிவம்.* ***புரி அட்டகாயம்*** *- ஒலி, ஸ்பர்ஸம், வடிவம், சுவை, மணம் என்னும் தன்மாத்திரங்கள் ஐந்தையும் மனம், புத்தி, அகங்காரம் ஆகிய கரணங்கள் மூன்றையும் மட்டும் கொண்ட நுண்ணுடல். ஆட்சி வளம் என்றது சோதிடத்தின்படி கடகராசி சந்திரனுக்குச் சொந்தவீடு ஆதலால். விருச்சிகம் தேள்.*

மாதம் ஒருநாள் புரணம் ஆதல் உற, மிக்க பிர -
மாதம் உளை நீ; இவள் அருள்
மன்னு பரிபூரணன் உள் உன்னும் விரிகாரண மெய்
மாட்சி நிறை காட்சி உடையாள்;
கோது அமையும் உனது சுதை கொண்டவர்கள் ஒண்தொடியர்
குற்றேவலாளர்; இவள் கண்
கொண்டபேர் தம் கண் எதிர் கண்ட பேர்க்கு உயர்வீடு
கொள்ளை கொள நல்க வல்லோர்;
சீதள இயல் கலைகள் ஆதவனிடத்து ஒரு
தினத்து அதிகம் ஏற்க முடியாச்
சிறியை நீ; தாய் இவள் தன் நறிய காதணி கோடி
திங்கள் ஓர் தினத்து ஆக்கும்; ஆல்.
ஆதலின், உனைக் கூவல் மேதகைய கருணையால்;
அம்புலீ! ஆடவாவே!
ஆரூரர் பன் இசைகொள் பேரூரர் பன்னியுடன்
அம்புலி! ஆடவாவே! 4

**புரணம் ஆதல்** - முழுமையடைதல். **பிரமாதம்** - இன்னல். **உளை** - உடையவனாக இருக்கிறாய். **பரிபூரணன்** - சிவபிரான். **உள் உன்னும்** - நெஞ்சில் நினைத்துக் கொண்டிருக்கும். **விரி காரண** - உலகங்கள் தோன்றி விரிவதற்குக் காரணம் ஆகிய. **மெய்** - நிலையான. **கோது** - குற்றம். **சுதை** - அமுத கிரணங்களை. **ஒண்தொடியர்** - ஒளிரும் வளையல்களை அணிந்த மகளிரின். குற்றேவலாளர் என்றது காம மிகுதியால் பெண்டிற்கேற்ப ஒழுகுபவர் என்றபடி. **கண்கொண்ட பேர்** - அருள் நோக்கம் பெற்ற அடியார்கள். **சீதள இயல் கலைகள்** - குளிர்ந்த தன்மையுள்ள உடற்பகுதிகளை. **ஆதவனிடத்து** - சூரியனிடமிருந்து. **ஒரு தினத்து** - அமாவாசை ஆகிய ஒரு நாளில். சந்திரனின் கலைகள் இல்லாதது காரணம். **நறிய** - சிறப்பு வாய்ந்த. காதணிச் செய்தி அபிராமிபட்டர் வரலாற்றை நினைந்து கூறியது. **ஆல் அசை. கூவல்** - அழைப்பது.

மங்கை இவள் சிறிய ஒரு மகன் அடிமையாம் முனிவன்
மலை எச்சில் உண்டு, மயிலின்
வாய் எச்சில் உமிழ் எச்சில் ஆய், மாரவேள் நாணி
வண்டு எச்சில் அண்டு எச்சில் ஆம்
நங்கையர்தம் இதழ் எச்சில் உண்ட காமுகர் வாய்கொள்
நா எச்சில் நிந்தை கொண்டே,
ஞாயிறு உமிழ் எச்சிலாய், அவன் உண்ட மிகை எச்சில்
நன்கு அருந்தித் திரிவை நீ;
சங்கை அற ஓதுநர்தம் வாய் எச்சில் எய்தியவை
சதுர் மறைகள் என அவற்றின்
தக்க முடிமேல் குலவு முக்கணன் உளத்து ஊறு
தண் அமுத வண்ணம் அமைவாள்;
அங்கையின் அழைத்திடும் முன் இங்கு அணைதல் மிக்க நலம்;
அம்புலீ! ஆடவாவே!
ஆரூரர் பன் இசைகொள் பேரூரர் பன்னியுடன்
அம்புலீ! ஆடவாவே! 5

**மகன்** - முருகப்பெருமான். **முனிவன்** - அகத்தியர். **மலை எச்சில்** - பொதிகையிலிருந்து வரும் தென்றல். பாம்பு காற்றை உண்ணும் என்பது மரபு. அது மயிலால் கவ்வப் படுதலால் மயிலின் வாய் எச்சில் ஆகிறது. **உமிழ் எச்சில்** - இராகு கேது எனும் இரு பாம்புகளால் விழுங்கப்பட்டு உமிழப்படுவதால் சந்திரன் பாம்புகளின் எச்சில் ஆகிறது. **மாரவேள் நாணி வண்டு எச்சில் அண்டு** - மன்மதனுடைய கரும்பு வில்லின் நாண் ஆகும் வண்டுகளின் வாய் எச்சில் ஆகிய தேனுக்கு இணையாகிய. **இதழ் எச்சில்** - உமிழ் நீர். காமுகர் வாய்கொள் நா. **எச்சில் நிந்தை கொண்டே** - காமிகளின் எச்சிலாகிய வசைகளைப் பெற்று. காதலர் பிரிவாற்றாமையால் சந்திரனை நிந்திப்பது மதியைப்பழித்தல் (சந்திரோபாலம்பனம்) என்னும் அகத்துறை. ஞாயிறு சந்திரனை விழுங்கியபின் வெளியிடுவதாகக் கற்பிப்பர். **மிகை எச்சில் அருந்தி** - சூரிய கிரணங்களைப் பிரதிபலிப்பது எச்சில் அருந்துவதைப் போன்றது. **சங்கை அற** - ஐயம் இல்லாமல். **சதுர் மறைகள்** - நான்கு வேதங்கள். **முடிமேல்** - வேதாந்தத்தில். **தண்** - குளிர்ந்த. **அமுத வண்ணம்** - அமிர்தத்தின் தகைமை. **அங்கையின்** - கைகளால்.

## தானம்

(பன்னிரு சீர் விருத்தம்)

தொடுத்த புகழ் இந்திரன் ஆம் உன்
தோழன், திரிலோகன், கரிகால்
சோழன், கன்னி எழுவர், குசத்
துவசன், அடல் நீள் முசுகுந்தன்,
கடுத்த பவ அங்கிரன், சுமதி,
காலவாதி முனிவர் பல்லோர்
கடத்தற்கு அரிய பவம் கடத்தி,
கடத்தில் வருந்தாது இரும் கதியில்
விடுத்த சரிதம், எண் இலவா
விளைந்த பிறவாநெறிப் புகழ் யான்
விண்டு முடிவதோ? அயனும்
விண்டும் விண்டு முடியா; நிற்கு
அடுத்த இரும் பாக்கியம் என்னே!
ஆட வாராய் அம்புலியே!
அணிஆர் பேரூர் மரகத்தோடு
ஆட வாராய் அம்புலியே! 6

**தொடுத்த** - ஈட்டப்பெற்ற. உன் என்றது சந்திரனின் என நின்றது. **திரிலோகன்** - இப்பெயருடைய ஒரு சோழமன்னன். **கன்னி எழுவர்** - இமய மலையில் உமாதேவியாரின் சேடியராக இருந்து ஒரு சாபத்தால் திருவரங்கத்தில் மானிட மகளிராகப் பிறந்த எழுவர். **குசத்துவசன்** - ஓர் அரசன். **அடல் நீள் முசுகுந்தன்** - வலிமை மிக்க முசுகுந்த சக்கரவர்த்தி. **கடுத்த பவ அங்கிரன்** - கொடிய பாவங்களைச் செய்த அங்கிரன் என்னும் வங்க நாட்டு வேடன். **சுமதி** - மகாராட்டிரத்தைச் சேர்ந்த ஓர் அந்தணன். **காலவாதி** - காலவ ஆதி. காலவன் முதலிய. **பவம்** - பிறவி. **கடத்தில்** - வேறு உடல் எடுத்து, பிறந்து. **இரும் கதி** - பெரிய நிலை, வீடு. இங்கு கூறப்பட்ட வர்களின் வரலாறுகள் யாவும் கவிரட்சக கச்சியப்ப முனிவரால் இயற்றப்பட்டுள்ள திருப்பேரூர்த் தலபுராணத்தில் விரிவாக உள்ளன. **எண் இலவா** - கணக்கற்று. **விண்டு** - சொல்லி. **விண்டும்** - திருமாலும். நிற்கு எனச் சந்திரன் முன்னிலைப்படுத்தப்படுகிறான். **இரும்** - பெரிய.

உன்னோடு உலவும் ஒரு கதிருக்கு
உடையாப் பெரும் பேறு உற்றிடலாம்;
உரகத் துணை உன்பேர் உரைக்கில்
ஓடி ஒளிக்கும் உரம் பெறலாம்;
பொன்னோடு இயல் வாணியும் பழிச்சும்
புகழ்ச் சீர் அமைந்து, எங்கணும், எவரும்
போற்றி வணங்கப் பெற்றிடலாம்;
பொன்றல் பிறத்தல் இன்றி, ஒளிர்
மின்னோ என்னும் பிரணவ மா
மேனி அமைந்து, எண் அரு சித்தி
விளையாட்டு இயற்றி, பலரொடு அருள்
வீட்டுள் புகலும் ஆம்; விருந்து என்று
அன்னோ! அன்னை கூவினள்; ஐது
ஆட வாராய் அம்புலியே!
அணி ஆர் பேரூர் மரகத்தோடு
ஆட வாராய் அம்புலியே! 7

**ஒரு கதிருக்கு** - ஒப்பற்ற சூரியனுக்கு. **உடையா** - தோற்றுப்போகாத. **உரகத்துணை** - இராகு, கேது ஆகிய இரு பாம்புகள். **உரம்** - வலிமை. **பொன்னொடு** - திருமகளுடன். **வாணியும்** - கலைமகளும். **பழிச்சும்** - புகழ்கின்ற. **பொன்றல்** - இறத்தல். **மின்னோ என்னும்** - மின்னலோ எனவியக்கும்படி. **பிரணவ மாமேனி** - மந்திர சரீரம், இடைவிடாத மந்திர பாவனையால் உயிர் பரு உடலினின்றும் நீங்கி மந்திர உடலைப் பற்றி அதுவேயாக நிற்கும். **"மலம் அடைய மாயாதனு விளையும்; அந்த மலம் இடையக் காயம் மனு ஆம்"** என்பது உபாயநிட்டை வெண்பா *(39)*. அரு எண் சித்தி என மாறுக, அரிய எட்டுச் சித்திகள். **விருந்து என்று** - நீ புதுமையாக இருக்கிறாய் எனக்கருதி. **அன்னோ** - வியப்பிடைச்சொல். **அன்னை** - பச்சைநாயகி. **ஐது** - விரைவாக.

தண்டம்

(வண்ண விருத்தம்)

தனதன தானா தனதன தய்யன தானா தந்தனனா

கலைமதியே! நீ நிலைமதி எய்துபு
காஂணாது ஒன்றையுமே
கதிகொளல் ஆனாய்; விதியினை உள் உணர் -
கால், யாரும் கவல்வார்;
விலை மதியா மா மணி நிகர் கௌரி உன்
மீது ஆகும் சினம் ஆர்
விளைவு அவம் ஆமோ? சிறிது உளம் உள்ளலை;
வீறு ஆர் பொன்கிரி நீள்.
சிலை மதியாய்; நாணுடன் உறுதையலர்
சேர் நாணும் குறியாய்;
திரு அணி ஆர் மா தனமிசை வெள்ளம் ஒல்
தீரா அம்பு அறியாய்;
மலை மதி ஆகேல்; மலை அருள் செல்விமுன்,
வா வா அம்புலியே!
மகிமைகொள் பேரூர் மரகதவல்லிமுன்
வா வா அம்புலியே! 8

***கலை மதி*** - பதினாறு பகுதிகளை (கலை) உடைய சந்திரன். **நிலைமதி** - அழியாத அறிவு. **கதிகொளல்** - வானில் இயங்கிக் கொண்டிருத்தல். **விதியினை** - (தக்கனால் சாபம் பெற்றுத் தேய்ந்தும் வளரும் வருந்துகின்ற) உன்ஊழ் வினையை. **கவல்வார்** - வருந்துவார்கள். **கௌரி** - பச்சை நாயகி. **அவம் ஆமோ** - வீணாகி விடுமோ, வீணாகாது, உறுதியாகத் தீமை பயக்கும் என்றபடி. சிறிதும் என உம்மை விரிக்க. **உள்ளலை** - நினைக்காதவனாக இருக்கிறாயே. **வீறு ஆர்** - பெருமை பொருந்திய. **பொன்கிரி** - பிநாகமலை ஆகிய. **நீள் சிலை** - பெரியவில்லை. **மதியாய்** - (பெரிய மலையே வில்லாக வளைக்கப்பட்டுவிட்டவலிமையை) கருத மறுக்கிறாய். **நாணுடன்** - சிவபெருமானின் மேருவில்லின் நாண் ஆகிய வாசுகிப் பாம்பின் வலிமையோடு. **உறுதையலர் சேர் நாணும்** - உன் மனைவியர்களின் திருமாங்கல்யத்தையும். **குறியாய்** - (நிலைத்திருக்க வேண்டும் என) மதிக்கின்றாய் இல்லை. **திரு**

**அணி ஆர் மா தனம் இசை வெள்ளம் ஒல் தீரா அம்பு அறியாய்** - 1. திருமகளின் அணிகலன்கள் நிறைந்த பெரிய நகில்களிற்பொருந்துகின்ற கடல்வண்ணன் ஆகிய திருமால் சிவனாருக்குப் பொருத்தமானதும் நீங்காததும் ஆகிய கணை ஆக இருப்பதையும் உணரவில்லை. 2. **திரு** - உன்னால் தாலி கட்டப்பட்டவர்கள் ஆகிய (திருப்பூட்டப்பெற்ற). **அணியார்** - வரிசையானவர்களின் (27 விண்மீன்கள்). **மாதன மிசை** - தனபாரங்களின் மேல். **வெள்ளம் ஒல்** - வெள்ளமாக அடைகின்ற. **தீரா அம்பு** - நீங்காத கண்ணீரை. **அறியாய்** - தெரிந்து கொள்ளாமல் இருக்கிறாய். இறைவியின் பெருமையையும் நீ இறந்துபடுவாய் என்பதையும் உணராமல் இருக்கிறாயே என இரங்கியவாறு. **மலை மதி** - சஞ்சலம் கொண்ட அறிவினை உடையவன்.

**தத்தன தானன தனதன தய்யன தானா தந்தனனா**

**மித்திரன் நீள்கதிர் தனது இள மெய்யிடை**
**மேல் நாள் ஒன்றிடுகால்**
**மெய்ச் சிறை சேர் கொடியான், உயிர் கொல் அடல்**
**வீறு ஆர் ஒன்பது பேர்**
**சத்திதன் வார் கழல் மணி தருதையலர்**
**தாம் ஈகும் சுதர், ஓர்**
**சற்று அறிவார் எனில், உனை அவர் செய் கதி –**
**தான் ஆர் கண்டு அமைவார்?**
**கத்தி உலாம் மகமறி மறிவல்லமை**
**காணா நின்றனையே?**
**கற்றவர் தானவன் என இடும் ஓர் பெயர்**
**காவா ஒன்றின் மெய் நீ**
**வைத்து இலகாய்! நிச நலம் உற வல்லையில்**
**வா வா அம்புலியே!**
**மைப் பொலி பேரையின் மரகத வல்லிமுன்!**
**வா வா அம்புலியே!** 9

**மித்திரன்** - சூரியன். **கதிர்** - கிரணம். **மெய்யிடை** - உடலில். **மேல்நாள்** - முற்காலத்தில். கொடியோன் என்றது பானுகோபனை. **அடல்வீறு** - வலிமையின் மிகுதி. **ஒன்பது**

**பேர்** - நவ வீரர்கள். **சத்திதன்** - உமாதேவியின். **கழல்மணி** - காற் சிலம்பின் நவரத்தினங்கள். **சுதர்** - மைந்தர். **அறிவார் எனில்** - (அம்மை அழைத்தும் நீ வரவில்லை என்பதைத்) தெரிந்து கொண்டால். **ஆர் கண்டு அமைவார்** - யாருக்குத் தெரியும். கத்தி - சத்தமிட்டுக் கொண்டு. **உலாம்** - உலாவிய. **மகமறி** - நாரதரின் வேள்வியில் தோன்றிய செம்மறி ஆட்டை. **மறி வல்லமை** - தடுத்து நிறுத்திய ஆற்றல். **காணா நின்றனையே** - பார்த்தாய் அல்லவா. சந்திரனுக்குத் தானவன் என்றும் ஒரு பெயர் உண்டு. அச்சொல் அரக்கரையும் குறிக்கும். தேவிக்கு அடங்காமல் நீ தானவன் என்ற பெயரைக் காப்பாற்றி விடாதே என்றபடி. **இலகாய்** - இருக்காதே. **வல்லையில்** - விரைவில். **மை பொலி** - மேகங்கள் நிறைந்த.

**தந்தன தானா தனதன தய்யன தானா தந்தனனா**

**கங்குலை நேர் ஓதியின் மிசை மல்கு ஒளி**
**கால் பூண் ஒன்றுகை நேர்**
**கண் பெறு காது ஆர் அரவு என உள்ளுபு**
**காண், ஏய்கின்றிலன்; நீ**
**தங்கு உயர்வு ஓர்வான் எனில், விளி அல்லல் எய் -**
**தாது ஏய் பண்பன் என் நீர்**
**சங்கரிபால் ஓதினம்; இனம் உய் உன் ஓர்**
**சார்பா நின்றனம் யாம்;**
**இங்கு வராயேல், மதி என ஓல் பெயர்**
**ஏர்ஆரும் சசி நீர்**
**இசைதரும்; ஓகோ! அது பெறும் வெய்யவர்**
**யாரே உய்ந்தனர் காண்?**
**மங்குதியேல் ஏகு; இலது எனில், ஐயைமுன்**
**வா வா அம்புலியே!**
**மஞ்சுள பேரூர் மரகத வல்லிமுன்**
**வா வா அம்புலியே!** 10

**கங்குலை நேர்** - இருளைப் போன்ற. **ஓதியின் மிசை** - கூந்தலின் கண். **ஒளிகால்** - பிரகாசிக்கின்ற. பூண் என்றது நாகர் என வழங்குகின்ற சடைவில்லை வகையை. இது பாம்பின் தலையாகவும் பின்னல் உடலாகவும் காட்சியளிப்பதால் சந்திரன் தேவியை நெருங்க அஞ்சுகின்ற..ன் என்றவாறு.

**"சடை தனக்கு ஒவா மாசுணம் எனக் கருதியோ"** என்பார் மகாவித்துவான். (அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழ் - அம்புலி. 10) **ஒன்றுகை** - பொருந்தியிருத்தல். கண்நேர்பெறு என மாறுக. **காது ஆர் அரவு** - கொல்லும் குணத்தை உடைய பாம்பு, இராகு கேதுக்கள். **ஏய்கின்றிலன்** - வரவில்லை. **நீ தங்கு உயர்வு** - நீங்கள் இருக்கின்ற மேலான நிலை. **விளி அல்லல்** - அழைப்பதாகிய துன்பம். **என் நீர்** - என்னும் பண்பை. **இனம்** - இன்னமும். **உய் உன்** - தப்பிப்பதற்குரிய வாய்ப்புடைய உந்தனுடைய. **மதி என** - அறிவு என்னும் பொருள் தரும். **சசி** - முயல் வடிவக் களங்கத்தை உடைய சந்திரன். இது ஒழுக்கத்தில் கறை உடையவன் எனப்பொருள்படும். இது அறிவுடைமைக்கு நேர் முரணானது. அது என்றது ஒழுக்கக்குறைவைச் சுட்டியது. **வெய்யவர்** - கொடியவர். **மங்குதியேல்** - நிலையழிந்து போகவேண்டும் எனில், உறுதிபற்றிச் செயல் முடிவுற்றதாகக் கூறினார். **ஐயை** - பார்வதி. **மஞ்சுள** - அழகிய.

## 8. அம்மானைப் பருவம்

(இரட்டையாசிரிய விருத்தம்)

சத்தி அங்கை விரல் உதித்து இயல் கங்கை, விண்
சம்பு முடிமேல் வலிந்து
தாங்கு புகழ் தாங்கியது; நாம் கருவம் ஓங்கி அது
தரிசனமும் எய்திலேம் என்று,
ஒத்து இயல் பதுமாதனத்தன் பெரும் தவம்
உஞற்று மெய்ப் பாக்கியத்தால்,
உன் கரத்தில் பலபல அன்ன வடிவம் கொண்டு
உதித்து, முடி கண்டு போற்றி,
மெத்து இயல் உவப்பில், மிக வந்து வந்து, என்னைக் கை -
விட்டிடேல் என்று வேண்டும்
விதம் என்றும், நின்கரப் பதுமநிதி போல் சங்கும்
மேவ ஒன்றிடுதல் போலும்,
அத்திபொலி பேரை மரகத அம்மை! நித்திலத்து
அம்மானை ஆடியருளே!
அம்மானை ஆர் கைபொலி அம்மானை ஆர் கௌரி!
அம்மானை ஆடி யருளே! 1

தேவியின் கையில் கங்கை உதித்ததாக ஒரு வரலாறு. **"பங்குஉறை உமையவள் பாணியின் வரு கங்கை"** (1-11-57) என்பது கந்தபுராணம். **விண்** - ஆகாயத்தில். **சம்பு** - சிவபெருமான். தாங்கு புகழ் தாங்கப்பட்ட இசை என பிறவினைப் பொருளில் ஆட்சி. நாம் என்றது பிரமனைக் குறித்து நின்றது. அது என்றது சிவபிரானின் முடியை. ஒத்து இயல் எனற்பாலது எதுகை நோக்கிக் குறுக்கல் விகாரம் பெற்றது, வேதங்களோடு தொடர்புடைய. **பதுமாதனத்தன்** - தாமரையில் அமர்ந்துள்ள பிரமன். **அன்னவடிவம்** - அன்னப்பறவையின் உருவம். **மெத்து இயல்** - மிகுந்த. **விதம்** - வகை. **பதுமநிதி** - நவநிதிகளுள் ஒன்று, தாமரை வடிவில் உள்ளது, தேவியின் கைக்கு உவமை. **சங்கும்** - மற்றொரு நிதி ஆகிய சங்க நிதியும், சங்கினாலான வளையல்கள். **அத்தி பொலி** - நீர் நிலைகள் நிறைந்த. **நித்திலத்து** - முத்துகளாகிய அல்லது முத்துகளால் செய்யப்பட்ட. **அ மானை ஆர் கைபொலி அம்மானை ஆர்** - (அந்த அல்லது) அழகிய மானைப் பிடித்துள்ள கரங்கள் விளங்குகின்ற தலைவர் ஆகிய சிவபெருமானை விரும்புகின்ற. **கௌரி** - பார்வதி.

**குறிப்பு :** பச்சைநாயகியின் கையில் முத்தாலாகிய அம்மானைக் காய்கள் மேலும் கீழும் ஆடுவது அன்ன வடிவெடுத்துக்கொண்டு பிரமன் வேண்டிக் கொள்வதைப்போல உள்ளது என்றவாறு.

**மது வாரிசச் சரவணத் தடத்தில், திகழ் கு -**
**மாரன் உரு ஆறும் ஒன்றா**
**வண் கரத்தால் அன்னை செய்திடக் கண்டு, தன் ஓர்**
**வல்லமை குகன் காட்டுவான்,**
**கதும் எனப் பல வடிவம் ஒன்றி, நின் கைத்தலக் -**
**கண் வந்து வீழ்ந்து எழுதல் போல்,**
**கமலை அலகிலரை முத்திப்பதிப் புறம் அமை**
**கணக்கில், உன் காமர் பொன்தாள்**
**பதுமராகம் தந்து எம் ஆவி ஏற்பதும், அரா -**
**கத்தில் விளை பதுமர் ஆகும்**
**பதுமர் ஆகம் கெட பாற்ற ஞானத்து இளம்**
**பரிதிகளை வீசல் போலும்,**

அதுல பேரூர் மரகதம்! பதுமராகத்தின்
அம்மானை ஆடியருளே!
அம் மானை ஆர் கை பொலி அம்மானை ஆர் கவுரி!
அம்மானை ஆடியருளே! 2

**மது வாரிச** - தேன் நிறைந்த தாமரை மலர்கள் நிறைந்த. **குமரன் உரு** - முருகப் பெருமானின் (குழந்தை) வடிவங்கள். **வல்லமை** - ஆற்றலை. **காட்டுவான்** - காண்பிப்பதற்காக. **கதும் என** - விரைவாக. **கைத்தலக்கண்** - கையில். **எழுதல்போல்** - எழுவதைப் போலவும். **கமலை** - திருமகளிர். **அலகிலரை** - கணக்கற்றவர்களை. **முத்திப்பதிப்புறம்** - மோட்ச வீடாகிய இடம். **கணக்கில்** - போலவும், பேச்சுவழக்கு. **காமர்** - அழகிய. **பதுமராகம்** - செம்மணி. **அராகத்தில் விளை** - ஆன்மாக்களின் ஆசைகளினால் ஏற்படுவதாகிய. **பதுமர் ஆகும்** - பல கோடிக்கணக்கானவர்களாக. **பதுமர் ஆகம் கெடப்பாற்ற** - இல்லாமல் அழியும்படி, பற்பல பிறவிகள் நீங்க என்பது கருத்து. அதுல - இணையற்ற.

தொண்டர் இதயக் கமலம் ஒன்றி, மும்மலப் பகை
தொகுத்து அமைத்துள சஞ்சிதம்
தொல்லை ஆகாமிய பிராத்தம் அற, உண்டையில்
சேராது எடுத்து எறிதல் போல்,
அண்ட வகை தோறும் இயல் இந்திரர்கள் மால் என்று
அடைந்துளார் பழி பாவம் முற்று
அரை நொடியில் நீற்றி, அவர் ஆட்சி பொலி உலகத்து
அமைத் திடுதலில், கருணையார்
கண் தழை சிவப்பினில் காளி படை ஆதிய
கணம் தோன்றி ஆடல் செயலில்,
கங்குல் உரு மங்கை அவிர் செங்கதிரிடம் கதிகொள்
காட்சி போலும், தருவிண் ஆர்
அண்டர் புகழ் பேரையில் பச்சை நாயகி! நீல
அம்மானை ஆடியருளே!
அம்மானை ஆர் கை பொலி அம்மானை ஆர் கவுரி!
அம்மானை ஆடியருளே! 3

**ஒன்றி** - எழுந்தருளியிருந்து. **சஞ்சிதம்** - மொத்தச் சேமிப்பாகிய இருவினைகள். **தொல்லை** - வருத்தப்படுவதற்கு உரிய. **ஆகாமிய பிராத்தம்** - இப்பிறவியில் செய்யப்பட்டு பிறகு உரிய காலத்தில் பயன்தர உள்ள ஆகாமியம் என்னும் வினையும், எடுத்த பிறப்பில் துய்த்துக் கழிக்க வேண்டியது ஆகிய பிராரப்த கன்மமும், உம்மைத்தொகை. **அற** - நீங்கும்படி. உண்டையில் - (அவ்வினைகளை) உருண்டைகளைப் போல. **சேராது** - அடியார்தம் ஆன்மாவில் ஒட்டாமல். **அண்டவகை** - பல உலகங்கள். **மால்** - விட்டுணு. **நீற்றி** - சாம்பலாக்கி. அவர் என்றது இந்திரன், திருமால் முதலிய தேவர்களை. பாவங்களின் நிறம் கருப்பு. இந்திரன், திருமால் இருவரும் கரியவர். **கண் தழை சிவப்பினில்** - கண்ணில் தோன்றும் செம்மை நிறத்தைப் போன்றும். **காளி படை ஆதிய கணம்** - காளி தேவியின் சேனை முதலிய கரிய கூட்டங்கள். **ஆடல் செயலில்** - குதித்து விளையாடுவதைப் போல. **கங்குல் உரு மங்கை** - இரவு வடிவப் பெண். **செங்கதிரிடம்** - சூரியனின்பால். **கதி கொள்** - செல்கின்ற. **தருவின் ஆர் அண்டர்** - கற்பக மரத்திற்கு இடமாகிய வானுலகத்திற்குரிய தேவர்கள்.

**குறிப்புரை :** பச்சைநாயகியின் கைகளிலிருந்து நீல அம்மானைக் காய்கள் மேல் நோக்கிச் செல்லுங்காட்சி அடியார்களின் மும்மலங்களை ஒரு உருண்டையாக்கி எறிவதைப் போன்றும், கரிய நிறம் வாய்ந்த இந்திரன், திருமால் ஆகியவர்களின் இடையூறுகளை விலக்கித் தத்தம் உலகங்களில் நிறுவுதல் போலவும், காளியின் கரிய படைவீரர்கள் குதித்து விளையாடுதல் போலவும், கரிய இரவுப் பெண் சூரியனை நோக்கிச் செல்வதைப் போலவும் உள்ளது என்பது கருத்து.

செங்கதிர்ச் செல்வன் உறு பாகனையும் ஆழி அம்
தேர் வலித்திடும் அம்பரத்
திரைநிகர் குதிரைகளையும் எங்கு என்று தேடவும்,
செவ்வேள் புயக் கிளியுடன்

பைங்கலப மயிலினைத் துருவவும், கிளியான
பரியொடு அளிஆன நாரிப்
பதியை அவன் நாரி வில்லுடன் நாடி வாட, உயர்
பாக சாதனன் நகரினில்
பொங்கம் ஆர் பஞ்சதருவே பஞ்ச தரு எனப்
போக, மெய்ப் போகர் பர மெய்ப்
போகர் ஆகும் காட்சி மாட்சி பெற, உள்ளம்
பொருந்தும் மலம் மங்க, மலம் மாற்று
அம்கமல வாவி ஆர் பேரை மரகதம்! அரி செய்
அம்மானை ஆடியருளே!
அம் மானை ஆர் கைபொலி அம்மானை ஆர் கவுரி!
அம்மானை ஆடியருளே! 4

**செங்கதிர்ச் செல்வன்** - சூரியன். **பாகன்** - அவனுடைய தேரோட்டியாகிய அருணன். **ஆழி** - உறுதியான சக்கரங்களை உடைய. **வலித்திடும்** - இழுக்கின்ற. **அம்பரத்திரை நிகர்** - ஆகாயத்தின் இடுதிரை போன்ற வானவில்லைப் போன்ற (ஏழு நிறங்களை உடைய), அம்பரத்திரை உவம ஆகுபெயர். **பைங்கலப** - பசிய தோகைகளை உடைய. **துருவவும்** - தேடவும். **பரி** - வாகனம். **அளி** - வண்டுகள். **நாரிப்பதியை** - நாணை உடைய தன் கணவனாகிய காமனை. **அவன் நாரி** - அவன் மனைவி ஆகிய இரதி. **வில்லுடன்** - கரும்பு வில்லுடன், இது பச்சை. **பாகசாதனன் நகர்** - இந்திரனின் தலைநகர் ஆகிய அமராவதி. **பொங்கம் ஆர்** - மேலான. **பஞ்ச தருவே** - கற்பகம் முதலிய ஐந்து தெய்வீக மரங்களே. **பஞ்ச தரு என** - இல்லாத மரங்கள் என்று. **மெய்ப்போகர்** - உடலின் ஐம்புலன்களால் இன்பம் அனுபவிக்கும் எல்லாரும். **பரமெய்ப் போகர்** - மேலானதும் நிலையானதுமாகிய பேரின்ப நுகர்ச்சி உடையவர்கள். **மாட்சி பெற** - சிறக்க, காணப்பட என்பது கருத்து. **மலம் மங்க** - பாவங்கள் குறைய. **மலம் மாற்று** - அழுக்கை அகற்றுகின்ற. **அம்** - அழகிய. **கமல வாவி** - தாமரைக் குளம். மரகதம் அண்மைவிளி. **அரி செய்** - பசைவண்ண மரகதத்தாலான.

தருவானமேல் குலவு சுரர் இவர்கள் நரர் இவர்கள்
தாம் எனத் தெரிதராதே
தலை மயங்கப் புறத்து ஒன்றல்போல், சூக்குமத்
தன் மையும் துலை ஒத்து, நீள்
இரு வான முத்தி அருள் பிறவா நெறித் தகைகொடு
இரவு பகல் அறியாதும், வாள்
இரவி என்று இயல் கமலம் மலர, மதி என்று ஆம்பல்
இனம் மலர, இன்ப துன்பத்து
உரு ஆன மெய் தரும் பேதமைகள் முற்றும் எங்கு
ஓடிய கொலோ? என்று விண்டு
உள் ஊறும் ஆனந்தர் ஆகிட, செம்மணியில்
ஓங்கு வெண் நித்திலத்தில்
அரு வான கம்மியன் பண்ணுஇயல் கண்ணியத்து
அம்மானை ஆடியருளே!
அம் மானை ஆர் கை பொலி அம்மானை ஆர் கவுரி!
அம்மானை ஆடியருளே! 5

**தருவானமேல் குலவு சுரர்** - கற்பகத்தை உடைய விண்ணுலகில் வாழ்கின்ற தேவர்கள். **நரர்** - நில உல மக்கள். **தெரிதராதே** - பிரித்தறிய முடியாமல். **தலை மயங்க** - ஒருவருக்கொருவர் தோற்றத்தில் குழம்பச் செய்யும். **புறத்து ஒன்றல் போல்** - (மனிதர்கள் தெய்வவடிவம் பெற்று) உடலளவில் ஒன்றாக இருப்பதைப் போன்று. திருப்பேரூரை அடைபவர்கள் அனைவரும் நல்வினைப் பயனாகிய சுவர்க்கத்தைப் பெற்றுத் தேவர்களைப் போல விளங்குகின்றனர் என்றவாறு. **சூக்குமத்தன்மையும்** - நுட்பமானதாகிய மெய்யறிவையும்பெற்று. **துலையொத்து** - தராசிலிட்டதுபோல் நல்வினைத் தீவினைப் பயன்கள் ஒத்து, அஃதாவது இருவினையொப்பு. **நீள் இரு வான** - பெருமை மிக்க, ஒரு பொருட்பன்மொழி. இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் ஆகியன வீட்டுப்பேற்றின் படிநிலைகள். இரவு பகல் என்பன சைவத்தில் முறையே கேவல சகல நிலைகளின் குறியீடு. மதி - சந்திரன். **பேதமைகள்** - அறியாமைகள். **விண்டு** - கூறி. **செம்மணி** - மாணிக்கம். **நித்திலம்** - முத்து. **அரு** - கடவுள் தன்மை வாய்ந்த. **வான கம்மியன்** - தேவதச்சன், விசுவகர்மா.

(பன்னிரு சீர் விருத்தம்)

இசையும் உயிர்கள் திரி புரத்தில்
எய்தித் தவிக்கத் திரிபு உரத்தில்
இயற்றும் மலத்தில் திரிபுரத்தின்
இகலோர் புரி தீங்கு உணர்ந்தமையின்,
வசை எய்திடும் என்று உன்னி, அவர்
மயங்கப் புடைத்து, பின்பு அரனால்
மாய்க்கை நலம் என்று எறிந்திடல் போல்,
மாடை நீல நித்திலத்தால்
விசை உந்திடச் செய் அம்மனைகள்
விண்ணோர் வதியும் அம் மனைகள்
விளங்க வதியும் அம்மனைகள்
மிக்க உவப்ப, அம்மனை நீ!
அசையும் கொடிப் பேரூரினிடை
ஆடி யருளாய் அம்மானை!
அணி ஆர் பச்சை நாயகியே!
ஆடி யருளாய் அம்மானை! 6

திரி புரத்தில் இசையும் உயிர்கள் என இயையும், இயங்குகின்ற உடலில் பொருந்துகின்ற ஆன்மாக்கள். **உரத்தில் திரிபு இயற்றும்** - வலிமையோடு பகைமையைச் செய்யும். **மலத்தில்** - ஆணவம், மாயை, கன்மம் என்னும் மூன்று மலங்களைப் போல. **திரிபுரத்தின் இகலோர்** - முப்புரத்தில் இயங்கிய வித்யுன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூன்று பகைவர்கள், "**முப்புரம் ஆவது மும்மல காரியம்**" என்பது திருமந்திரம். (343). தானே முப்புரங்களின் அசுரர்களை அழித்துவிட்டால் இறைவனின் ஆற்றலுக்கு மாசு உண்டாக்கும் எனக் கருதிய அம்மை அவர்களைப் புடைத்து மயங்கச் செய்ததோடு விட்டுவிட்டாராம். இது, கம்பநாடனின் சீதை அனுமனிடம், "**தூயவன் வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினேன்**" (சூடாமணிப். 18). என்றதைப் போன்றது. **மாடை** - பொன். **நித்திலம்** - முத்து. **திரிபுரங்கள்** - பொன், வெள்ளி, இரும்பால் ஆனவை. நீலக்கல் இரும்பு போன்றது. **விசை உந்திட** - வேகமாக. **அம்மனைகள்** - அம்மானைக் காய்கள். **வதியும் அம் மனைகள்** - வசிக்கும் அந்த வீடுகள்.

**விளங்க வதியும் அம்மனைகள்** - சிறக்கும்டி துயில்கின்ற மகளிர், வதிதல் என்பது துயில்தல் பொருள் தருதலை **“நினையுநள் வதிந்தக்கால்”** என்னும் கலித்தொகைத் தொடருக்கு (126.14) நச்சினார்க்கினியர், **“நின்னை நினைத்து அவசத்தால் துயின்றவிடத்து”** எனப் பொருளுரைப்பதால் அறியலாம். **அம்மனை** - தாயே, அண்மை விளி.

கொங்கு ஆர் மலர் மாலைகள் ஆட,
குளிரும் வண்டின் குலம் ஆட,
கோதை ஆட, காது இயலும்
குழை ஒண்குதம்பை உடன் ஆட,
பைங் கார்முகம் நேர் நுதல் ஆட,
பனிக்கும் திவலை வியர்வு ஆட,
பனி மா மதி நேர் நுதல் ஆட,
படைக் கண்மணி மிக்கு அசைந்து ஆட,
பொங்கு ஆர்வச் செவ் இதழ் ஆட,
பொரு மின் மருங்குல் துவண்டு ஆட,
பொலி குங்குமப் பொன் குன்று ஆட,
புரள் முத்து ஆரம் ஒளிர்ந்து ஆட,
அம் கார் மேனி மரகதமே!
ஆடி யருளாய் அம்மானை!
அணி ஆர்திருப் பேரூரினிடை
ஆடி யருளாய் அம்மானை! 7

**கொங்கு** - நறுமணம், தேன் எனினும் ஆம். **குலம்** - கூட்டம். **கோதை** - கூந்தல். **குழை, குதம்பை** - காதணிகள். **பை கார்முகம்** - சினங்கொண்ட வில், உபசார வழக்கு. **நுதல்** - புருவம். **பனிக்கும் திவலை** - துளிக்கின்ற துளி. **பனி** - குளிர்ந்த. **மா** - அழகிய. **மதிநேர் நுதல்** - பிறை போன்ற நெற்றி. **படு ஐ** - அகப்பட்ட அழகை உடைய, அழகிய என்றவாறு. **இதழ்** - உதடு. மின் பொரு என மாறுக, மின்னலைப் போன்ற. **மருங்குல்** - இடை. குன்று என்றது நகில்களை. **அம் கார் மேனி** - அழகிய மேகத்தைப் போன்ற உடலை உடைய.

வண்ண விருத்தம்

**தனதன தானா தனதன தய்யா தானன தன்னான**

**கணிதம் இல் வேதாகம முடி எய்து ஓர்**
**காரணன் உள் நீடு**
**கதி உயிர் ஆர் ஓவிய வியன் மெய் ஆர்**
**காமர் நல் மின்னே! மெய்**
**மணி நிகர் மேலோர் துதி அருள் வில் ஏய்**
**மா கவிதம்மோடு,**
**மதி இல் என் நேர்வார் சிறுமொழி கொள் - ஏர்**
**வாரிச மின்னார் செய்**
**பணி பெறு தாளாய்! பரகதி நல்கு ஊர்,**
**பார், உயர் விண், நாகர்**
**பயில் உலகூடு ஓவுஅரும் இசை மல்கு ஊர்,**
**பாவலர் பன் ஊர், பல்கு**
**அணிபொலி பேரூர் மருவிய செல்வீ!**
**ஆடுக அம்மானை!**
**அருள் நிறை தாயே! மரகத வல்லீ!**
**ஆடுக அம்மானை!** 8

**கணிதம் இல்** - எண்ணற்ற. **காரணன்** - சிவபெருமான். **கதி** - சிறந்து விளங்குகின்ற. **உயிர் ஆர் ஓவிய** - உயிரோவியம் போன்ற. **வியன் மெய்** - பெருமைக்குரிய திருமேனி. **காமர்** - அழகிய. **ஒருவன் திரு உள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோவியமே** என்பார் குமரகுருபரர். (மீனாக்ஷி. பிள்ளைத்தமிழ். 60) **மெய்** - உண்மையான. **மணி** - இரத்தினம். **வில் ஏய்** - பொருள்வளம் ஆகிய ஒளிமிக்க. **மா** - உயர்ந்த. **கவிதம்மோடு** - செய்யுள்களுடன். **மதி இல்** - அறிவற்ற. **ஏர்** - அழகிய. **வாரிச மின்னார்** - கலைமகள் திருமகள் ஆகிய தாமரை மகளிர். **தாளாய்** - திருவடிகளை உடையவளே. **பார்** - நில உலகிலும். **விண்** - தேவலோகத்திலும். **நாகர் பயில் உலகூடு** - பாதாளத்தோடு. **ஓவு அரும்** - குறையாத. **இசைமல்கு** - புகழ் பெருகுகின்ற. **பல்கு** - நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே இருக்கின்ற. **அணி** - அழகு.

தத்த தானன தத்த தானன தானா தன்னான

புத்தர் ஆருகதர்க்கு ஓர் கோளரி
போல் ஆய், உள் நீடு
புத்தியோர்கள் சிரத்தின்மீது அணி
பூண் நேர் பொன் வீயை
ஒத்த தாள்கொள் சுதற்கு, அநாளினில்
ஊண்ஆ, மெஞ்ஞான
ஒப்புஇல் பால் அருள் சத்தி! மாயையி -
னூடு ஆம் என்நேர் ஒல்
பித்தர் தரமும், மெய் மிக்க தூயவர்
பெறு ஆமன் வீடு
பெற்று வாழ்வு உற வைப்பின் மேன்மைய
பேரூரில் மேவும்
அத்தர் தாம் மகிழ் இச்சை நாயகி!
ஆடாய் அம்மானை!
அற்புதாகர பச்சை நாயகி!
ஆடாய் அம்மானை! 9

**ஆருகதர்க்கு** - சமண சமயத்தினருக்கு. **கோளரி** - சிங்கம். **புத்தியோர்கள்** - அறிஞர்கள். **பூண்** - அணிகலன், இங்கு முடி. **பொன் வீ** - அழகிய மலர், தாமரை. சுதர் என்றது முருகப்பெருமானின் அம்சமாகிய திருஞானசம்பந்தரை. **ஊண் ஆ** - உணவு ஆக. **என் நேர் ஒல்** - அடியேனைப் போன்ற. **பேறு ஆ மன் வீடு** - அதிருட்டம் ஆகிய நிலைத்த முத்தி. **மேன்மையை** - சிறப்பினை உடைய, **"உயர்ந்த மாதவங்கள் உழந்த முதறிவின் ஆன்றவர் தாங்களே அன்றிப் பெரிய பாதகங்கள் உழந்தவர் தாமும் பிறங்கிய ஆதி மா நகரை"** (அந்தகன் அரசுபெறு. 2) என்பது திருப்பேரூர்ப்புராணம். இதுவே பேரூரின் மேன்மை. **அத்தர்** - சிவபிரான். **அற்புத ஆகர** - வியப்புகளுக்கு இருப்பிடம் ஆகிய.

தனதன தானா தனதன தய்யா தன்னான தானதனா

பொருள் நிறைவு ஆர் கா அணி பொலி வில் ஆர்
பொன் நாடர் யாவரும் நீள்
புரிகுழல் மானாருடன் மனம் மெய் தோய்
புண் ஆகி வாடிடுமாறு
இருள் நிறை பேர் ஆணவமுடன் உய் சீர்
எண்ணாத தானவர் சீர்
இறுதி செய் வேல்ஆய் எழில் நிறை செவ்வே -
ளின் மார்பில் மேவிடுவாய்!
தெருள் நிறை மேலோர் அகவெளி உள்ளே
செஞ்ஞாயிறே! ஒளி ஆர்
திருவடி, நாயேன் உளம் மிசை நல்கு ஓர்
செல் மேனி மாமணியே!
அருள் நிறை பேரூர் மருவிய செல்வீ!
அம்மானை ஆடுகவே!
அமல சொரூபீ! மரகத வல்லீ!
அம்மானை ஆடுகவே. 10

**பொருள் நிறைவு ஆர் கா** - செல்வ வளம் மிக்க கற்பகச் சோலையும். **வில் ஆர்** - ஒளி பொருந்திய. **பொன் நாடர்** - வானுலகினர். **புரி குழல்** - சுருண்ட கூந்தலை உடைய. **மானாருடன்** - அரம்பையருடன். **மனம் மெய் தோய்** - உள்ளமும் உடலும் கலந்து. **புண் ஆகி** - வருத்தம் அடைந்து. **உய்சீர்** - கடைத்தேறுவதற்குரிய நற்செயல். **தானவர்** - சூரன் முதலிய அசுரர்களின். **சீர்** - செல்வாக்கை. **வேல் ஆய்** - ஈட்டி ஆகி. **தெருள்** - அறிவுத்தெளிவு. **அகவெளி** - மனமாகிய ஆகாயம். **செல்மேனி** - மேகத்தைப் போன்ற திருவுடலை உடைய. **அமல சொரூபி** - இயல்பாகவே குற்றங்கள் இல்லாதவடிவத்தை உடையவளே.

## 9. நீராடல் பருவம்

(இரட்டையாசிரிய விருத்தம்)

முக்கண் பெருந்தகை, பிணக்கு உற்றிடும் ததியில்
முடியில் அவிர் கங்கை நல் நீர்
முளரி அடிகட்கு அன்பு வளர் இசைவில் ஆட்டி, மது
முருகு அலர்க் கொன்றை சூட்ட,
மைக்கண் சிறப்பு இயல் கருணை பொழியும் தேவி,
வாரா விருந்தாகி, முன்
வந்திடக் கண்டு, ஆரவாரம் மிகவே, தன்னுள்
வாய்ந்த மணி பொன்னை அலை ஆர்
கைக்கண் கொடு, இயல் உயிர்த்திரள் யாவும் வெம் பவக்
கடலினும் மெய் முத்தி இன்பக்
கரை ஏறவிடு, ஞான விரை ஏறு தாளினிடை
கரை ஏற மலரொடு இட்டு,
மெய்க்கண் தழைத்து அழைக்கும் பேரையூர்க் காஞ்சி
வெள்ளநீர் ஆடியருளே!
விச்சை நாயகர் வாஞ்சி பச்சை நாயகி! காஞ்சி
வெள்ளநீர் ஆடியருளே. 1

**முக்கண் பெருந்தகை** - சிவபெருமான். **பிணக்கு உற்றிடும் ததியில்** - நீங்கள் ஊடும்போது. **முடியில்** - தலையில். **முளரி** - தாமரை போன்ற. **மது** - தேனும். **முருகு** - வாசனையும் கொண்ட. **கண்டு** - (நொய்யலாறு) பார்த்து. **"மாமழை இரத்தினத்திரளும் திரைக்கரம் கொண்டு எறிந்து அழைக்கும் திறத்து ஆர்க்கும் பெரும் கொடை தோய் திருக்காஞ்சி"** என்பார் இவ்வாசிரியர் தம் திருப்பேரூர்க் கலம்பகத்துள்(1.11.13). **கைக்கண்** - கரங்களில். **காஞ்சியாறே பிறவாநெறி என வழங்கப்படும். பவக்கடல்** - பிறவி ஆகிய ஆழி, **"புக்காடும் பெற்றியோர் பிறவாமா[illegible]ம் துப்புற பெறலால் சொல்வர் சூழ் பிறவாநெறிப்பேர்"** என்பது தலபுராணம் (தீர்த்தப். 35). **ஞான விரை** - மெய்யறிவா[illegible]ய வாசனை, **ஞானவாசம் வீசிப் ரகாசியா நிற்ப** என்பது திருப்புகழ் (1114) **கரைஏற** - தன் மனம் திருவடிகளில் சேர, கறை எனற்பாலது போலி ஆயிற்று.

**மெய்க்கண்** - (ஆறு) தன் உடலில். **தழைத்து** - நீர்ப்பெருக்கு உற்று. **விச்சை நாயகர்** - அறிவுமயமான தலைவர், சிவபெருமான். **வாஞ்சி** - விரும்புகின்ற.

**குறிப்பு :** இறைவியின் திருவடிகள் ஞானமணம் பரப்புபவை. காஞ்சிநதி அவற்றை மலர்களால் அருச்சிப்பதால் இம்மணமும் சேர்ந்து கொள்கின்றன என்பது கருத்து.

அள்ளம் கலந்த உமை, என்பால் மெய் அன்பால் மல்கு
ஆனந்தம் உற்று ஆடலால்,
ஆகாய கங்கை! இணை ஆகாய்; அகம் கை என
ஆர்த்து, அதை அடங்கும் வண்ணம்
விள்ளங்கு அதிர்ந்து எழு திரைக் கைகொடு பாய் வரால்
மீன் ஆன படை செலுத்தி
மிளிர் காஞ்சி நதி தன்னுடன் ஒளிர் காஞ்சி அணிபுனையும்
வித்தகிதன் ஒப்பு இல் கருணை
உள்ளம் கலந்த செயல் புறம் உறும் தோற்றத்தில்,
ஓதியுடனே சைவலம்
ஒன்றாகி, அம் கரத்து ஒலிடும் சங்கம் என
ஒலிடச் சங்கம், இன்ப
வெள்ளம் கலந்து, உன் அருள் வெள்ளம் கலந்துஇயல
வெள்ள நீர் ஆடியருளே!
விச்சை நாயகர் வாஞ்சி பச்சை நாயகி! காஞ்சி
வெள்ள நீர் ஆடியருளே. 2

**அள்ளம் கலந்த உமை** - கடலைப் போன்ற (திருமேனியை உடைய) பார்வதி, அளம் விரித்தல் விகாரம் பெற்றது. என்பால் என்றது காஞ்சி நதியின் கூற்று. **ஆடலால்** - நீராடுவதால். ஆகாய கங்கை, அண்மை விளி. **அகம் கை** - உன்னுடைய செருக்கை விட்டுவிடு. **என ஆர்த்து** - என்பதைப் போல முழக்கமிட்டு. அதை என்றது ஆகாய கங்கையை. **விள்ளங்கு** - சொல்லும்போது, அங்கு காலப்பொருளில் வந்த சுட்டு. **திரை கை** - அலைகளாகிய கரங்கள். வரால் மீன் படைக்கலமாகக் கூறப்படுகிறது. என ஆர்த்து, படை செலுத்தி, மிளிர் காஞ்சி என இயையும். தன்னுடன் என்புழி தன் பகுதிப்பொருள் விகுதி. **காஞ்சி** -

எட்டுக் கோவைகளை உடையதாக இடுப்பில் அணியப்படும் அணிகலன், **காஞ்சியணி** - இரு பெயரொட்டு. **வித்தகி** - பேரறிவு வாய்ந்தவள். **ஓதி** - கூந்தல். **சைவலம்** - நீர்ப்பாசி, இதனைக் கூந்தலுக்கு உவமையாக்குதல் மரபு, **"இருள் சைவலம்.... தகரக் குழலுக்கு இணை ஆமே"** என்பது உவமான சங்கிரகம் (26) ஒலிடும் - ஒலிக்கின்ற. சங்கம் - 1. கைவளை. 2. சங்கு. ஆற்று வெள்ளத்தோடு மகிழ்ச்சி வெள்ளமும், திருவருள் வெள்ளமும் சேர்ந்துள்ளன என்றபடி.

என்னையும் ஓர் கண் என்ன உன் கண் அருள் நன்கு எய்தும்
இயல்வலர்கள் ஏத்தும் நீர்மை
எண்ணாது, இரண்டையும் நின் வண்ணம் ஆக்கும் செயலை
இத்ததியில் யான் பொறேன் என்று
அன்னை விழி தன் வண்ணம் ஆக்க அலை மாது, உள்ளம்
அலை மாது கலைமாது தண்
அதரத்து இசைந்து அகம் கலை மாது செய்து, நகை
அவிர் நிலாக் காட்ட, அம்மை
முன்னை உறு வெண் கம்பு பைங்கம்பு அது ஆக்கி, மறை
முதல்விதனை மலை மாது இயல்
முறைபுரிந்து யாவையும் என் வண்ணம் எனவே காட்டி,
முதிர் பிணக்காட்டு அகலவே,
மின்னை நிகர் இடை ஏய்ந்த தன்னை நிகர் உமை! காஞ்சி
வெள்ள நீர் ஆடியருளே!
விச்சை நாயகர் வாஞ்சி பச்சை நாயகி! காஞ்சி
வெள்ளநீர் ஆடியருளே! 3

**என்னையும்** - இது திருமகள் கூற்று. உன் என்றது கலைமகளை. **கண் அருள்** - கிருபா கடாட்சம். **இயல்வலர்கள்** - இலக்கியத்தில் வல்லவர்கள். **ஏத்தும் நீர்மை** - புகழ்கின்ற தன்மையை. **இரண்டையும்** - இரு விழிகளையும். **நின் வண்ணம் ஆக்கும்** - கலைமகளின் நிறமாகிய வெண்மை உடையதாகச் செய்யும். **அன்னை விழி** - பச்சைநாயகியின் கண்களை. **தன் வண்ணம்** - (மலர்மகள்) தனக்குரிய செம்மையாக்க, நீராடுவதால் கண்கள் சிவப்பது இயல்பு. **அலைமாது** - கடலின்கண் தோன்றிய இலக்குமி, ஏழன்தொகை. அலை மாது தன் வண்ணம் ஆக்க என்க. **உள்ளம் அலைமாது கலைமாது** - உள்ளக் கவலை அடைந்த

பெண் ஆகிய கலைமகள். **அதரத்து இசைந்து** - உதட்டில் பொருந்தி. நீராடுவதால் இதழ்கள் வெளுக்கும். **அகம் கலை** - (திருமகளின்) செருக்கை அழிப்பது ஆகிய, கலை முதல்நிலைத் தொழிற்பெயர். **மாது செய்து** - தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டு, இது கலைமகள் செயல். **நகை அவிர் நிலா** - நிலவினை நிகர்த்த புன்னகை. **முன்னை உறு** - தனக்கு எதிரில் உள்ள. **வெண் கம்பு** - வெண்மையான சங்கினை. **பைங்கம்பு அது** - (தன் மேனியை எதிரொளிப்பதால்) பச்சை நிறச் சங்கு ஆக. **மறை முதல்விதனை** - வேதங்களுக்கு உரிமை உடையவளாகிய சரசுவதியை. **மலை மாது** - இமவான் மகள். **இயல்முறை புரிந்து** - (செருக்கு அழியும்படி) இயன்ற ஒழுக்கத்தில் நிறுத்தி. **மூதிர்** - மிகுந்த. **பிணக்கு+ஆட்டு** - மாறுபாடு, பகைமை.

**பூ மிசை விளங்கு திரு இருவரும் திருவரும்**
**பொரு அரும் பணி செய் ஞானப்**
**பூங் கோதை ஆர் இயற்கைத் தெய்வ மணம் மூழ்கு**
**புனிதர் புற உள் உடம்பில்**
**தாம் இசை தரும் காரணத் தனுவொடு உண்டாடு**
**தகு சிறைப் புள் மா இனும்**
**தா வரம் எனாது உறும் தாவரமும் ஆம் காஞ்சி**
**தன்னில் நலம் மன்னி அமைய,**
**தே மிசை சுவடு தரு தேம் இசை பயோதரம்**
**தேக்கும் இன்பால் பெருக்கும்,**
**தீம் சுவைப் பால் பெருக்கு ஆர்ந்து உறு பராசரன்**
**செல்வர் என, உயிர்கள் எல்லாம்**
**மீ மிசை உற, பேரையாம் இசை அணிக் காஞ்சி**
**வெள்ளநீர் ஆடியருளே!**
**விச்சை நாயகர் வாஞ்சி பச்சை நாயகி. காஞ்சி**
**வெள்ளநீர் ஆடியருளே!** 4

**பூமிசை** - தாமரை மலரின்மீது. திரு இருவர் என்றது இலக்குமி சரசுவதியரை. **திருவரும்** - நல்வினைப் பயனால் வானுலக வாழ்வைப் பெற்ற தெய்வ மகளிரும்; காண்க : "**திருநங்கைமார்கள் - நல்வினையை உடைய மகளிராவர்; திரு - நல்வினை.**" (சீவக சிந்தாமணி 2552, தமிழ்த் தாத்தா அடிக்குறிப்பு). **கோதை ஆர்** - கூந்தலிற் பொருந்திய. புனிதர் என்றது சிவபெருமானை. "கொங்குதேர் வாழ்க்கை"ச் செய்யுள்

பற்றிய வாதத்தை நினைந்து கூறியது. **ஞானப்பூங்கோதை** - இது காளத்தியின் இறைவி பெயர், தலம் நக்கீரரோடு தொடர்புடையது. **புற உள் உடம்பில் இசை தரும்** - உடலின் வெளியே இடப்பாதியாகவும் மனத்துள்ளே தாம் விரும்பும் காதலியாகவும் பிரியாமல் இணைந்துள்ள, **"ஒருவன் திருவுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப்பார்த்திருக்கும் உயிரோவியமே"** (மீனாட்சியம்மை பிள்ளைத். 60). **காரணத்தனுவோடு** - அடியார்களுக்கு அருள்பாலிக்கும் பொருட்டு எடுத்துக் கொண்டுள்ள திருமேனியுடன். **உண்டாடு** - வீணே விளையாடிக் கொண்டிருக்கின்ற. **தகு சிறைபுள்** - பறப்பதற் கேற்ற இறகுகளை உடைய பறவைகளும். **மா** - விலங்குகளும். **இனும்** - இன்னமும், இவற்றோடு. வரம் தா என மாறுக. ஆம் - **வாழ்கின்ற,** ஆதல் வாழ்தல் பொருட்டு, **"ஆம் புடை என்கண் இல்லை"** (சிந்தாமணி 1738) என்புழிப்போல. **மன்னி** - பொருந்தி. **காஞ்சி** - ஆற்றுப் பூவரசு எனப்படும் செடி. **தே மிசை** - சிவபெருமானின் மார்பில். **தேம் இசை பயோதரம்** - இனிய நகில்கள். **இன்பால்** - மகிழ்ச்சியால். இறைவன் முலைச்சுவடு பெற்ற வரலாறு வெளிப்படை. ஒரு சாபத்தால் சரவணப் பொய்கையில் மீன்களாக இருந்த பராசர முனிவரின் ஆறு மைந்தர்கள் உமை முலைப்பால் தொடர்பால் சாப நீக்கம் பெற்றது புராண வரலாறு. **என** - போல. **மீமிசை** - மேல் உலகில்.

**மலையிடை உதித்து, மிகு பாசொளி பரப்பி, அவிர்**
**மாழை பணிலம் கடகம் வில்**
**மணிப் பணி கை கொண்டு, பரன் ஆட வந்து, அன்பர்கள்**
**மலம் களைந்து, உயிர் இனங்கள்**
**நிலைபெற அளித்து, உற்ற சோக தாகங்கள் அற**
**நீற்றி, நல் செய்யுள் அணியாய்**
**நிறை [illegible]ணை ஆள் அவர்க்கு இன் பதம் பொருள்கள் மிக**
**நித்தம் ஈந்திடுதிறத்தால்,**
**உலையும் என் பணி கொண்டு முத்தி இன்பு ஆக்குதலின்,**
**ஒண் காஞ்சி உந்தியாம் சீர்**
**ஓங்கலில், கண் விருந்து ஆம் பெரும் காட்சி தனில்,**
**உன்னை ஒப்பாய்க் கருணை ஆர்**

விலையில் பிறவா நெறித் தண் துறைக்கண் திரைகொள்
வெள்ள நீர் ஆடியருளே!
விச்சை நாயகர் வாஞ்சி பச்சை நாயகி! காஞ்சி
வெள்ள நீர் ஆடியருளே! 5

அம்மைக்கும் ஆற்றுக்கும் சிலேடை :

அம்மை : **மலை** - இமயம். **பாசுஒளி** - பச்சை நிறம். **மாழை** - பொன். **பணிலம்** - சங்கு (வளை). **கடகம்** - கங்கணம். **வில் மணிப் பணி** - ஒளிவீசுகின்ற இரத்தினங்கள் இழைத்த அணிகலன்கள். **கைக் கொண்டு** - விரும்பி அணிந்து கொண்டு. பரன் ஆட வந்து. ஆடல்வல்லான் கூத்தாட உடனிருந்து மலம் - ஆணவம் முதலிய உயிர்க்குற்றங்கள். **அளித்து** - கருணைபுரிந்து. அளி என்னும் பெயரடியாகத் தோன்றிய வினை. **சோகம்** - வருத்தங்கள். **தாகம்** - தேவைகள். **நீற்றி** - அழித்து. **நல்** - உயர்ந்த. **செய்யுள் அணியாய் நிறை** - கவிதைகள் வரிசையாக நிறைந்துள்ள. **பண்ணை ஆள் அவருக்கு** - யாப்புக்குரிய ஓசையோடு பொருந்திய பாடல்களைப் புனையவல்ல புலவர்களுக்கு. **இன்** - இனிய. **பதம்** - சொற்கள். **பொருள்கள்** - அருத்தங்கள். **உலையும்** - மனம் கலங்குகின்றவன் ஆகிய. **பணி** - தொண்டு. **முத்தி இன்பு** - வீடாகிய பேரின்பம், இருபெயரொட்டு.

**நொய்யலாறு :** வெள்ளியங்கிரியில் தோன்றி. **பாசொளி** - பச்சை நிறம். ஒப்பு : **"மாழை இரத்தினத்திரளும் திரைக்கரங்கொண்டு எறிந்து"** (இச்சுவாமிகளின் திருப்பேரூர்க் கலம்பகம் *1:11-12*). கடகம் என்பதற்கு நண்டு எனலும் ஆம். **ஆட வந்து** - அபிடேகம் கொள்ளப் பயன்பட்டு. **மலம்** - உடல் அழுக்கு. **சோகம்** - களைப்பு. **தாகம்** - நீர் வேட்கை. **நல் செய்உள்** - நல்ல வயல் ஆகிய இடம். **அணியாய்** - வரிசையாக, அழகாக எனினும் இழுக்கின்று. **பண்ணை ஆள் அவர்க்கு** - பண்ணையார்களுக்கு, விவசாயிகளுக்கு. **பதம் பொருள்கள்** - உணவுப் பொருள்களையும் அதன்வழிச் செல்வத்தையும், உம்மைத் தொகை. **என்பு அணி கொண்டு முத்தி இன்பு**

**ஆக்குதல்** : காஞ்சி நதியில் ஒருவரின் எலும்புகள் இடப்பட்டால் அவ்வுயிர் வீட்டின்பத்தை அடையும் என்பது தலச்சிறப்பு. **உந்தி** - ஆறு. **காட்சிதனில்** - பார்வையில். **விலை இல்** - பொருளால் விலை மதிக்க முடியாத. **துறை** - ஆற்றில் நீராடுமிடம்.

(பன்னிரு சீர் விருத்தம்)

**திருவோர், இருவோர், சசியொடு, அனிந் -**
**திதை, கமலினி, இமவரையில்**
**திகழ்ந்து உன் சாபத்து இயல் மனித**
**தேகம் பொருந்தி ஈண்டு தெய்வ**
**உரு ஆம் மடவார் எழுவர், தவம்**
**உற்ற முனவர் பத்தினியர்,**
**உவப்பில் திகழ் குங்குமச் செழுநீர்**
**ஓங்கு சிவிறி வழி தமை நேர்**
**மரு ஆர் பூங்கொம்பரில் செலுத்த,**
**மலர் கள்நீரோடு உன் மீதில்**
**வாழி! வாழி! எனப் பெய்து,**
**மகிமைத் தொண்டர் இனம் புரையக்**
**கரு வாரிதியைக் கடத்தும் அம்மை**
**காஞ்சிப் புதுநீர் ஆடுகவே!**
**காஞ்சி இடையாய்! பேரை அருள்க்**
**காஞ்சிப் புதுநீர் ஆடுகவே!** 6

**திருவோர் இருவர்** - திருமகள், கலைமகள் ஆகிய இருவர். **சசி** - இந்திராணி. **அனிந்திதை கமலினி** - தேவியின் இருசேடியர். இவரே பரவை, சங்கிலி நாச்சியார் ஆனவர். மடவார் எழுவர்; கயிலையில் வாழ்ந்து தேவி சாபத்தால் மகளிர்கள் ஆகிக் கரிகால்சோழனோடு சாப நீக்கம் பெற்றது தல வரலாறு. முனிவர் பத்தினியர் என்றது தாருகாவன மகளிரை. உவப்பில் - மகிழ்ச்சியோடு. **சிவிறிவழி** - பீச்சாங்குழலின் மூலம். **தமை நேர்** - தம்மைப் போன்று ஒசிகின்ற. **பூங்கொம்பரில்** - மலர்க்கொடியில். **கள் நீர்** - தேன் ஆகிய திரவம். **புரைய** - போல. **இடையாய்** - (எண் கோவை மேகலை அணிந்த) இடுப்பினை உடையவளே.

அலகுஇல் உயிர் தோறு அவை செய் கன்மத்து
அளவில், தனு ஆதிய நான்காய்
அகத்தும் புறத்தும் நிறைந்து நின்றும்,
அறியாவண்ணம் மறைந்து உறல்போல்,
இலகும் புனலுள் அபேதம் உற
எய்தி மறைய, மறையவளும்
ஏனை அணங்கினரும் தேடி
எய்த்துத் தளர்கால், இயல் ஞானத்
திலகம் புரை கண் ஈந்தருள,
திருந்து உன் மேனி அலது ஒன்றும்
தெரியாது அமையத் திருவருள் மெய்ச்
செல்வ விளையாட்டு இயற்றி, மருள்(க்)
கலகம் தவிர்க்கும் தேவி! அருள்க்
காஞ்சிப் புது நீர் ஆடுகவே!
காஞ்சி இடையாய்! பேரை அருள்க்
காஞ்சிப் புதுநீர் ஆடுகவே! 7

**அலகு இல்** - கணக்கற்ற. **கன்மத்து அளவில்** - நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப. **தனு ஆதிய நான்கு** - தனு, கரணம், புவனம், போகம்; அஃதாவது உடல், புலன்கள், உலகம், துய்ப்பன. **புனலுள்** - ஆற்று நீருக்குள். **அபேதம் உற** - இருப்பது தெரியாமல் மூழ்கி இருக்க. **மறையவளும்** - (கல்விக்குத் தலைவி ஆகிய) கலைமகளும், இவளுடைய அறிவுடைமை பற்றி வியந்து கூறப்பட்டது. **அணங்கினரும்** - மகளிரும். **தளர்கால்** - சோர்வடையும்போது. **புரை** - போன்ற. **திருந்து** - முழுமையான. **மருள் கலகம்** - மயக்கத்தால் விளையும் போர். **தேவி** - அண்மை விளி.

(வண்ண விருத்தம்)

தனதன தனதன தய்யா தந்தத் தனனா தான தனா

௮. மலர் இணையிடை நொய்தாய் ஏந்து அக்
கவின் ஆர் சேய் பெறு நோய்
கழிவு உற, அவுடதம் ஓர் தாய் மாந்தக்
கடனே போல், இகலே

பரவிய கொடு மல அல்லூடு ஓர்ந்து உள்(ப்)
　　பதி நீர் ஓர்வு இலது, ஏய்
　　பவம் மரணம் உதவு பொய் மால் வீண் கற் -
　　பனை தோய் மாயையின் நீள்
கரவு கொடு, உயிர் இனம் எல்லாம் ஏங்க,
　　கதி பாய் காமியம்ஆ
　　கடல் எனும் மலம் அறு மெய் மாண் ஓங்கக்
　　கமழ் பேரூரிடை சால்
புரணனது இடம் அமை செல்வீ! காஞ்சிப்
　　புது நீர் ஆடுகவே!
　　பொலி அருள் மரகத வல்லீ! காஞ்சிப்
　　புது நீர் ஆடுகவே! 8

**நொய்தாய்**- மென்மையாய். **கழிவு உற** - தீர. **அவுடதம்** - மருந்து. **மாந்தக்கடனே போல்** - சாப்பிடுவது கடமை ஆவது போல. ஏகாரத்தை தாயே மாந்தக் கடன் போல் என மாறுக. **"பால் உண் குழவி பசும் குடர் பொறாது என நோய் உண் மருந்து தாய் உண்டாங்கு"** (சிதம்பர மும்மணிக்கோவை 2) என்பார் குமரகுருபரர். **இகலே பரவிய** - எப்பொழுதும் பகைமையையே பாராட்டிக்கொண்டிருக்கிற. **கொடு மல அல்லூடு** - கொடுமை வாய்ந்த ஆணவமாகிய இருளில். **உள் பதி நீர் ஓர்ந்து ஒய்வு இலது** - உள்ளத்தில் இறைவனின் இயல்பினை ஆராய்ந்து தெளியாமல். **ஏய்** - பொருந்துகின்ற. **பவம்** - பிறப்பு. **பொய் மால் வீண் கற்பனை தோய் மாயையின்** - நிலையற்றதும் மயக்கத்தைத் தருவதும் பயனற்றதும் இல்லாததை இருப்பதாகக் கருதச் செய்வதுமாகிய மாயாமலத்தின். **கரவு கொடு** - வஞ்சனையை ஏற்று. **காமியம் ஆ** - கன்மம் ஆகிய. **கடல் எனும்** - கடலைப் போன்று விரிந்த. ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலங்களையும் அறுக்கின்ற உண்மையான பெருமை. **புரணனது இடம்** - சிவபிரானின் இடப்பாகத்தில். அருள் பொலி என மாறுக.

தானத் தாந்தத் தானத் தாந்தத் தனனா தான தனா

கா வைப்பு ஓங்கு அத் தேவர்க் கூர்ங்கண்
கவின் நீள் மாதரை ஆர்
காவல்ப் பாங்கு உய்த்தே மிக்கு ஏங்கக்
கதிர் கால் வானிடையே
தீ வைத்து ஆங்கு அப் பேர்இல் சாம்பர்த்
திறம் ஆமாறு செய்தார்
சேரச் சாம் பெட்பு ஏயக் காண் கைச்
செய வேலா நிகழ்வாய்!
சாவைத் தாண்டப் பால் வித்து ஆம் பத் -
தரின் நாவூடு இயல் ஆர்
சாரத் தீஞ்சொல் பாடல் பூண்பொன்
சரண் மீதே அணி தோய்
பூவைக் காந்தித் தாய் நல் காஞ்சிப்
புது நீர் ஆடுகவே!
போதச் சாந்தப் பேரைக் காஞ்சிப்
புது நீர் ஆடுகவே! 9

**கா வைப்பு ஓங்கு** - கற்பக நாட்டில் வாழ்கின்ற. **கூர்ங்கண்** - கூர்மையான கண்களை உடைய. தேவர்களையும் மாதர்களையும் என உம்மைத்தொகை வரும்போது தேவரை என்புழி வலிமிகாது, அவ்வாறு மிக்கது வண்ணம் நோக்கிய செய்யுள் விகாரம். **காவல்பாங்கு உய்த்தே** - சிறைப்படுத்தி. **கதிர்கால் வானிடையே** - ஒளி வீசும் தேவலோகத்தில். பானுகோபன் தேவர்களையும் தேவமாதர்களையும் சிறைப்படுத்தி வானுலகத்திற்குத் தீயிட்டது கந்த புராண அமரர் சிறைபுகு படல வரலாறு. **ஆங்கு** - அசை. **பேர் இல்** - பெரிய வாழ்விடம். **செய்தார் சேர** - புரிந்தவர்களாகிய அசுரர்கள் அனைவரும். **சாம்பெட்பு ஏயக்காண்** - இறக்கச் செய்கின்ற. **செய** - வெற்றியை உடைய. முருகப்பெருமானின் வேல் சக்தியின் வடிவம் என்பது வெளிப்படை. **சாவைத் தாண்ட** - இறப்பைத் தவிர்க்க. **பால் வித்து ஆம்** - இயல்பான காரணம் ஆகிய, அஃதாவது துணைபுரியும் என்றபடி. வித்து காரணப்பொருள் தருதலை **"நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்"** (குறள் *138*). என்புழிக் காண்க. வித்து ஆம்

சரண் என இயையும். **ஆர் சார** - நிறைந்த பயனை உடைய. **பூண்** - அணிகின்ற. **பொன்** - அழகிய. **சரண் மீதே** - திருவடிகளின்மேல். **அணி தோய்** - வரிசையாக வந்து பொருந்துகின்ற. **பூவை** - தாமரை மலர்களை. **காந்தி** - பொறாமை கொள்ளச் செய்து, பிறவினைப் பொருளில் ஆட்சி. **தாய்** - தாவி, **"தா அய் முயற்பறழ் உகளும் முல்லையம் புறவில்"** (அகம். 384: 4-5), இங்கு அளபெடை இன்றி வந்தது. தாய் என்னும் வினையெச்சம் ஆடுக என்னும் முன்னிலை ஏவலைக் கொண்டு முடிந்தது. **போத** - அறிவுமயமான.

**தனன தனதன தய்யா தானன தாந்தத் தனதானா**

**அரி அயனொடு அலகு இல்லா நூல்இனம்**
**ஆய்ந்து எட்ட அரிதாம் ஓர்**
**அமல பரசிவனுள் வாழ் ஆர் உயிர்**
**ஆம் சித்திர மானே!**
**விரியும் எழு கடல் நொய்தே ஆம் என**
**மீந்திட்டு உளமீதே**
**விரவு திருவருள் மை போல் ஆவிகள்**
**மேம்பட்டு உயுமாறு ஆர்**
**பரிவினொடு பொழி மை தோய் காதணி**
**பாய்ந்து எட்டு அணி ஏர் சால்**
**பதும விழிபெறு கிள்ளாய்! பேரைகொள்**
**பாந்தத்துவ தேவீ!**
**கரியனுடன் வரு செல்வீ! ஆடுக**
**காஞ்சிப் புது நீரே!**
**கதிர் கொள் மரகத வல்லீ! ஆடுக**
**காஞ்சிப் புதுநீரே!** 10

**அலகு இல்லா** - கணக்கற்ற. நூலினம் என்பதற்கு இரட்டுற மொழிதலாகப் பனுவற்கூட்டங்கள், நூல்கள் இன்றளவும் என இரு பொருளும் கொள்க. **அமல** - குற்றம் அற்ற. **சித்திர** - அழகிய. **நொய்தே ஆம்** - சிறியது தான். **மீந்திட்டு** - மிகுதியாக. ஆவிகள் மேம்பட்டு உயுமாறு உளமீதே விரவு திருவருள் விரியும் எழுகடல் நொய்தே ஆம் என மீந்திட்டு

மைபோல் பரிவினொடு பொழி ... பதும விழி எனக் கொண்டு கூட்டுக. **மை போல்** - மேகத்தைப் போலக் கைமாறு கருதாது. மை தோய் விழி, காதணி பாய்ந்து எட்டு விழி, அணி ஏர் சால் விழி, பதும விழி எனத் தனித்தனி இயையும். (கூர்மை, செவ்வரி, கருமை, குவளை போன்ற வடிவம் முதலிய) வரிசையான அழகுகள் மிகுந்துள்ள. பாந்தத்துவ - உரிமை மிக்க உறவினை விடைய. **கரியனுடன் வரு** - திருமாலுக்குத் தங்கையாகத் தோன்றிய.

## 10. ஊசல் பருவம்

(இரட்டையாசிரிய விருத்தம்)

**விலகு வில் உமிழ் துகிர்க் கால் மீது தவள ஒளி**
**மிளிர் வைர விட்டம் ஏற்றி,**
**விரிகிரண விழுது அனைய தரளவடம் இட்டு, அருண**
**விகசித மணிப் பலகை மேல்,**
**குலவு திறல் நீறு பூத்து அவிர் நெருப்பு அருள் மேனி**
**கொண்ட கொண்டல் (க்) களத்தன்**
**குளிர் இதய பஞ்சரத்து ஒன்று துவர்வாய்க் கிளிக்**
**கோலம் கடுப்ப, மும்மை**
**மல இருளிடைக் குவிந்து இயல் உயிர்கள், பாவ அற**
**வடிவு ஆன காயம் ஏய்ந்து,**
**வான் பாதலம் பூதலத்து உற்றுவாம் போக**
**வகை நாடி, ஓடும் வஞ்சப்**
**புலன் உற்ற ஊசல் அற, நலன் உற்ற பேரையில்**
**பொன் ஊசல் ஆடியருளே!**
**புகழ் பட்டிலிங்கன் உளம் மகிழ் பச்சை அம்பிகை கொள்**
**பொன் ஊசல் ஆடியருளே!** 1

**வில் உமிழ்** - ஒளி வீசுகின்ற. **துகிர்க்கால்** - பவளத்தூண். **தவள** - வெண்மையான. **தரள வடம்** - முத்துச் சங்கிலி. **அருணவிகசித** - செம்மை நிறம் விளங்குகின்ற. மணி மாணிக்கத்தாலான. **நீறு பூத்து அவிர் நெருப்பு அருள் மேனி** - வெண்ணீறு பூசப்பட்டதும் சிவந்ததும் அருள்மய மானதுமாகிய உடல். **கொண்டல் களத்தன்** - மேகம் போன்ற நீலநிறக் கழுத்தை உடைய சிவபெருமானின்.

**இதயபஞ்சரத்து ஒன்று** - உள்ளமாகிய கூட்டில் பொருந்தியுள்ள. துவர் - பவளம் போன்ற. **கோலம் கடுப்ப** - அழகைப் போல. **மும்மை** - மூன்று ஆகிய. **உயிர்கள்** - ஆன்மாக்கள். **பாவஅற வடிவுஆன** - பாவ புண்ணியங்களால் உருப்பெறுவது ஆகிய. **காயம்** - உடலை. **ஏய்ந்து** - பொருந்தி. **வான்** - மேலுலகம். **பூதலம்** - நிலஉலகம். **உற்று** - அடைந்து. **அவாம்** - விரும்பப்படுகின்ற. **போக வகை** - இன்ப அநுபவங்களை. **நாடி** - விரும்பி. **புலன்** - கண் முதலிய ஐம்புலன்கள். **ஊசல் அற** - தடுமாற்றம் நீங்க. கோலம் கடுப்ப ஆடியருள், ஊசல் அற ஆடியருள் எனத் தனித்தனி இயையும்.

**குறிப்புரை :** ஒப்பு : **"உருமாறிப் பலபிறப்பும் பிறந்தும் செத்தும் ஊசலாடுவது அடியேன் ஒழியும் வண்ணம் .... திருவரங்க ராசரே ஆடீர் ஊசல்."** (திருவரங்கக் கலம்பகம் 58). ஊசற்றொழில் இறைவியைச் சேர ஓர் உயிர் அதனை நீங்குவதைக் கூறும் இது பரியாய அணியின் வகைகளுள் ஒன்று ஆகும்.

**செங்கேழ் விரிக்கும் அருணக் கதிர் மணிப் பலகை**
**சேர அமை வெண் நித்திலத்**
**திரள் வடத்துள், நீ விளங்கு செயல், இமயத்**
**திருப் பருப்பத அருகினில்,**
**கொங்கு ஏய் தரங்கத்தடத்து இயல் தமிழ் மணம்**
**கொண்டு அசைத்திடு தென்றலின்**
**குளிர் பரிச சத்தம் உள்கொடு முடிதுளக்கி அசை**
**கொள்கை போலும்; துள்ளு நீர்ப்**
**பைங் கேழ் விரிக்கும் எழு பாடலத்து, ஒற்றை அம்**
**பாழி ஆழித் தேர், அடல்**
**பானு மண்டலம் உற்ற கோன், இம் மண் தலம் உற்ற**
**பதிகளில் சீர்த்த கொங்கு ஏய்**
**பொங்கு ஏழ் பிறப்பு ஒழிக்கும் பேரையூர்த் தலைவி!**
**பொன்னூசல் ஆடியருளே!**
**புகழ் பட்டிலிங்கன் உளம் மகிழ் பச்சை அம்பிகை கொள்**
**பொன்னூசல் ஆடியருளே!** 2

**செங்கேழ்** - செம்மை ஒளி. **அருணக்கதிர்** - சிவந்த கிரணம். **நித்தில** - முத்துக்களால் ஆன. **வடம்** - கயிறு. **கொங்கு ஏய்** - வண்டுகள் பொருந்திய. தரங்கத்தடத்து - அலைகளை உடைய குளத்தின்கண். **குளிர் பரிச** - குளிர்ச்சியான தொடுதல் உணர்ச்சியையும். **சத்தம்** - வண்டுகளின் ரீங்காரத்தையும். **முடி துளக்கி அசை** - அங்கீகரித்துத் தலையை அசைக்கின்ற. **பைங்கேழ்** - பச்சை ஒளி. **எழு பாடலத்து** - ஏழு குதிரைகள் பூட்டப்பெற்ற. **அம் பாழி ஒற்றை ஆழித்தேர்** - அழகியதும் பெரியதும் ஆன ஒற்றைச் சக்கரத்தை உடைய இரதத்தையும். **அடல்** - வலிய. கோன் என்றது சூரியனை. **பதிகளில்** - தலங்களுள். **கொங்கு ஏய்** - கொங்கு நாட்டைச் சேர்ந்த. **பொங்கு** - மேலும் மேலும் வளர்கின்ற.

**குறிப்புரை :** முதல் கொங்கு ஆகுபெயராக வண்டினைக் குறித்தது. வண்டுகளையும் அடுத்துத் தென்றலையும் நிறுத்திப் பயன் கொள்ளுங்கால் பரிசம் சத்தம் என வரிசைப்படுத்தியது எதிர்நிரனிறையணி.

செக்கர் அம் பவளத் துணைக் காலுள், வெண் நித் -
திலத் திருவடத்தினுள் நீ
தேசு இயல் பசும் கிரணம் வீசி அமைதரல், உற்ற
சீவ போத இராசதப்
பொய்க் கரண வாதனை கடந்து, சத்துவ ஞான
போத அனுபூதி அருள் ஆர்
புத்தமுத இன்பப் பெருக்கினில், கீர அம் -
போதிமிசை சேடன்மீதில்
மெய்க் கரத்திரை அசைத்திட ஆடு சோதரனில்,
விரி பரிதி மண்டலம் தோய்
வெண்ணிலா மண்டலத்துள் நிலாவும் தகையில்,
வேழ வில், ஐந்து ஆகும் அம் -
புக் கரத் தேவி! அணி மிக்க மெய்ப் பேரையிடை
பொன்னூசல் ஆடியருளே!
புகழ் பட்டிலிங்கன் உளம் மகிழ் பச்சை அம்பிகை கொள்
பொன்னூசல் ஆடியருளே! 3

**செக்கர்** - சிவந்த. **அம்** - அழகிய. **துணைக்காலுள்** - இரண்டு தூண்களுக்கிடையில். **தேசு இயல்** - ஒளி மிக்க. **பசும் கிரணம்** - பச்சை ஒளிக்கதிர். ***சீவபோத*** - உயிரின் இயற்கை அறிவாகிய. **இராசத** - முக்குணங்களுள் ஒன்று, ஊக்கம், வீரம், பெருமிதம் நிரம்பிய நிலை. **பொய் கரணவாதனை** - நிலையற்ற ஐம்புல இன்ப வேட்கையால் உண்டாகும் வருத்தத்தை. **சத்துவ** - முக்குணங்களுள் உயர்ந்தது, மெய்யுணர்வும் அமைதியும் நிரம்பிய நிலை. **ஞான போத அனுபூதி** - மெய்ப் பொருளை ஐயமறத் துய்க்கும் உணர்வு. ***கீர அம்போதிமிசை*** - பாற்கடலில். ***கரத்திரை*** - கைகள் ஆகிய அலைகள். **சோதரனில்** - தன்தமையனார் ஆகிய திருமாலைப்போல. வேழவில் - கரும்பு வில். **ஐந்து ஆகும் அம்பு கர** - ஐந்து ஆகிய மலர்க்கணைகளைத் தாங்கிய கைகளை உடைய.

**குறிப்புரை :** சத்துவம், இராசதம், தாமதம் ஆகிய முக்குணங்களை முறையே வெண்மை, செம்மை, கருமை நிறத்தனவாகக் கூறுதல் நியாய நூலார் மரபு. பவளத் தூண்கள் முத்துச் சங்கிலிக்கு இடையே பச்சைவண்ணத் தேவி இருப்பது பாற்கடல் நடுவே திருமால் பள்ளி கொண்டிருப்பது போல உள்ளது என்பது ஓர் உவமை. சூரிய மண்டலத்தைச் சேர்ந்த சந்திரமண்டலத்தில் என்பது மற்றொரு உவமை. உமாதேவியாருக்கும் திரிபுரசுந்தரி வடிவில் கரும்புவில் மலர்க்கணை உண்டு. **"பனி மலர்ப்பூம் கணையும் கருப்புச்சிலையும் மென்பாசாங்குசமும் கையில் அணையும் திரிபுர சுந்தரி"** என்பார் அபிராமி பட்டர். (2)

கள் ஊறு வாச மலர் வாச மடவார், வடம்
　　கைப்பிடித்து ஆட்ட, அணி ஆர்
　　கமலினி அநிந்திதைகள், மலர் மாலை பரிமளக்
　　களபம் முதல் ஏந்தி நிற்ப,
உள் ஊறும் அன்பில் புலோமசை, இரதி கவரி
　　ஓயாது அசைத்து உவப்ப,
　　ஓயாது அட்டமங்கலத்தொடு, படியகம் பலபல
　　ஒண்தொடியர் தாங்க, உள்ளத்து

அள்ளூறும் உழுவல் அன்பின் பெருந்தொண்டர் பரம
ஆனந்தம் எய்த, ஒப்புஇல்
ஆதி ஆகும் பரஞ்சோதி, அவிர் மெய் பாதி
ஆக விரகம் பொருந்த,
புள் ஊறு புரி மாயன் உள் ஊறு சோதரீ!
பொன்னூசல் ஆடியருளே!
புகழ் பட்டிலிங்கன் உளம் மகிழ் பச்சை அம்பிகை கொள்
பொன்னூசல் ஆடியருளே. 4

**கள்** - தேன். **வாசமலர் வாச மடவார்** - மணம் மிக்க தாமரைமலரை இருப்பிடமாக உடைய திருமகளும் கலைமகளும். அநிந்திதைகள் என்றது இவர்களைப் போன்ற பாங்கியர்களை. **பரிமளக் களபம்** - வாசனைப் பொருள்கள் சேர்க்கப்பட்ட சந்தனக்கலவை. **உள் ஊறும் இன்பில்** - மனத்தில் எழும் மகிழ்ச்சியோடு. **புலோமசை** - இந்திராணி. **அட்டமங்கலம்** - மீன் இணை, கண்ணாடி, சாமரம், கொடி, தோட்டி (அங்குசம்), நிறைகுடம், முரசு, விளக்கு ஆகிய எட்டு சுபப்பொருள்கள். **படியகம்** - காளாஞ்சி. **ஒண் தொடியார்** - ஒளிவீசும் வளையல்களை அணிந்துள்ள மகளிர். **அள்ளூறும்** - ஆசை மிக்கதும். **உழுவல்** - என்றும் மாறாத. பரஞ்சோதி - சிவபெருமான். சிவபெருமான் உமாதேவியின்மீது கொண்ட பெருங்காதலால் இளைத்துப் பாதி உடம்பு ஆகிவிட்டாராம். இது மாதொருபாக வடிவத்தை நினைத்துச் சமத்காரமாகக் கூறுவது. **புள் ஊறு புரி மாயன்** - கொக்கு வடிவத்தில் வந்த பகாசுரனின் வாயைப் பிளந்து கொன்ற கண்ணன் ஆகிய திருமால், **"புள்ளின் வாய் கீண்டான்"** என்பாள் கோதை.

பருவ மதி அனைய வதனாம்புயத்து இளநகை
பரந்து ஆட, ஒப்புஇல் கருணை
பரவு உயிர்த் திரள்கள்மிசை பெய் விழித்துணை தோடு
பாய்ந்து ஆடிட, புறத்தில்
கருமை பொலி பணிவேணி நுதி இலகு முச் சுடர்க்
காட்சியில் குச்சு இலங்கிக்
கதிர் ஒளி விரித்து ஆட, மார்பின் முத்து ஆரம்
கவின்று ஆட, நுண் நுசுப்புக்

குரு மணிகொள் மேகலையும் மாகலையும் ஆட, வண்
கொச்சையூர்ப் பிள்ளை உள்ளம்
குளிர்தரப் பால் உதவும் ஒளிர் இளம் குங்குமக்
குன்றங்கள் ஆடிட, தற் -
பொரும் அணி அடிச் சிலம்பு ஆடிட, பேரையில்
பொன்னூசல் ஆடியருளே!
புகழ் பட்டிலிங்கன் உளம் மகிழ் பச்சை அம்பிகை கொள்
பொன்னூசல் ஆடியருளே! 5

**பருவமதி அனைய** - பௌர்ணமிச் சந்திரனைப் போன்ற. **வதனாம்புயத்து** - முகமாகிய தாமரையில். **இளநகை** - புன் முறுவல். **விழித்துணை** - இரு கண்கள். **தோடு பாய்ந்து** - காதணிகளின்வரை சென்று. **புறத்தில்** - முதுகில். **பணிவேணி** - பாம்பைப் போன்ற பின்னலின், உவமைத் தொகை. **நுதி** - நுனியில். **முச்சுடர்க் காட்சியில்** - கதிர், மதி, தீ என்னும் முச்சுடர்களைப் போலக் காணப்படுகின்ற. **குச்சு** - (மூன்று உருண்டைகளாலான) குஞ்சலம். ஒளிக்கதிர் என மாறுக, கிரணம். **நுசுப்பு** - இடுப்பில். **குருமணி** - மாணிக்கம். மா கலையும் - உயர்ந்த புடவையும். **கொச்சையூர்ப் பிள்ளை** - சீகாழி திருஞானசம்பந்தர். **குங்குமக் குன்றங்கள்** - செஞ்சாந்து பூசப்பெற்றதும் மலைகளைப் போன்றனவும் ஆகிய நகில்கள், அடையடுத்த உவம ஆகுபெயர். **தற்பொரும்** - தனக்குத்தானே இணை ஆகிய, நிகரற்ற. **அணி** - பெருமை பொருந்திய. **அடி** - திருப்பாதங்களில்.

(பன்னிருசீர் விருத்தம்)

ஒப்பு அற்று அவிர் நின் கரத் தாளம்
ஒப்பச் சிற்றம்பலத்து ஆடும்
உரத் தாள் அத்தன், நின் காமர்
உரத்தாளத்துக்கு இசைவுற, தன்
பை(ப்) பல் தறுகண் கட்செவி வாள்
பரப்பு மணி மௌலியைத் துளக்க,
பாகீரதி, பார்வதியின் வலப்
பாகீர்! அதியா நீர் அமையில்

எப் பற்று அடியாட்கு உளது? என்ன
ஏத்தி, நுரை வாய் பெறப் பொங்க
ஈசன்றனை நித்தில வடங்கள்
ஏற்ற ஊசல் இட்டு ஆட்டும்
அப் பற்று அமையப் பேரூரில்
ஆடி யருளாய் பொன்னூசல்!
அவிர்சீர்ப் பச்சை நாயகியே
ஆடி யருளாய் பொன்னூசல்! 6

**கரத்தாளம் ஒப்ப** - கைகளால் தட்டப்படுகின்ற தாளத்திற்கு ஏற்ப. ஆனந்த நடனத்தில் இறைவி தாளமிடுதல் ; **"பாணியும் தூக்கும் சீரும் என்று இவை மாணிழை அரிவை காப்ப ஆணம் இல் பொருள் எமக்கு அமர்ந்தனை நாடி"** (கலித்தொகை, க.வா.) **உர தாள் அத்தன்** - வலிமையான கால்களை உடைய சிவபெருமான். **காமர்** - அழகிய. **உர** - மார்பில் உள்ள. **தாளத்திற்கு** - கிண்ணக் கைத்தாளத்தைப் போன்ற நகில்களுக்கு. **இசைவுற** - பொருந்தும்படி. இறைவி தாளம்போடும்போது அவளுடைய கொங்கைகள் அசைகின்றன. அதற்கேற்பச் சிவபெருமான் தன் தலையை ஆட்டுகிறார் என்றபடி. **பை பல்** - சினக்கின்ற விஷப்பல்லை உடைய, பாம்பின் கோபம் பல்லின்மேல் ஏற்றப்பட்ட உபசார வழக்கு, **"சினத்து அயில் கொலைவாள்"** (கம்பர். பால. 104) என்புழிப்போல. **தறுகண்** - கொடுமைமிக்க. **கட்செவி** - பாம்பு. **வாள்** - ஒளியை. **மணி மௌலியை** - அழகிய தலையை. **துளக்க** - ஆட்ட. **பாகீரதி** - கங்கை. **வலப்பாகீர்** - வலது பக்கத்தில் உள்ளவரே. **அதியா** - அதிகமாக. **நீர் அமையில்** - நீங்கள் அந்த ஆட்டத்தில் பொருந்திவிட்டால். **அடியாட்கு** - (உம் தலையில் உள்ள கங்கை ஆகிய) எனக்கு. சிவபிரான் மிகுதியாக ஆடினால் தேங்கி இருக்கும் தண்ணீருக்குக் கரை இல்லாது போகும் எனக் கங்கை கூறுகிறாள். **என்ன** - என்று.

தரும் தாய்தந்தை ஆம் , மேனை
சயில மன்னன் உளத்து உவகை
ததும்ப, இவ் இருமைக் கண்ணும்
தழைத்த இரு மை கண்ணும் அயில்

விருந்தாய், அண்ட பிண்டம் உறும்
வித்தாய், வேத முடி பொருந்தும்
விண்ணாய், நிகர் அற்று இலங்கும் மணி
விளக்காய் வதிந்து, மாயைக்குள்
வருந்தாய் என, என்னுள், அருளால்
வரும் தாய்! துன்பப் பிணி தவிர்க்கும்
மருந்தாய், பட்டிலிங்கன் உள் அ -
மர்உந்துஆய்! தொண்டர் பாக்கியம் ஆர்
அரும் தாய்! பிறவா நெறி வளர் தாய்!
ஆடி யருளாய் பொன் ஊசல்!
அவிர் சீர்ப் பச்சை நாயகியே!
ஆடியருளாய் பொன்னூசல்! 7

**தரும்** - பெற்றெடுத்த. **சயிலமன்னன்** - மலையரசன், இமவான். **இருமைக்கண்ணும்** - இம்மை மறுமை இரண்டிலும். **மை கண்** - அஞ்சனம் தீட்டப்பெற்ற விழி. **அயில்** - நுகர்கின்ற. **அண்ட பிண்டம்** - வானும் மண்ணுலகும். **உறும்** - தோன்றுவதற்குக் காரணம் ஆகிய. **வருந்தாய் என** - துன்பப்படாதே என்று தேற்றி, **வரும் தாய்** - காட்சி தரும் அன்னையே, அண்மை விளி. **அமர் உந்து** - விருப்பத்தை மிகுவிக்கும். **அமர்** முதனிலைத் தொழிற்பெயர். **ஆய்** - தாயே, அண்மைவிளி.

(வண்ண விருத்தம்)

தனனா தனதன தனனா தனதன தானா தய்யான

கமலாதனமிசை இசை வேதியன் முடி,
கார் நேர் மெய் நீடு
கடி ஆர் துளவு அணி உர மாயவன் அடி
காணாது, உள் வாடி,
விமலா! உன... அலது, எமை ஆள் கதிஇனி
வேறு ஏது? ஐயா! எம்
விழிநேர் அணைகென, உருள் பாடிட, அருள்
வீறு ஆர் மெய்யோன் வெஃகு

இமயாலயம் வளர் கிளியே! புவியினம்
ஈரேழுள் வாழும்
இயமானரொடு உடல் உதவா, இளமையும்
ஏகா மெய் தோயும்
அமலாய்! அணிபொலி பிறவா நெறியினள்!
ஆடாய் நல்லூசல்!
அமுதே! மரகத மயிலே! மகிழ்வுடன்
ஆடாய் நல்லூசல்! 8

**கமலாதனமிசை** - தாமரை இருக்கையில். **இசை வேதியன்** - பொருந்தியுள்ள பிரமன். **முடி** - சிவபெருமானின் தலை உச்சியையும். **கார் நேர் மெய் நீடு** - மேகம் போன்ற திருமேனி நெடியதாக உள்ளவரும். **கடி ஆர் துளவு அணிஉர** - நறுமணம் மிக்க துளசி மாலையை அணிந்த மார்பை உடையவருமாகிய. **மாயவன்** - திருமால். **அடி** - (இறைவனின்) பாதங்களையும். **விழி நேர் அணை** - கண் எதிரே தோன்றுவீராக. **என** - என்று. **அருட்பாடு இட** - முறையீடு புரிய. அருட்பாடு எனற்பாலது வண்ணம் நோக்கி அருள்பாடு என இயல்பாய் நின்றது. **அருள்** - திருவருள் புரிந்த, காட்சியளித்த. **வீறு ஆர்** - பெருமை மிக்க. **மெய்யோன்** - சத்தியப் பொருளாகிய சிவபெருமான். **வெஃகு** - விரும்புகின்ற. வெஃகு கிளியே என இயையும், தழாஅத் தொடர். **இயமானரொடு** - உயிர்களுக்கு, மூன்றன் உருபு நான்கன் பொருளில் வந்தது. அதாவது பெற்றெடுத்தும், உம்மை விரிக்க. **ஏகா** - நீங்காத. **மெய் தோயும்** - திருமேனியை உடைய. **அமலாய்** - இயல்பாகவே குற்றங்களிலிருந்து நீங்கியவளே. பிறவாநெறியினள் அண்மைவிளி.

தன்னா தானா தனதன தய்யா தானன தன்னான

பொய் மால் மேவா அடியவர் உள் ஆர்
பூரணம் என் ஈடுஇல்
பொன் நேர் தாளாய்! அரதன வில் ஏய்
பூண் அவிர் மெஞ்ஞான

மை மாண் ஆர் பால் அருவியை நல்கு ஏர்
மாடை கொள் கல் மானும்
வல் நேர் தேசோமய இளமைசால்
மா தன அன்னே! ஒல்
கைம் மா நாணா நடைபெறு கிள்ளாய்!
காது அணை கண்ணால் மெய் -
கள் நான் மேவாது அருள்புரி கௌரீ!
கார்நிகர் ஒள் மேனி
அம்மா! பேரூர் பொலி தரு செல்வீ!
ஆடுக பொன்னூசல்!
அம்மான் வாமீ! மரகத வல்லீ!
ஆடுக பொன்னூசல்! 9

**பொய் மால் மேவா** - நிலையற்ற உலகியற் பொருள்களின்மேல் ஆசை கொள்ளாதவர்கள் ஆகிய. **உள் ஆர்** - உள்ளத்தில் நிறைந்துள்ள. **அரதன வில் ஏய் பூண்** - நவரத்தினங்களின் ஒளி பொருந்திய அணிகலன்கள். **மெஞ்ஞான மை** - உண்மை அறிவாகிய திரவம் ஆகிய. **மாண் ஆர் பால் அருவியை** - சிறப்புமிக்க பாலின் மிகுதியை, ஞானப்பாலை என்றபடி. **ஏர்** - அழகிய. **மாடைகொள் கல் மானும்** - பொன் மலையைப் போன்றதும். **தேசோ மய** - ஒளி மிக்க. **மா தன** - பெரிய கொங்கைகளை உடைய. **ஒல் கைம்மா** - கை ஒல்மா என இயைக்க, துதிக்கையை உடைய விலங்கு, யானை. நாணா - வெட்கமடையும்படி. **நடைபெறு** - அழகிய நடையை உடைய. **அணை** - சென்று தொடுகின்ற. நான் மெய்கள் மேவாது என இயையும், அடியேன் பல உடம்புகளில் பொருந்தாமல், பிறவிகள் இன்றி என்றபடி, **கார்** - மேகம். **ஒள்** - அழகிய. **அம்மான் வாமீ** - சிவபெருமானின் இடப்புறத்தைக் கொண்டவளே.

**தனதான தானதன தனதான தானதன தனதான தானதனனா**

கனம் மேவ நீடு அரசமரம் வான் நிலாவு அமரர்
கனிவாய் உள் மூவர் எனவே
களி ஓகையோடு பணிவுறு காலை, நீடும் இலை-
களில் வீழ்அ நீர், மெய் நிலைதான்

மனம் மீது தேர அருளுபு, தீருமாறு, பரன்
வதி பேரை மேவுதிர்களேல்,
மடியாது வாழ்குவிர்கள், உளமீதில் வாய்மை என
மதியீர்களாயின், அவண் மேய்
இனம் ஆனவே பிறவி இலதாகி வாழ் புளியை,
இறவாது நீள் பனையை, நீர்
இரு பார்வையால் அறிய, எமதோடு மேவுமின் என்
இயல் போலும் மேன்மை பொலி சீர்
அனம் மேவு பானல் வயல் அவிர் பேரையூர் இறைவி!
அணி ஊசல் ஆடியருளே!
அருள்வாரி நேர் கண் மரகத நாயகி! மணிசெய்
அணி ஊசல் ஆடியருளே! 10

**கனம் மேவ** - மேகத்தை எட்டும்படி. **நீடு** - உயர்ந்துள்ள. **வான் நிலாவு** - விண்ணகத்தில் உள்ள. **அமரர்** - தேவர்களால். **கனிவாய் உள் மூவர் எனவே** - அன்புடன் நினைக்கப்படுகின்ற பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூவரின் வடிவம் ஆகும் என, அரசமரத்தின் அடிப்பாகம் பிரமனின் வடிவம் என்றும், இடைப்பாகம் திருமால் வடிவம் என்றும், மேற்பாகம் உருத்திரனின் வடிவம் என்றும் கூறப்படும். **களி ஓகையோடு** - மிக்க மகிழ்ச்சியுடன், **ஒரு பொருட்பன்மொழி. பணிவுறுகாலை** - வணங்கும்போது. **நீடும்** - நிறைந்துள்ள. **வீழ் அ** - சொட்டுகின்ற அந்த. **மெய் நிலை தான்** - நிலையாமை ஆகிய உண்மை நடைமுறையை, தான் பகுதிப்பொருள் விகுதி. **மனம் மீது தேர அருளுபு** - உள்ளத்தில் தெளிவடையச்செய்து. **தீருமாறு** - ஐயம் முழுமையாக அகலும்படி. **பரன்** - சிவபெருமான். **வதி** - எழுந்தருளியுள்ள. **மேவுதிர்களேல்** - அடைந்தீர்களானால். **மடியாது** - பயனின்றிச் செத்தொழியாமல். **வாய்மை என** - இந்தக் கருத்து உண்மையானது என்று. **மதியீர்களாயின்** - உணர்ந்து ஏற்றுக் கொள்ளாவிட்டால். **அவண்மேய்** - அங்கு (பேரூரில்) உள்ள. **இனம் ஆன** - அரசமரம் ஆகிய எங்கள் வகுப்பைச் சேர்ந்த. **ஏ அசை** - இறவாப்பனை, பிறவாப்புளி வெளிப்படை. **என் இயல்** - எனச் சொல்லுதல். **அனம் மேவு** - (நன்மை தீமைகளைப் பகுத்து அறிய வல்ல)

அன்னப்பறவைகள் நிறைந்ததும். **பானல்** - குவளைப் பூக்கள் மலர்ந்துள்ளனவும் ஆகிய. **வாரி** - கடல்.

## நூற்பயன்

**தத்த தானன தய்யத் தனனா**

**ஒட்டியே துயர் எய்தப் புரி வீண்**
**உற்ற மாயையை வெல்லச் செயுமே;**
**மட்டுஇல் பூரண வெள்ளச் சுகமேல்**
**வைக்கும் மேன்மைகொள் தெய்வத் துணையே**
**எட்டி வாழ்நிலை நல்கு அற்புதமே;**
**எய்ப்பு இல் பேரையில் வைகு, ஒப்பு இலது ஓர்**
**பட்டி நாயகர் மெய் உற்று இலகு ஓர்**
**பச்சை நாயகி பிள்ளைத் தமிழே.**

**ஒட்டியே** - உயிர்களோடு தொடர்பு கொண்டு. **வீண் உற்ற** - (உயிரின் உய்திக்கு) பயனின்மை பொருந்திய. வெல்லச்செயும் என்றது அழித்துவிடும் என்னும் பொருளில். **மட்டு இல்** - எல்லையற்ற. **பூரண** - முழுமையான. சுகவெள்ளம் என மாறுக, இன்ப மிகுதி. **தெய்வத்துணை ஏ எட்டி** - இறைவனின் உதவியாகிய அருளை அடைந்து, ஏ அசை, பிரிநிலை எனினும் ஆம். **எய்ப்பு இல்** - குறைகள் அற்ற. **மெய் உற்று** - திருமேனியில் ஒருபாதியாகப் பொருந்தி, இனிச் சிவதத்துவத்தோடு பொருந்தியிருந்து என உரைப்பினும் அமையும்.

பிள்ளைத்தமிழ் வெல்லச்செயும்; நல்கும் அற்புதம் ஆகும் எனத் தனித்தனி இயைந்து பொருள் முடிபு ஆகும்.

முற்றும்

# பிற்சேர்க்கை

## சாத்துகவிகள்.

பேரூர்த் தெற்குநந்தவனம், சாமிமடம்
**ஸ்ரீமத் சுந்தர சுவாமிகள்** இயற்றியன.

அறுசீர் விருத்தம்

வெள்ளைப்பங் கயத்தின்மிசை
  வீற்றிருக்கும் மெல்லியலாள் விரைப்பூம் பாதம்
உள்ளப்பங் கயமீது யான்இருத்திச்
  சாத்துகவி யுரைப்பது ஓர்ந்து,
பிள்ளைத்த மிழ்க்கவிக்குப்
  பிள்ளைத்த மிழ்ச்சாத்தே பெரிதுஆம் என்னில்,
அள்ளற்க டற்புவியின் அறிஞர்மிக
  மகிழ் தகைமைத்து ஆகும் அன்றே.

சிரவைநகர்க் குருமுனிவன் அருள்உபதே -
  சம்தனது செவிவாய் ஏற்று,
விரவும்உளம் மிகத்தெளிந்து நிட்டைகூ டத்தகு மெஞ் -
  ஞானம் வாய்ந்தோன்,
கரவுதவிர் நன்மனத்தன் கந்தசா -
  மிப்பெயர்தோய் கவிஞன், அன்னோன்
பரவுபுகழ் அவன் இயற்றும் நூல்களிடை
  மிகவிளங்கும் பரக்கக் காண்மோ.

காயிகம்வா யிகம்மான சீகம்என
  ஆன்றோர்கள் கழறல் இன்னோன்
வாயிகமே மிகதிறத்தன் வாரமொரு முறை
  வெள்ளி வருவோர் தங்கட் -
கேஇகமால் அறத்தனது ஓர் அநுபூதி
  கலந்துகலந்து இசைக்குந் தூயோன்,
சேயின்அடி பதிஉளத் தன், திறற்புலமை
  அமைபவன்எம் செல்வன் றானே.

ஆயிரம் ஆயிரமாகச் சந்தவண்ணம்
வேண்டிடினும் அமைத்தற்கு அஞ்சான்;
மாஇருஞா லத்தில் அவிர் அறிஞர்காள்!
அவன்இயற்றி வருநூல் தன்னில்,
பாயிரம்மாத் திரம்ஒருவன் ஒருமனதாய்ப்
படித்திடின்மெய்ப் பத்தி வாய்க்கும்
ஆயிடில், நூல் முழுமையும்நெஞ் சகத்துஅழுத்தின்
மெஞ்ஞானி ஆவான் நன்றே.

உடல்வகையில் எனக்கிளையன்; உயிரைமதித் -
திடில்சமமே; உணர்வை ஓரில்
திடம்மிகும்ஓர் சற்குரவன்; ஆகையினால்
அடித்துகளைச் சிரமேல் தாங்கில்
படர்பிறவிப் பிணிஅகற்றி அகங்கார
வேர்களையும் பாற்றி, நம்மை
மடமைமலி மாதொருத்தி கருப்பையிடை
ஒருக்காலும் வருத்தா தன்றே.

### கட்டளைக் கலித்துறை

பிள்ளைத் தமிழ்வர் ணனைஅலங் காரம் பெருமிதமாய்
உள்ள வியப்பிக்கும் நான்கு என் உபாயம் உரைப்பரிதுஆம்
விள்ளில் தொடைநயம் மோனை எதுகை மிகவியப்பாம்
கள்ளில் களிக்கும் மதுகரத் தின்செயல் காட்டிடுமே.

பத்து என் பருவம் ஒருமகட் கேசுட்டிப் பாடும்அதன்
சத்துஎன்என்று ஓரில் உலகோர்தம் மக்கள் தமைவளர்ப்பது
ஒத்தே இருப்பினும் வேற்றுமை மிக்கவும் உண்டுண்டுஎன்பேன்
பித்தே பிறவிப் பிணிக்குவித் தேஅது பின்ஒன் றரோ.

சத்தித் திறலை மிகவே அளித்துச் சகத்தினர்க்கு ஆம்
சித்திப் பெருக்கைத் திருவோடு அளித்துத் திரும்புதலில்
முத்திச் சுகத்தையும் ஈயும்என் றேபெரு மூதறிவோர்
எத்திக் கினும்பகர் வார்இவண் யான்சொலல்ஏற்றமன்றே.

### வண்ணம்

தந்த தானதன தய்யத் தனனா

சந்த நாவலர்கள் கொள்ளத் தகும்மா
    சம்ப்ர தாயம்மிக உள்ளில் பொதிசீர்
பந்த பாசம்அற வெள்ளித் தகைசால்
    பண்பை யேவளர நல்கித் திரமாய்
எந்த நாளும்வளம் எய்திக் களிகூர்
    இன்ப வாரியினில் எய்துற் றிடவே
கந்த நாதன்அடி உய்கைக்கு எனஓர்
    கந்த சாமிபகர் பிள்ளைத் தமிழே.

திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம்
ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் மாணுக்கரும் குமாரருமான
**தி. மு. செந்தினுயகம் பிள்ளையவர்கள்** இயற்றியன.

### வண்ணக்கவி

தய்யத் தனத்ததன தந்ததான தனனா.

செல்வப்பெருக்கும்உயர் கல்விச்சிறப்பும்வளர்
    தெய்வப்பிடிப்பும்உல கின்கண்வாழும்அடியார்
செவ்வைப்படத்தரும்ஓர் வள்ளல்தகைப்பரமர்
    செல்லிற்கறுத்தகள நம்பர்கோமுனியொடே

நல்வர்த்தனைத்தவசு புல்லுற்றபட்டிமுனி
    நைவற்றுஉயப்பொன்அரசு ஒன்றுகாவினிடையே
நவ்வித்துணைக்கண்உமை வவ்வுற்றிடச்செய்நடம்
    நவ்வல்புவிக்கண்நரர் கண்டபேரையிடம்வாழ்

மல்வற்றல்அற்றவருள் கொள்பச்சுடல்பரைதன்
    மல்லல்ப்புகழ்தொகை அமைந்தபேழைஎனவே
வல்விற்பனக்குழுவின் பிள்ளைத்தமிழ்ப்பனுவல்
    வள்ளைச்செவிக்குஇனிமை பொங்கஓதினன்அரோ

வெல்வச்சிரக்கைஅரி வைகுஅற்பசொர்க்கசுகம்
    வெஃகற்குஇணக்கம்அறு சிந்தைமேவுதுறவோன்
வெள்ளப்புனல்ப்பொதியை ஐபொற்சபைச்சிரவை
    மெய்யற்புதச்சுதன்ஓர் கந்தசாமிமுனியே.

### கட்டளைக்கலித்துறை.

பொற்பதக் கம்தந்துஒர் பிள்ளைத் தமிழ்கொள் புகழ்ச் செந்திலான்
அற்புஅமை தாய்எனும் பேரைஇப் பேரையில் ஆக்க,உமை
சொல்படர் சீர்ச்சிர வைக்கந்த சாமிதன் சிந் தையில்தன்
பொற்பதக் கம்பொருந் தச்செய்துஒன்று ஏற்றி டல் போதநன்றே.

### வெண்பா.

நல்பேரை மேவுபச்சை நாயகிபிள் ளைத்தமிழ்ஆம்
சொல்பேரைச் சூடுந் துதிப்பனுவல்- கற்புஏறு
சிந்தையொடு கற்போர் செவிஏற்போர் சிந்திப்போர்
நிந்தைஇல்பேறு எய்தல்மெய்சொன் னேன்.

### எழுசீர் விருத்தம்.

இச்சைநா யகிகண் மாலையும் அறநீத்து
இலங்கும்மெய்த் துறவரும் விரும்பப்
பச்சைநா யகிதன் மாலைஎன்று ஒருநல்
பனுவல்நூல் அருந்தமிழ்ப் பாவால்,
கொச்சைநா அகிநேர் குணத்தினர் அறியாக்
கொழும்சுவை உறச்சொனான் வேதா
விச்சைநா யகிகண் அருள்கொடு சிரவை
மிளிர்கந்த சாமிமா தவனே.

### வெண்பா.

நார்ஊர் உளப்பச்சை நாயகிபிள் ளைத்தமிழ்பாத்
தார்ஊர் நூல் மெய்ப்புத் தகம்ஆக்கிப் - பேரூரின்
வாய்அரங்கம் ஏற்றி மணக்கச்செய்து இன்பு அடைந்தாள்
தாய்அரங்க நாயகியார் தாம்.

மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவரும், கோவை அரசியலார்
கல்லூரித் தமிழ்த் தலைமை ஆசிரியருமாகிய
**சைவத்திருவாளர் அ. கந்தசாமிப் பிள்ளையவர்கள்**
இயற்றியன.

**அறுசீர் விருத்தம்**

பாடல்சால் சிறப்பில்பொன்னி பவானிஆன் பொருநைபாய
கோடல்சால் குறிஞ்சிஆதி நால்திணை வளம்குலாவி
ஆடல்சால் விடைஎம்அண்ணல் அமர் தலம் பலவும்ஆகி
நாடல்சால் திறத்துநாடா வளத்தது கொங்குநாடு.

**கலித்துறை**

விண்பு குந்திடு வியன்சினைத் தருக்குலம் இடைந்து
கண்ம லர்ந்தபன் மலர்தரு நந்தனம் கவைஇத்
திண்ம லர்ந்தஇந் நாட்டினுக்கு அணிஎனத் திகழும்
வண்ம லர்ந்தசீர்ச் சிரவண புரத்தினின் மடமே.

எந்தை எம்பிரான் முருகவேள் இணையடி வழுவாச்
சிந்தை அன்பர்கள் மோனமும் தியானமும் சிறந்து
மைந்தர் பல்லவர் பலவகைப் பணிவிடை வகுப்ப
முந்து மாதவம் புரிவது மடங்களின் முதற்றுஆல்.

கந்த சாமிநா மத்தவக் கடவுள், கண் காண
வந்த சாமிஎன்று அருந்தவர் வணங்குறும் மாண்போன்,
இந்த மாமடா லயத்திருக் குரவனாய் இலங்கிப்
பைந்த மிழ்க்கவிப் பனுவல்கள் உலகுஉயப் பயந்தோன்.

தன்னை ஒப்புஇலாப் பேரையில் தண்ணளி கொழிக்கும்
அன்னை என்னைஆள் பச்சைநா யகிமல ரடிக்குச்
சொல்ந யம்பொருள் நயஞ்செறி பனுவல்கள் தொடுத் தான்
என் அனோர்களும் உய்திகூ டுதல்இனி எளிதே.

கோயமுத்தூர் தமிழ்ப் பண்டிதர்

**திருவாளர் C.S. சொக்கலிங்கம் பிள்ளையவர்கள்**

இயற்றியன.

**ஆசிரிய விருத்தம்**

நாடாத வளமுடைய நன்னாடுஆம்
மீகொங்கில் நலம்சேர் காஞ்சிப்,
பீடுஆரும் தென்கரைவாய்ப் பிறங்குதிருப்
பேரூரில் பெட்பி னேடும்,
வாடாமல் உலகுஉயிர்கள் உயஎண்ணிப்
போதி வைப்பில் வதிவோன், மாலும்,
தோடுஆரும் மறைஅயனும் துரு வியும்காண்பு
அரியன்பட்டீ சுரன்றன் பாகம்.

மருவிவளர் பச்சைநாய கியம்மை
மாண்புமிகு மலர்ப்பாதத்தில்
உருகும்அன்போடு ஒருபிள்ளைத்
தமிழ்எனும்ஒண் பிரபந்தம் ஓதிச் சாத்தி,
வருபிறப்பின் பயன்அடைந்தான்
சிரவணம்சார் கௌமார மடால யத்துக்
குருமணியாம் கந்தசுவா மிச்சாமி
கோதில்புகழ் குலவ மாதோ.

**நேரிசை வெண்பா.**

பச்சைவல்லித் தாயாரின் பாதமலர் மேற்கொண்ட
இச்சையினால் பாமாலை யாத்ததனை - மெச்சுஅன்பர்
தந்து புகழ்கொண்டான் சாமிகந்த சாமிதமிழ்ச்
சந்தைபயில் தாலுத் தவன்.

**கட்டளைக்கலித்துறை.**

அலைபுனற் காஞ்சி அகன்கரை மேவும் அரசவையில்
புலிஉரி பூண்டிடு புங்கவன் வாமம் புரிந்து அமரும்
பலமிகும் அம்மைதன் பாதாம் புயத்துப் பரிவுமிக
நலதமிழ் மாலைசொற் ருன்கந்த சாமிஎன் நல்தவனே.

கோயமுத்தூர்
அரசினர் கல்லூரித் தமிழ்ப்பண்டிதர்
**திருவாளர் S. ஐயாசாமிப் பிள்ளையவர்கள்** இயற்றியன.

**அறுசீர் விருத்தம்**

நீடுபுகழ்ப் பேரைக்கே வளர்பச்சை
நாயகிபால் நிறையும் அன்பால்,
நாடுபுகழ்ப் பாமாலை யொடுபிள்ளைத்
தமிழ் ஒன்றும் நயந்து உரைத்தார்
கூடுபுகழ் ஓங்குசிர வணபுரக்
கௌமாரமடம் குலவு சைவம்
தேடுபுகழ் நாவலவர் கந்தசாமிப்
பெரியார் தெளிவின் அம்மா.

பவாநி போர்டு உயர்தரப் பாடசாலைத் தமிழாசிரியர்
உயர்சைவத்திருவாளர்
**கு. குமாரசாமிப் பிள்ளையவர்கள்** இயற்றியன

**எழுசீர் ஆசிரிய விருத்தம்**

காஞ்சிவாய்ப் பேரூர்க் கண்உறை அமலை
கருணைமே வியபரை கனிந்த
தீம்சுவைக் கனிவாய் மொழிஉமை பட்டிச்
சிவபிரான் பங்கினிற் றிகழ்வாள்
ஆம்சிவைக்கு இனிய அழகிய
பிள்ளைக் கவிதையும் மாலையும் அணிந்தான்
நாம்சுவைத்து அறிய; அன்னவன் யாரேல்
நவிற்றுவன் இனிமையொடு யானே.

அருமறைச் சிரத்தும் அன்பர்தம் உளத்தும்
அணிமயில் புறத்தும்விட்டு அகலான்
கருமுறைப் பிறவிக் கடலில்நின்று ஏறக்
கடையனைக் கருணையால் ஆண்ட,
மருஉறை கடப்ப மலர்அணி குகேசன்
மலரடி பணிபவன் மாதைக்
குருபரன் முருக தாசன்நன் மரபில்
கொட்பொடுந் தோன்றிய குணவான்.

சிரவண புரத்துத் திகழ் தவ சீலச்
செம்மல்ரா மானந்த தேவன்,
தரவண தவத்தின் கோலமே பூண்டோன்
தண் தமிழ் நூல்பல கற்றுச்
சரவண பவற்குப் பற்பல நூல்கள்
சாற்றிஞேன் கந்தசா மிப்பேர்,
வரதவெண் நீற்றுக் கவசமும் அக்க
மணியுமே திகழும்மார் பினன்ஆல்.

பேச்செலாம் கவிதை என்னலாம், அன்றிப்
பேசிட எடுத்திடு நாவின்
வீச்சுஎலாம் கவிதை, விழிப்புஎலாம் கவிதை,
வியப்பொடு விடுத்திடும் ஒவ்வோர்
மூச்சுஎலாம் கவிதை, முன்னுவ கவிதை,
முறைமையொடு இவ்எலாம் கவிதை -
யாச்சொலா நின்ற அவ்அணல் பெருமை
யாவரே பகர்ந்திடற் பாலார்?

மருதாசலப் பிள்ளைத்தமிழ், மருதீசர் நவரச வண்ணத்திருப்புகழ், ஓதிமலைப் பிரபந்தங்கள், சென்னிமலைப் பிரபந்தங்கள், சிவமலைப் பிரபந்தங்கள், சசிகாந்தன் - நாவல். வேளாள புராண வசனம், புலமை நூல், அகத்தியர் தமிழ் வாசகம், இந்திய பத்திரிக்கைத் தொழிலியல் முதலிய நூல்களின் ஆசிரியர் கோயமுத்தூர் - விளாங்குறிச்சி
**வி.நா. மருதாசலக் கவுண்டர்** இயற்றியன.

**வெண்பா**

குராமால்நந் தத்தமிழால் கோதுஅறுபிள் ளைப்பாட்டு
இராமானந் தக்குருதாட்கு ஏற்றிப் - பரானந்தி
பாக்குஒழித்த கொங்கைநங்கை பட்டித் தலத்துதிப்
பாக்கொழித்து னன்சிரம்வைப் பாம்.

அன்னவன்எண் சந்தவண்ணம் ஆசுமுதல் நாற்கவியும்
சொன்னகந்த சாமி துறைத்தமிழ்நூல் - மன்அறிஞன்
முல்லை யிடைக்குறையும் குல்தொடர்ந்த அன்மொழியும்
தொல்லை எனத்துறந் தோன்.

தித்திப்பி லும்தெவிட்டாச் செந்தமிழ்இன் பச்செழும்தேன்
சத்திபத்தி சித்துவித்து சான்றிடு, விற் - பத்திவெற்பு
மட்டுஈ சுரிகுழலி மாதவத்தோர் போதவத்தோர்
பட்டீ சுரிபிள்ளைப் பாட்டு.

பிள்ளைத் தமிழ், மாலை பேர்உலகோர் ஏத்திஉய்வான்
விள்ளுகந்த சாமிஉயர் மெய்ஞ்ஞானி - கள்அமர்பூ
நந்தனம்சூழ் ஆமாத்தூர் ஞானகொலு வீற்றருளும்
எந்தைஅருள் சேய்அருள்சே யே.

வெண்பாப் புலியருடன் வீறும் புலிப்புலியர்
ஒண்பாப் பெதும்பைபா டும்புலியர் - எண்பாயும்
சந்தவண்ண வான்புலியர் தாமும் வணங்குபுலி
கந்தசா மிக்கவிக்கோன் காண்.

செந்தமிழ்முன் ஆரியம்பின் தேர்ந்துமலை யாளநடுக்
கந்தசா மித்தவசி கட்டுதமிழ் - சந்ததமும்
பாடிப் பரிந்துபச்சை நாயகித்தாய் அன்பருளும்;
கூடிமிக வாழிதொண்டர் கும்பு.

மாதவரா மானந்த வள்ளல்அடித் தொண்டு ஒன்றால்
காதலித்த பேரின்பங் கைவரப்பெற்று - ஈதல்இசை
நாட்டினள்கெள மாரிரங்க நாயகிதாய் பேரையம்பாள்
பாட்டுஇனங்கள் அச்சில் பதித்து.

ஸ்ரீலஸ்ரீ இராமானந்த சுவாமிகள் மாணுக்கரும்
ஸ்ரீதண்டபாணிமூர்த்தி ஆலயப் பூசையினருமான
**ஸ்ரீ சின்னசாமி சுவாமிகள்** இயற்றியது.

**இரட்டையாசிரிய விருத்தம்**

சதுர்மறைக ளுடன்ஆக மத்தொகுதி யாவும்உணர்
தக்கமே லவர்வாழ்வ தாம்
சகலகே வலம்அற்ற சாசுவத மெய்முத்தி
தானமாத் தருபேரைவாழ்

விதுவுடைய சடிலப் பிரான்பட்டி நாயகர்
விரும்பிடப் பால்அமர்ந்த
வியஞர்ச வுந்தரியம் மிகஉந்து பைங்கதிர்
விரிக்கும்மணி மேனிஇன்ப
மதுமலர்த் தாள்பச்சை நாயகிநன் மாலேயொடு
மருவு'பிள் ஊத்தமிழுமே
மகரநிறை வாவிபல மல்கிஉள சோலேகொள்
மகத்துவச் சிரவைமன்றில்
பொதுநெறிக் கவுமார குருஇரா மானந்த
புனிதகுரு அருள்பொருந்தும்
புத்தமுதம் நிகர்கந்த சாமிமே லோன்சொஞன்
போற்றுநற்கு அருள்பெருகவே.

ஸ்ரீலஸ்ரீ இராமானந்த சுவாமிகள் மாணக்கரும்
சபாலயப் பூசைப் பணியினருமான
**ஸ்ரீ ரங்கமுத்து ஐயா அவர்கள்** இயற்றியது.

**வண்ணக்கவி.**

தனதான தந்ததானன தனதாஞதந்ததனன தனதான.

பதியானகும்பமாமுனி கலேராமானந்தபரம குருதாள்கள்
பதிவானகந்தசாமிமெய் உணர்வேதோய் துங்கன்எமது தபபானு
மதிஆறு கொன்றைவேணியர் வளர்பேரூர்தங்குமரகத மெய்நாமம்
வளர்தேவிமுன்புஇமாசல மிசையோர்சேய்என்றுபுரியும் விளேயாடல்
விதியானஇன்பம்நீடுத மிழும்வான்ஆர்உம்பர்அமிழ்தில் இனிதாகும்
வியன்மாலேயும்சொனான்;இவை தமைஏடாய்அன்பர்துதிசெய் திடுமா
புதிதானபொன்கொடேபுரி தவமார்தாய்எங்கள்அனேகொள் குரு
புகல்ஆர்அரங்கநாயகி இசைவார் பேரின்பநிலேமை கொடுவாழி.

இந்நூலாசிரியர் மாணுக்கர் புஷ்பப் பணிவிடை

**குமாரசாமி ஐயா** இயற்றியன.

**இரட்டையாசிரிய விருத்தம்**

அரன்அனேயகுறுமுனிவன் அமிசராமானந்தன்
அற்புதத் திருவருளிஞல்
அரியசெந்தமிழ்வாரி முழுதும்உண்டுஉமிழ்வதுஎன
அவனிமிசை அளவுஇலாத
திரம்உடையபக்தமான் மியம்முதற்பெருமைமலி
சிலதலபு ராணங்க ளும்
திருவளத்தோத்திரத் திரள்களும்செய்து அன்பர்
சிந்தனேயுள் இன்புதேக்கிச்
சிரவையினின்மருவியெனது இருவினேயும் அறவருள்செய்
தேசிகக் கந்தமூர்த்தி
தேவர்புகழ்பேரையூர்ப் பச்சைநாயகியம்மை
திருவுளங் களிசிறப் பத்
தரம்உற்றுஇசைந் தபிள் ளேத்தமிழும்மாலேயும்
தயவோடு தந்தருளி ஞன்;
தவம்நமக்குஎன்றுஇதைத் தாங்கிப்படித்தவர்கள்
சத்தியக் கதிபெறுவ ரே.

**எழுசீர் விருத்தம்**

சிரவையி ராமா னந்ததே சிகன்தாள்
சிந்தனே செய்திடும் நலத்தால்,
திரம்உறு பிரமச் சாரியாம் விரதச்
சிறப்பொடு மடத்தினில் திகழ்ந்து,
கரவறும் அடியர் தாய்எனச் செப்பக்
கனிவொடும் அவர்பணி புரிந்தே,
வரம்பெறு தன்மை வாய்ந்துஅவிர் அம்மை
மகிமைஎன் அளவினது ஆமோ?

அரியஇந் நூலை உரியதன் பெருள் ஈந்து
அச்சிலிட்டு அன்பி னர்க்கு உதவி,
பெரியமெய்ப் பொருள்செட் டிச்சிமா
தவம் தோய் பெற்றியை நாடிடிற் பூர்வத்து
உரிமையின் முருக நாமமே மறவாது
உருச்செபித்து உய்ந்ததாப் பகர்சீர்
சரிஎன லாம்இவ் அரங்கநா -
யகியாம் தாயினை; என்றும் வாழி.

சிரவணபுரம் கௌமாரசபை அடியவரிலொருவராகிய
விளாங்குறிச்சிப் பெரியதோட்டம்
**திருவாளர் சுப்பண கவுண்டரவர்கள்** இயற்றியது.

அறுசீர் விருத்தம்

சீர்ஓங்கு கொங்குநாட் டின்முகம்நேர்
பேரைதனில் சிறந்து மல்கும்,
பார்ஓங்க அருள்மலியும் பட்டிலிங்கர்
பதிக மும்தன் பாகத்து உள்ள,
பேர்ஓங்கு மரகதவல் லியின்பிள் ளைக்
கவி,மாலை பேசி விண்டான்-
நார்ஓங்க அவதரித்த
நம் குருக்கந் தானந்த நல்லோன் ருனே.

கோயிற்பாளையம்
**ஸ்ரீமத் எறிபத்த சுவாமிகள்** இயற்றியது.

**எண்சீர் ஆசிரிய விருத்தம்.**

பூவர்க்கத்து உயர்ந்தகஞ்சப் பூவே போலப்
புவியில்உயர் திருப்பேரூர் மன்னி வாழும்
தேவர்க்கத் துஉயர்பரன்பட்டீசன் வாமத்
தேவிபச்சை நாயகிமேற் செய்ய தாய
பாவர்க்க[illegible] உயர்பிள்ளைத் தமிழ்ப்பா மாலை
பகர்ந்தனன்-எற்கு அருந்துணையாய்ப் பாரில் வந்தோன்,
யாவர்க்கும் இனியபுகழ்க் க[illegible]தசாமி
எனும்பெரியன் சந்த[illegible]ண்ணம் இசைவல் லோனே.

இந்நூலாசிரியர் மாணுக்கர் சிரவணம்பட்டி
**தம்பி என்கிற மருதாசல ஐயா** இயற்றியன.

**எண்சீர் விருத்தம்**

மலய மால்வரை வீற்றிருந்து இளமை
வந்த செந்தமிழ் மானிடர்க்கு அருளும்,
கலய மாமுனி யாம்இராமானந் -
தப்பிரான்வழித் தோன்றலாக்கவின்றே,
உலகில் நல்லவாம் நெறிஎலாம் ஓங்க
ஒயில் குலாம்சிர வையிலெழுந்தருளி,
இலகு கந்தசா மிக்குருமணிதான்
இசைத்த நூல்இனம் பற்பல பலவே.

அன்ன வற்றுள்மே லைச்சிதம்பரம்வாழ்
அம்மை பச்சைநா யகிபிள்ளைத்தமிழும்,
நன்னலம்பொலி மாலையும் இந்நாள்
நற் பொருள்செல விட்டுஅச்சில்ஏற்றிப்,
பல்நலத்துஅடி யர்கொளஅளித்த
பான்மைத் தாய்ரங்க நாயகியம்மை,
இந்நிலத்தின்உள்ளநாள்அளவும் ஏய்ந்த
மெய்ப்புகழ்க்கு எல்லைஒன்றுஇன்று இன்றே.

கௌமாரமடாலயச் சபை அடியவர்களில் ஒருவராகிய
கணவாய்ப்பாளையம்
**வைத்தியம் இராமசாமி ஐயா** இயற்றியன.

**அறுசீர் விருத்தம்.**

சிரவைக்கௌ மாரமன்றத் தேசிக னுக்குஅன்புஆர்ந்த
சுரர்புகழ் கந்தசாமித் தூயவன் பேரூர்ப்பச்சை
மரகத வல்லித்தாய்க்கு மாபிள்ளைத் தமிழும்மாலை
சரபவண் ணத்தாத்தன்போற் சாற்றினன் அன்பினுலே.

**நேரிசை வெண்பா**

பேரூர்வா ழம்பிகையின் பிள்ளைத் தமிழ்ஸமாலை
பாரூர்ஊர் தோறும்அன்பர் பாடிஉய்யச் - சீர்ஊகி
தாய்அரங்க நாயகியார் தம்கைப்பொன் கொண்டுஅச்சிட்டு
ஏய்அரங்கம் ஏற்றல்இன்ப மே.

இந்நூலாசிரியர் மாணுக்கர் சிரவணம்பட்டி
**பாப்பையா என்கிற மருதாசல ஐயா** இயற்றியன.

**எழுசீர் விருத்தம்**

மங்களப்பொதியை வரைமுனிகலேயாய்
வந்தராமானந்தக் குருகண்
பொங்கருள்உததி முங்கித்தேக்கெடுத்துப்
பொங்கல்இல் கொங்கின்பாக் கியம்ஆம்,
செங்குணப்பத்தர் மான்மியம் முதலாம்
தெம்பமை நூல்பல பொழிந்தான்
எம்குருகந்த சாமிப்பேர்வள்ளல்
எண்திசைபரப்புசீர்த் தபனன்.

இச்சைஇல்லவரும் இச்சைகொள்பேரை
இறையிடம் பொலிபெருங்கருணேப்
பச்சைநாயகிஎன் அம்மைபொன் நளினப்
பதத்தினுக்குஅரும்பிள்ளேத் தமிழும்,
இச்சையரேனும்உரைக்கில்உள்உருக்கும்
மிகுசுவையலங்கலும் புனேந்தான்-
செச்சை யன்அமிசன் கந்தசாமிப்பேர்த்
தேசிகன்தேசு அவிர் தவனே.

கொள்ளேநூல்ரசத்தைப் பிழிந்துமெஞ்ஞானக்
கூட்டு டன்கலந்ததுஎன்று இசைக்கும்,
பிள்ளேப்பா,அலங்கல் எனும்இவை அன்பின்
பெருக்கினுல்சந்ததம் உரைக்கில்
சள்ளே முற்றுஅகலும், மதிநிதிபெருகும்,
சாம்பவி பதத்து அன்பு வளரும்,
பிள்ளேயென்றுஅன்னே ஏந்திப்பால்அருத்தாப்
பேரின்பவாழ்வும்வந்து உறுமே.

இந்தநூல்அச்சிட்டு அன்பினர்க்குஉதவி
இசைஅமைந்திட்டது ஆர் என்னில்,
செந்தகைராமா னந்தமா முனிவன்
திருவருட் செல்வியாய் அவன் தாள்

சந்ததம்ஏத்தும் துறவியாய் மடத்தில்
தவத்தர் தொண்டாற்றிவாழ்ந் திருக்கும்
முந்துஉறுபவத்தில் முருகம்மைத் திருப்பேர்
மொய்ம்பளாம் அரங்கநா யகியே.

மதனன்ஐங் கணைகள் தைத்திடாமனத்தள்
மாட்சிமைக் குருபதம் அன்றிச்
சதம்ஒன்றும்உலகில் இன்றுஎனஅறியுந்
தவப் பெருக்குஓங்கிடும் பெரியள்,
மதலையில்எமையும் மதித்துஅன்பு மொழிசொல்
வாஞ்சையள் தாய்என வுரைக்கும்
இதம்உளரங்க நாயகியம்மை
இசைதழைத்துஎன்றென்றும் வாழி.

கோ.தா. செட்டிபாளையம் திருவாளர். ரா. நஞ்சப்ப கவுண்டர் குமாரரும் நால்வகைத் தோற்றத்தார் நன்மகாநாடு (அல்லது) கொலைமறுத்தல், கந்தன் சித்திரபந்தனமாலை, கந்தன் வெண்பா மாலை, ஈச்சநாரி விநாயகர் வருக்கவெண்பா அந்தாதி, ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் உபதேச வெண்பாமாலை முதலிய நூலாசிரியருமாகிய

**திருமிகு. R.N. கல்யாணசுந்தர கவுண்டரவர்கள் இயற்றின.**

**அறுசீர் விருத்தம்**

கொங்குமலி காஞ்சிநதி சூழ்பேரூர்ப்
பட்டீசக் கூத்தன் வாமப்
பங்குமலிந்து இன்பநலம் வேண்டுவார்
வேண்டியவாறு அளிக்கும் பச்சை
தங்கும்மர கதவல்லி தாள்இணையில்
சிரவை யோன் சாத்திஏத்தும்,
துங்கம்மலி சீர்பிள்ளைத் தமிழ்,மாலைப்
பொருள்கடலாய்த் துலங்கும் மாதோ.

மாதைநகர் வாழ்முருக தாசன்உப -
தேசமொழி மாரு மெய்யன்,
பேதையருக்கு ஓதியருள் சீராமா -
னந்தகுருப் பெரியோன் தானே,

வாதையுறும் இருவினைக்கும் மாமருந்தாய்ச்
சேவித்தோன் மாலின் றெண்டர்
காதைபல தலச்சரிதம் முதல்அனந்த
தமிழ்ப்பனுவல் கவிசொல் வோனே.

தெண்திரைசூழ் உலகத்தே ஜீவகொலை
தீர்க்கஎனச் செய்நோன்பு உள்ளோன்,
அண்டினர்கள் வீடுஅடைய நெறிகாட்டும்
ஆற்றல்உளோன், அறிவின் மிக்கோன்
எண்திசையும் புகழ் சிரவைக்
கௌமார சபைத் தலைமை ஏற்றமேலோன்,
கண்டிகையும் திருநீறும் புனை கந்த
சாமிதவக் காவலோனே.

கோவை வைத்தியம் ஜோதிடம்
**M. சுப்பிரமணிய செட்டியார் இயற்றியன.**

**எழுசீர் விருத்தம்**

பரவைதன் கேள்வன் பண்ணிசை பாடிப்
பரவுபு பணிந்திடப் பேரூர்,
வரப்பர மேசன் மகிதலத்து யாரும்
மனத்தினுல் கணித்திடாது இயலும்
கரவுஅமை உருவப் பள்ளனாய் வந்த
கண்ணுதல் பிறைச்சடை முடியான்,
சிரசினிற் கங்கை தரித்தவன் இடப்பால்
சிற்சத்தி பச்சைநா யகிக்கே.

பிள்ளைதன் கவியாம் பிரபந்தம் ஒன்றும்
பேசுசீர்ப் பாமாலைஒன்றும்
உள்ளுற உணர்வோர்க்கு உவப்புமிக் குறவே
உரைத்தனன் சிரவையில் மருவும்
தெள்ளுசா ஸ்ரீராமா நந்தசற் குரவன்
திருவடி கருதிய மனத்தன்
கள்ளஆர் கவிஞர்க்கு ஏறு போல் பவனும்
கந்தசா மிப்பெயர்த் தவனே.

*சிரவணபுரம் கௌமார சபை அடியவரிலொருவராகிய*
*கணவாய்ப்பாளையம்*
**M. சின்னப்ப செட்டியார் இயற்றியன**

**அறுசீர் விருத்தம்**

காலவன் காமதேனு கலைமிகு வியாசனுதி
சீலமா முனிவர்பல்லோர் சிறந்தபூ சனைகள்ஆற்றி
மேலஆம் பேறுபெற்ற மேன்மைசேர் பட்டியீசன் -
பால்அரை மேனிகொண்ட பச்சைநா யகிதனக்கே

கண்டொடு தேனும்பா லுங் கலந்த்துஎன் சொற்களாலே
விண்டனன் பிள்ளைநூலும் வியன்மிகு மாலைஒன்றும்
அண்டரும் மெச்சுசீர்சால் அணிபொழில்ச் சிரவைவாழும்
பண்டிதன் கந்தசாமிப் பரமசற் குரவன்அம்மா.

அருள்நிறை சிரவைவாழும் அரங்கநா யகிதா யம்மை
திருமிக உடையாள்இந் நூல் செகதலத் தவர்கள் தேரப்
பொருள்மிக வழங்கிஅச்சில் பொறித்துப்புத் தகமாச் செய்து
குருபரன்அருளைப் பெற்ருள் கோதுஇலாள் என்முன்னுளே.

தேவராயபுரம் ந. இராமசாமிக் கவுண்டர் குமாரர்

**ரா. இராமசாமிக் கவுண்டர் இயற்றியன.**

**எண்சீர்ச் வண்ணவிருத்தம்**
*தந்ததன தந்ததன தந்த தான.*

சந்தமிகு வண்கவிபெய் தண்டபாணி
சந்ததம் உவந்தருள்செய் விந்தையாலே
தந்தசிவ கும்பமுனி எந்தைராமா -
னந்தன்அருள் அன்புதவ மைந்தன்ஆவார்
கந்தமுனி யென்றுவளர் எங்கள்சோதி
கந்தமலர் சிந்துமது உந்திஒடும்
நந்தனவி யன்சிரவை யின்கண்மேவி
நம்தமிழில் இன்கவிஇ யம்பினுரே.

### வெண்பா

உள்ளத்து உறுபத்தி ஓங்குபச்சை நாயகிமேல்
பிள்ளைக் கவிஒன்று பேசினன் - விள்ளுதமிழ்ச்
சிந்துமறை நாவான் சிரவைக்கௌ மாரச்சீர்க்
கந்தமுனி பாதம் கதி.

### கலிவிருத்தம்

தரங்க நேர்அருள் தாய்பச்சை நாயகி
வரங்க ளேதர வாழ்த்துபிள் ளைக்கவி
அரங்கம் ஏறிட அம்பொரு ளேதரும்
அரங்க நாயகி யார்பணி சீரிதே.

கணபதி பிராஞ்சு போஸ்ட் மாஸ்டர்
**R. திருமலை அய்யங்கார் இயற்றியன.**

### கட்டளைக் கலித்துறை

சீர்தந்த செந்தா மரையின் றிருசேர் சிரவணன்வெண்
வார்தந்த மாவின் வலிஅடர்த் தான்றன் வயங்கு இதயத்
தேர்தந்த மீட்டுக் கினிதெனு மன்பர்க் கடக்கமென்றே
ஓர்தந்து அறிந்த ஒருகந்த சாமி உயர்தவனே.

### அறுசீராசிரிய விருத்தம்

உயமால்அன் பர்சரிதம் ஓர்ஏழ்ஆ -
யிரம்கவியால் உம்பர் போற்ற,
நயம்கொளும்செம் பாகமதாய் நல்சந்த
மும்கலந்து நவின்ற மேலோன்,
வயணவமா மதத்துஆழ்வார் எவரேனும்
இத்துணைப்பா வகுத்தி லாரால்,
கயக்குஒழிமா முனிவரன்ஆம் கந்தசுவா -
மியைஅவர்மேற் கழற லாமே.

ஆகுபிர பந்தவகை அத்தனையும்
அறைந்திட்டும் அடியார் உய்ய,
வாகுபுகர் வாரம்எலாம் மாதவன்மா -
தேவன்சேய் வகை யோர் காதை,

ஏகும்அளவு இனிதுஇயம்பி எண்ணிலமா
நலம்புரியும் ஏந்தல் ஆவான்
நாகுவரி வண்டுஉணும்பூஞ் சோலைசிர -
வைப்பதிநா வீரன் ஆமே.

நேரிசை வெண்பா

தேர்ஊர்வான் தென்றல் செயித்தகந்த சாமிசசி
ஆர்ஊர்வான் செஞ்சடிலன் ஆட்டுஉகந்த - பேரூர்வாழ்
பச்சையம்மன் பிள்ளைத் தமிழ்மாலை பாடியிட்டான்
இச்சகத்தார் ஏத்திஉய்தற் கே.

சாத்துகவிகள் முற்றுப்பெற்றன.

